

# கல்கி

KALKI 29.2.2004 ரூ.6.00



2 புத்தகங்கள்

மினி கல்கி
மகாமக மகிமை!

இதுதாண்டா
பிரசாரம்!
-புறப்படும் புயல்!



CHAIRS
Rs.1000/- onwards
COMPUTER TABLES
Rs.1000/- onwards
ALMIRAHS
Rs.3000/- onwards
FILING CABINETS
Rs.3000/- onwards
SOFA SETS
Rs.7,500/- onwards
One Stop Shop for all your Furniture Needs
Sathya
Furniture World
Since 1968
Specialists in Custom Made Furniture
Mylapore :
24982930 / 24982931
Padi ( Anna Nagar West ) :
26544929 / 26545029
Velachery :
22551129
Coimbatore :
2452929 / 2452930
One of India's Biggest Furniture Showroom
Mylapore : Sathya Corporation, Old #70, R H Road, Ch - 4.
Padi (Anna Nagar) : DABC Bldg., 6, MTH Rd. (Opp.to TVS, Padi), Ch - 50.
Velachery : Paramount Park, 358, Velachery - Tambaram Main Road, ( Next to Vijayanagar Bus Terminus ), Ch - 42.
Coimbatore : 266, Mettupalayam Road, (Near Sai Baba Temple Bus Stop) Cbe - 43
KITCHEN CABINETS
Rs.25,000/- onwards
BEDROOM FURNITURE
Rs.15,000/- onwards
DINING SETS
Rs.2,300/- onwards
WORKSTATIONS
Rs.20,000/- onwards
CUPBOARDS
Rs.3,000/- onwards
Also Available
Institutional Furniture
Slotted Angle Racks
Hospital Furniture
Entertainment Sets
Recliner Chairs
Study Desks
Wardrobes
Diwans
OFFICE TABLES
Rs.2,000/- onwards

மகாமகச்
சிறப்பிதழ் கட்டுரைகள்,
படங்கள் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**தெய்வத் தமிழ் நாட்டினிலே**
**ஹலோ நீங்க சுகமா?**
**சிரித்து வாழவேண்டும்!**

அடுத்த வாரம்



**கல்கி**
29.2.2004

# கல்கி மீது வாசகர் கோபம்!

**தா**ங்கள் தொடர்ந்து பா.ஜ.க.வை குறை சொல்லியே வருகிறீர்கள். பட்ஜெட்டில் மக்களின் ஆதரவைப் பெற, சில சலுகைகளை அறிவிப்பது இயல்பான ஒன்றுதான். அதிலும் தேர்தல் வருகிறது என்றால், கூடுதலாக சலுகைகளை அறிவிப்பார்கள். வாக்குகளைப் பெறுவதற்குத் தானே அரசியல் கட்சிகள் இயங்குகின்றன? இதுவரை எந்தக் கட்சியும் செய்யாததையா பா.ஜ.க. செய்தது? அரசு செலவில் விளம்பரம் வெளியிடுகிறதாம். ஆளும் கட்சி, தான் செய்த சாதனையை விளம்பரம் மூலம் வெளியிடுவதில் என்ன தவறு கண்டீர்கள்? இதைத்தானே நேற்றைய காங்கிரசும் செய்தது? காங்கிரஸ் கட்சி ஆளும்போது வானொலியையும் தொலைக்காட்சியையும் என்ன பாடுபடுத்தினார்கள்? அதை விடுவோம். இந்துத்வ சக்தி என்றாலே, அது தீண்டப்படாத சக்தி என்பது போலவும், அந்த வரைவே கூடாது என்பது போலவும், தங்களைப் போன்ற எத்தனையோ அதி புத்திசாலிப் பத்திரிகைகள் கங்கணம் கட்டி எழுதி வந்தீர்கள். என்ன ஆச்சு? ஒவ்வொரு தேர்தலிலும் இந்துத்வ சக்திகள் தன்னுடைய ஆதரவை அதிகரித்துக் கொண்டுதான் வருகின்றன. கல்கி தன்னை சுய பரிசோதனை செய்து கொள்ள வேண்டும்.

கல்கி கூட, தான் நினைத்தால் ஒரு பள்ளிக்கூடத்தையோ, கல்லூரியையோ திறக்க முடியாதே. ஆனால், ஒரு சிறுபான்மை சமூகத்தைச் சேர்ந்தவர் உடனடியாக கல்லூரியைத் திறக்க முடிகிறதே. ஏன்? காஷ்மீரில் வாழ்ந்த இந்துக்கள் ஏன் வேறு மாநிலத்திற்குக் குடி பெயர்ந்தனர்? கயிலாய மலைக்குச் செல்லும் பக்தர்கள் ஏன் ஒவ்வொரு வருடமும் கொல்லப்படுகின்றனர்? குஜராத்தில் சிறுபான்மை சமூகத்தினர் பாதிக்கப்பட்டதால் எழும் சமுதாயக் கடமை, ஏன் பெரும்பான்மை சமூகத்தினர் பாதிக்கப்பட்டால் எழுவதில்லை?

சிறுபான்மை, பெரும்பான்மையாக வாழும் பகுதிகளுக்கு கல்கி விசிட் அடித்தால், நிறையக் கேள்விகளுக்கு விடை தெரிய வரும்.

**- ப. பழனியாப்பிள்ளை, நாகர்கோவில்**
*(நீண்ட நாள் வாசகர்)*

மேலும் வட்டமேஜை பக்கம் 10ல்.

போலி முத்திரைத்தான் மோசடியில், அப்துல் கரீம் தேல்ஜி, ஹர்ஷத் மேத்தாவையும் மிஞ்சிவிட்டார் என்கிறார்கள். தேல்ஜி மோசடியில் சுமார் முப்பதாயிரம் கோடி ரூபாய் வரை ஸ்வாஹா! தேல்ஜியும் அவன் ஆட்களும் புகுந்து விளையாடிய மாநிலங்கள் எட்டு.



• அந்தக் கடிதம்

பிடித்து, நேரடியாக விலாஸ்ராவ் தேஷ்முக்கைச் சந்தித்தான். இவர் கொடுத்த அழுத்தம் காரணமாகத்தான், விலாஸ்ராவ் உடனடியாக உரிமம் வழங்க உத்தரவிட்டாராம். ஸ்டாம்ப் துறை ஒப்புக்குச் சப்பாணியாக, தேல்ஜியின் பின்னணியை விசாரிக்கச் சொல்லி போலீசைக் கேட்டுக் கொண்டது. மார்ச் 15ஆம் தேதியே தேல்ஜிக்கு லைசன்ஸ் வழங்கப்பட்டதில் இருந்தே, விசாரணையின் லட்சணம் எப்படி இருந்திருக்கும் என்று

மகாராஷ்டிராவில் 1994ல், சரத் பவாரின் காங்கிரஸ் அமைச்சரவையில் ரெவின்யூ அமைச்சராக இருந்த விலாஸ்ராவ் தேஷ்முக்குக்கு, பிப்ரவரி 18, 1994 அன்று தேல்ஜி ஒரு கடிதம் எழுதி, மந்த்ராலயா (செக்ரடேரியட்) போய், நேரே அவரிடமே கொடுத்தான்.

"ஐயா, நான் ஒரு வேலையில்லாப் பட்டதாரி. ரொம்பவும் ஏழைக் குடும்பம். ஆனால் எனக்கு வங்கிகளிலும், பன்னாட்டு நிறுவனங்களிலும் நிறையத் தொடர்பு உண்டு. எனக்கு நீங்கள் மும்பையில் பத்திரங்களும் ஸ்டாம்ப்



• தேல்ஜி



• விலாஸ்ராவ் தேஷ்முக்

# தேல்ஜி ஸ்டைல் 'திருவிளையாடல்'!

களும் விற்க லைசன்ஸ் வழங்க வேண்டுகிறேன். என் விண்ணப்பத்தை ஜனவரி 20ஆம் தேதியே ஸ்டாம்ப்ஸ் சூபரின்டெண்டண்ட் மோப்பல்வார் சாஹேபிடம் கொடுத்திருக்கிறேன்" என்கிறது இந்தக் கடிதம்.

'உடனடியாக இதைக் கவனிக்கவும்' என்று எழுதிக் கையெழுத்திட்டு, ஸ்டாம்ப்ஸ் டிபார்ட்மெண்ட் அதிகாரிக்குப் பரிந்துரை செய்திருக்கிறார் விலாஸ்ராவ் தேஷ்முக். அந்தத் துறையும் உரிமம் வழங்கிவிட்டது. இதற்கு நன்றி தெரிவித்து தேல்ஜி கடிதமும் எழுதியிருக்கிறான். இதில் விநோதம் என்ன தெரியுமா? அப்போது தேல்ஜி மீது பாஸ்போர்ட் - விஸா குற்ற வழக்கு ஒன்று விசாரணையில் இருந்தது!

**எப்படி உரிமம் கிடைத்தது?** தேல்ஜி கெட்டிக்காரன். சமாஜ்வாதி கட்சியைச் சேர்ந்த அனில் கோட்டே என்ற எம்.எல்.ஏவைப்

ஊகித்துக் கொள்ளலாம்.

**வழக்குப் பதிவு:** 1995ல் ஸ்டாம்ப்ஸ் டிபார்ட்மெண்ட் தேல்ஜி மீது, முதல் ஏழு வழக்குகளைப் பதிவு செய்தது. ஜூன் 21, 1995ல் அவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்த உரிமத்தைத் திரும்பப் பெற்றது.

தேல்ஜி சும்மா இருக்கவில்லை. கடும் எதிர்ப்புத் தெரிவித்தான். அசோக் தொங்காவ்கர் என்ற அமைச்சர், அவனுக்காக, அப்போது முதல்வராக இருந்த மனோகர் ஜோஷியிடம் போய் வாதாடினார். ஸ்டாம்ப்ஸ் துறை அதிகாரி மோப்பல்வாரைப் பதவியிலிருந்து விரட்ட வேண்டும் என்று அதிரடி கோரிக்கை வேறு! (அசோக் தொங்காவ்கர் இப்போது ஆள் கடத்தல் வழக்கில் மாட்டிக் கொண்டு 'உள்ளே' இருக்கிறார்!) மனோகர் ஜோஷி,

அதிகாரிகளிடம் விசாரித்துவிட்டு, தேல்ஜியின் அடாவடிப் புகார் மீது நடவடிக்கை எதுவும் எடுக்காமல், அதைக் குப்பைக் கூடையில் போட்டு விட்டார்.

இப்போது எட்டு மாநிலங்களில் தேல்ஜியின் போலி முத்திரைத்தாள் வழக்குப் பதிவாகி இருக்கிறது என்றால், எந்த அளவுக்கு தேல்ஜியின் செல்வாக்கு இருந்திருக்கிறது என்பது புரியும். போலீஸ் இப்போது கைப்பற்றியிருக்கும் விற்பனையாகாத போலி முத்திரைத்தாள்களும், ஸ்டாம்பு களும் மட்டுமே, கோடிக் கணக்கான ரூபாய்கள் மதிப்பு இருக்கும். மகாராஷ்டிராவில் ஒரு சாதாரண துணை சப் இன்ஸ்பெக்டரே, கிட்டத்தட்ட ஐம்பது கோடி ரூபாய்க் குச் சொத்துச் சேர்த்துவிட்டார் என்றால் பாருங்கள்.

**அரசியல்வாதிகளின் பங்கு:** மகாராஷ்டிர உயர்நீதி மன்ற ஆணைப்படி அமைக்கப்பட்ட சிறப்பு விசார ணைக்குழுவின் தலைவர், முன்னாள் காவல்துறை டைரக் டர் ஜெனரல் எஸ்.எஸ்.பூரி. அப்பழுக்கற்ற அதிகாரி என்ற பெயர் இவருக்கு உண்டு. இவரிடம் இப்போது சிக்கியிருக் கும் ஐம்பத்தி ஆறு டேப்புகளில் பல, கர்நாடகா சிறை யில் அடைக்கப்பட்ட தேல்ஜி, தன் பணபல செல்வாக்கி னால், அங்கிருந்து கொண்டே மும்பையிலுள்ள முக்கிய அரசியல்வாதிகளிடம் அன்றாடம் பேசிய பேச்சுக்கள் பதிவாகி இருக்கின்றன. தேல்ஜியைப் பாதுகாத்ததில் மட்டுமல்ல, அவன் செய்த துரோக வேலைகளைக் கண்டு கொள்ளாமல் விட்டதும் அரசியல்வாதி கள்தாம்.



• பூரி

சிவசேனை - பா.ஜ.க. கட்சிகள் இணைந்து, விலாஸ்ராவ் தேஷ்முக் அமைச்சரவையைக் கவிழ்க்க முனைந்தபோது, காங்கிரஸ் எம்.எல்.ஏக்களை பெங்களூருக்கு அழைத்துச் சென்று, சொகுசு ஓட்டல் களில் தங்க வைத்தது தேல்ஜியின் சகோதரன் தான்.

இதில் வேடிக்கை என்னவென்றால் 94ல் தொடங்கிய இந்த மோசடி ஊழல், இத்தனை ஆண்டு களாகச் செழித்து வளர்ந்திருப்பதுதான். சிறையில் இருந்தபோதுங்கூட, சகல வசதிகளையும், போகங்களை யும் அனுபவித்து, அங்கிருந்தபடியே அரசியல்வாதிகளி டமும், காவல்துறை உயரதிகாரிகளிடமும் உறவாடிக் கொண்டிருந்தான் தேல்ஜி. மும்பைக்குக் கொண்டு வந்தபோதும், அவனுடைய பங்களாவிலேயே சொகுசாக இருந்துவர காவல்துறை ஒத்துழைத்தது இன்னும் விந்தை!

— சாருகேசி


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# ஏழுல நாலு சுவாரஸ்யம்!

தி.மு.க.வும், அ.தி.மு.க.வும் என்ன கொடுக்கின்றனவோ, அதை வைத்துக் கொண்டு திருப்தியடைய வேண்டிய நிலையில்தான் இருக்கின்றன தேசியக் கட்சிகளான காங்கிரஸும், பா.ஜ.க.வும். விருப்பத்தைச் சொன்னால் வெளியே போக வேண்டியதுதான்.

காங்கிரஸுக்கு பாண்டிச்சேரியும் நாகர்கோயிலும் கிடைக்காததால் எகிறிக் குதித்து 'தனித்துப் போட்டி, போராட்டம், உண்ணாவிரதம்' என்று வீராவேசமாக தலைமைக்குச் சவால் விட்டார்கள். இப்போது சத்தம் அடங்கிவிட்டது. கூச்சலும், குமுறலும் இடம் மாறி விட்டன. திருச்சி, புதுக்கோட்டை, சிவகங்கை தொகுதிகளை அம்மா கொடுக்காததால், ஆத்திரம் அடைந்திருக்கிறார்கள் அந்தத் தொகுதியிலுள்ள பா.ஜ.க.வினர்.



பா.ஜ.க.விடம் திணிக்கப்பட்ட தொகுதிகள் சிதம்பரம், தர்மபுரி, வடசென்னை. பாண்டிச்சேரியில் அ.தி.மு.க.வுக்குச் செல்வாக்கு இல்லாததால், பா.ஜ.க.விடம் தள்ளி விட்டுவிட்டார் அம்மா. ஆனால் வடசென்னையைப் பொறுத்தமட்டில் அம்மா செய்தது சரியல்ல என்கிறார்கள் அ.தி.மு.க. தொண்டர்கள்.

"கடந்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு, வட சென்னை எங்கள் கோட்டையாகிவிட்டது. தி.மு.க. இங்கே மிகப் பலவீனமாக இருக்கிறது. எங்கள் வேட்பாளர் நின்றால் வெற்றிக் கனியைப் பறிப்போம்" என்கிறார்கள் அவர்கள். முன்பு தி.மு.க.வுடன் ஒட்டி உறவாடியதால், தென் சென்னையை இல. கணேசனுக்காக, பா.ஜ.க.வுக்கு ஒதுக்கவில்லை. முதலிலிருந்தே 'புதுக்கோட்டையைப் பற்றிப் பேச வேண்டாம் என்பதே ஜெ.வின் கட்டளையாக இருந்தது. சுகுமாரன் நம்பியார் முதற்கொண்டு, அத்வானி வரை வற்புறுத்திப் பார்த்தும் "இந்த விவகாரத்தில் மட்டும் தலையிட வேண்டாம். ஒரு "துரோகிக்காக எங்கள் தொண்டர்கள் வேலை செய்யமாட்டார் கள்" என்று சொல்லிவிட்டாராம் ஜெ.

"எனக்கு எந்த வருத்தமும் இல்லை. தனித்துப் போட்டியிட மாட்டேன். பா.ஜ.க.வுக்காக உழைப்பேன்" என்று மிகப் புத்திசாலித்தனமாகச் சொல்லி, புதுக்கோட்டைப் புயலை அமைதியாக்கியிருக்கிறார் திருநாவுக்கரசர். ஆனால் தொகுதியிலும் ஆதரவாளர்களிடையேயும் பிரச்னை இன்னும் புகைந்து கொண்டுதானிருக்கிறது.

"தேர்தலுக்குப் பிறகு பா.ஜ.க. தலைமையிலான அரசே அமையும் என்ற எதிர்பார்ப்பிலும், கட்சி தன்னைக்

கைவிடாது, அமைச்சராகவே தொடர்வோம், என்ற நம்பிக்கையிலும் தற்சமயம் இவ்வாறு முடிவெடுத்திருக்கிறார் திருநாவுக்கரசர். பா.ஜ.க. தலைமையில் நாளை அரசு அமையுமானால், 'திருநாவுக்கரசருக்கு அமைச்சர் பதவி கூடாது' என்று அம்மா அடம் பிடித்தால், 'அரசரின்' தலை தப்புவது கஷ்டம். ஆகவே தேர்தலுக்குப் பிறகுதான் திருநாவுக்கரசரின் அரசியல் எதிர்காலம் முடிவு செய்யப்படும் என்று எதிர்பார்க்கலாம்" என்கிறார் திருநாவுக்கரசரின் நண்பர் ஒருவர்.





• திருநாவுக்கரசர்



• இல. கணேசன்



• பொன்.ராதாகிருஷ்ணன்

சிதம்பரம், தர்மபுரி ஆகிய தொகுதிகளில் பா.ஜ.க. தரப்பில் போட்டியிட, ஆட்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். வட சென்னையில் குமரி அனந்தனின் மகள் டாக்டர் தமிழிசைக்கு வாய்ப்பு இருக்கிறது. பாண்டிச்சேரியை லலிதா குமாரமங்கலம் எடுத்துக் கொண்டு போகலாம். வட சென்னையில் போட்டியிடும் பா.ஜ.க. வேட்பாளர், அ.தி.மு.க. பிரமுகர்களை முடுக்கிவிட்டு வேலை செய்தால் வெற்றிக் கனியைப் பறிக்கலாம்.

நாகர்கோயிலில் பொன். ராதா கிருஷ்ணனுக்கு நல்ல பெயர் இருந்தாலும், மார்க்சிஸ்ட் வேட்பாளர் பெல்லார்மின், கடுமையான போட்டியைக் கொடுப்பார் என்கிறார்கள். அதேபோல் நீலகிரியிலும், கோவையிலும், பா.ஜ.க. இந்த முறை சுலபத்தில் வெற்றி பெற முடியாது. வாஜ்பாயின் செல்வாக்கு இவர்களுக்கு எந்த அளவுக்கு உதவக் கூடும் என்பதைப் பார்க்க வேண்டும். மொத்தத்தில் பா.ஜ.க.வுக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஏழு தொகுதிகளிலும், எதிர்த் தரப்பு அலை சிம்ம சொப்பனம் என்பது உறுதி. ஆனால் இவற்றுள் நான்கு தொகுதிகளில், வாஜ்பாயின் மேல் இன்னமும் பெருமதிப்பு வைத்துள்ள பா.ம.க. மற்றும் தி.மு.க.வுடன் மோதுகிறது பா.ஜ.க.

நான்கரை வருடங்கள் பா.ஜ.க.வுடன் பதவியை அனுபவித்த கட்சிகள் அவை. எனவே, அங்கே நடக்கும் பிரசாரம் சுவாரஸ்யமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

- ப்ரியன்

படம் : ஸ்ரீஹரி

தலைப்பே படத்திற்குள் என்ன இருக்கிறது என்பதைப் பூடகமாகச் சொல்லிவிடுகிறது. பெற்றோரிடம் பொய் சொல்கிறவர்கள், படிப்பதுபோல் நடிக்கிறவர்கள், சக மாணவிகளிடம் சதா காதல் அப்ளிகேஷன் போடுவதையே வேலையாக வைத்துக் கொண்டிருப்பவர்கள், என்று அநியாயத்துக்கு வால்தனம் பண்ணும் மூன்று உயர்நிலைப் பள்ளி மாணவர்களைப் பற்றிய 'உணர்ச்சிகரமான' கதை.






மூவரில் ஒருவரையாவது, அல்லது மூவரல்லாத வேறு ஏதேனுமொரு மாணவரைக் கொஞ்சம் ஒழுக்கம், கட்டுப்பாடு, திறமைமிக்கவராக காட்டுவார்கள் என்று பார்த்தால், நோ ஜஸ்டிபிகேஷன்!

நல்ல வேளையாக இந்த மூவரணி ஜொள்வழியும் மூன்று மாணவிகளை வளைந்து கொடுக்காதவர்களாகச் சித்திரித்து, தாய்க் குலத்தை தாஜா செய்திருக்கிறார்கள். ஒரு கட்டத்தில் இந்த மாணவர் கூட்டணி எல்லை மீறிப் போய், பக்கத்து வீட்டிற்கு குடி வரும் விந்தியாவுக்காக, அவரது கணவரைக் கொலை செய்ய முயற்சிப்பது, நெருடல் ப்ளஸ் நகைச்சுவை. பொடியன்கள் இத்தனை எல்லை மீறிப் போகிறார்களே என்று பொறுமையிழந்து, நிமிரும்போது மெசேஜ் வந்துவிடுகிறது.

வயசுப் பசங்களை ஆரம்பத்திலேயே கண்காணித்து வளர்க்க வேண்டிய மாண்புமிகு பொறுப்பு, பெற்றோர்களுக்கு இருக்கிறது. அதை மறந்தால் இவர்களை மாதிரி கம்பி எண்ண வேண்டியதுதான் என்று, தேனில் கசப்பான மருந்தை தடவித் தருகிறார்கள்.

எப்படியிருந்தாலும், மூவர் கூட்டணி பல காட்சிகளில் எல்லை மீறிப் போய்விடுவதை கதாசிரியரோ, இயக்குனரோ கட்டுப்படுத்தியிருக்கலாம்.

படத்தில் இடம் பெற்றிருக்கும் எல்லாப் பாடல்களையும் இளமைத் துள்ளலோடு படைத்திருக்கும் அறிமுக இசையமைப்பாளர் பி.கே. சுந்தர், பாஸ் மார்க் வாங்கி விடுகிறார்.

நூற்றி ஐம்பது கிலோ உடலோடு, 'கம்பங்காட்டு மூல' பாடலில் அநாயாசமாக நடன அசைவுகளை வெளிப்படுத்தி தூள் கிளப்பி இருக்கும் இந்திப் பட நடன இயக்குனர் கணேஷ் ஆச்சார்யா, விழி விரிய வைத்து விடுகிறார்.

'துள்ளுவதோ இளமை'யின் தொடர்ச்சியாக வந்திருக்கிறார்கள் இந்த வயசுப் பசங்க.

**- விஷுவல்தாசன்**

● ஜஸ்ட் பாஸ்



# வர்ணஜாலம்



சூட்டும் தலைப்பிற்கு நூறு விழுக்காடு நியாயம் கற்பிக்க முடியுமா? முடியும் என்று படம் முழுக்க வர்ணஜாலம் காட்டி வியப்பூட்டுகிறார், அறிமுக இயக்குனர் நகுலன் பொன்னுசாமி.

தன் குடும்பம் அழியக் காரணமான முன்னாள் காவல் அதிகாரியின் குடும்பத்திற்குள் ஊடுருவிப் பழிவாங்கும் ஹீரோவின் கதை. எம்.ஜி.ஆர். காலத்துக் கதைதான். அதைத் துளிகூட லாஜிக் பிசகாத சூப்பர் ஃபாஸ்ட் திரைக்கதை மூலம் சொன்னவிதம், இரண்டரைமணி நேரமும் இருக்கை நுனியிலேயே இருத்தி வைக்கிறது.

மலை முகட்டிலிருந்து கீழே குதித்து தற்கொலை செய்து கொள்ளும் காதலர்களுக்காகப் பரிதாபப்படாமல், அவர்களின் கோழைத்தனத்தைக் கிண்டல் செய்து, அமானுஷ்யமாய் ஐ.ஜியின் மகள் சிரிக்க, அந்நேரம் அங்கே வேலை தேடி வரும் இளைஞனாக, இயல்பான அறிமுகத்தோடு நாயகன் சக்திவேல் நுழைய, ஏதோ விபரீதம்... என்று அந்த நொடியில் ஆரம்பிக்கிற திக்.. திக்.., இறுதி வரை தொடர்கிறது.

ஐஜி குடும்பத்து உறுப்பினர்களை ஒவ்வொருவராகத் தனிமைப்படுத்தும் கதாநாயகனின் ப்ளாஷ் பேக்கை, ஒரே மூச்சில் சொல்லிவிடாமல், சின்னச் சின்ன 'ப்ளாஷ் கட்'டுகளில், மெல்ல மெல்ல விடுவிக்கும் உத்தி... படத்திற்குப் பெரிய சக்தி.

ஒரு பழிவாங்கும் கதையில், மென்மையான காதலைத் திறமையாக நுழைத்திருக்கும் இயக்குனர், ஸ்ரீகாந்த் - சதா இடையிலான காதல் காட்சிகளில் கவித்துவம் பேணியிருப்பதன் மூலம், கதாநாயகி சதா படம் முழுவதும் இருப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தி விடுகிறார்.

தன்னை மிகுந்த அறிவாளியாகக் காட்டிக் கொள்ளும் அஸ்வின் பாத்திரம், ஸ்ரீகாந்த் தரும் எதிர்பாரா அதிர்ச்சிகளில் உறைந்து போகும் போது, நமக்கும் அடுத்தடுத்து இதயத் துடிப்பு எகிறுகிறது.

இமேஜ் பற்றிய கவலையின்றி, சக்திவேல் பாத்திரத்தில் கச்சிதமாகப் பொருந்தியிருக்கும் ஸ்ரீகாந்தின் நிறைவான நடிப்பு தான் படத்தில் உயிர்த்துடிப்பு. கொஞ்சம் உளவியல் சிக்கல் கொண்ட அஸ்வின் பாத்திரத்தின் தன்மையை துல்லியமாக உள் வாங்கிக் கொண்டு அசத்தியிருக்கும் ஆனந்த்சாமி, கவனத்தை ஈர்க்கிறார். மற்றொரு ஈர்ப்பாளர் எடிட்டர் கே. பழனிவேல்.

இத்தனை நிறைகள் கொண்ட படத்தில் கண்களில் விளக்கெண்ணெய் விட்டு குறைகளைத் தேடியதில், ரவுடி குணாவுக்கும், காவல் அதிகாரி நாசருக்கும் என்ன தொடர்பு என்பதை கடைசிவரை இயக்குனர் சொல்லாமல் விட்டுவிட்டது பளிச்சென்று தெரிகிறது.

மற்றபடி வர்ணஜாலம், காற்று வேகம்!

- விஷுவல் தாசன்

• அபவ் ஆவரேஜ்



# "எம்.ஜி.ஆருக்குப் பிறகு கேப்டன்தான்!"



• கொ. தங்கமணி

தமிழகத்தின் மைய நகரத்தில் தன் ரசிகர்கள் மத்தியில், அரசியல் புயலைக் கிளப்பி விட்டுச் சென்றிருக்கிறார் நடிகர் விஜயகாந்த்.

"இந்தப் பாராளுமன்றத் தேர்தல் நமது இலக்கு அல்ல. 2006ல் நடைபெற இருக்கின்ற சட்டமன்றத் தேர்தலே இலக்கு" என்று பகிரங்கமாகவே மேடையில் அறிவித்திருக்கிறார்.

அதற்கேற்றார்போல அவரது ரசிகர் மன்றங்களும் இப்பொழுதிருந்தே சுறு சுறுப்பாகச் செயல்படத் தொடங்கியுள்ளன.

விஜயகாந்த் ரசிகர் மன்ற மாநில அமைப்புச் செயலாளராகவும், திருச்சி மாவட்டத் தலைவராகவும் இருக்கும் கொ. தங்கமணியைச் சந்தித்தோம்.

**ரசிகர் மன்ற உறுப்பினர்களை மட்டும் நம்பியே நடிகர் விஜயகாந்த், அரசியல் கட்சி ஒன்றினைத் துவக்கி தேர்தலில் களம் கண்டுவிட முடியும் என்று எப்படி நினைக்கிறீர்கள்?**

எம்.ஜி.ஆருக்குப் பிறகு, தமிழ்நாட்டில் கேப்டனைத்தான் (விஜயகாந்தை இப்படித்தான் குறிப்பிடுகிறார்கள் ரசிகர் மன்றத்தினர்!) மக்கள் அதிகம் நேசிக்கிறார்கள். இதில் எங்களுக்கு எந்தவிதச் சந்தேகமுமில்லை. கடந்த இருபத்தைந்தாண்டுக் காலமாக பரவலாக தமிழ்நாட்டில் பல்வேறு உதவிகளைச் செய்து வருகிறார் கேப்டன். அவரது சேவைகளால் தமிழக மக்களுக்குப் பிடித்த சினிமா நடிகராக மட்டுமல்ல, தலைவராகவும் மக்கள் கண்களுக்குத் தெரிகிறார். அதனால் கேப்டன் துவங்க இருக்கும் அரசியல் இயக்கத்தை வெற்றி பெற வைத்து விடுவார்கள்.

**உங்கள் அரசியல் கட்சியும் தமிழ்நாட்டில் பத்தோடு பதினொன்றாகத்தானே இருக்கப் போகிறது? தேர்தலில் தனித்துப் போட்டியிட்டு வெற்றி பெறும் என்று நம்புகிறீர்களா?**

பெரு நகரம், சிறு நகரம் என்றில்லாமல், ஊராட்சி ஒன்றியங்கள் தோறும் கிராமங்களில் எல்லாம் எங்கள் ரசிகர் மன்றங்கள், அமைப்பு ரீதியாகச் செயல்பட்டு வருகின்றன. நீங்கள் குறிப்பிடுவது போல், பத்தோடு பதினொன்றாக எங்கள் அரசியல் இயக்கம் இருக்கப் போவதில்லை. தமிழக மக்கள் ஒரு மாற்றத்தை விரும்பி அதற்காகக் காத்திருக்கிறார்கள். அரசியலில் புதிய மாற்றத்தை விரும்பும் அந்தப் பெரும்பான்மை பொது மக்கள் எங்களை வெற்றி பெற வைப்பார்கள் என்ற நம்பிக்கை இருக்கின்றது.

**உங்கள் ரசிகர் மன்றத்து உறுப்பினர்கள் ஏதேனும் ஒரு அரசியல் கட்சி சார்புடையவர்களாகத்தானே இருந்திருப்பார்கள்? விஜயகாந்த் தனியாக கட்சி துவக்கும் போது, அவர்கள் அனைவரையும் எவ்வாறு ஒன்றிணைப்பீர்கள்?**

மூன்று வருடங்களுக்கு முன்பு எங்கள் ரசிகர் மன்றத்துக்கென ஒரு தனிக் கொடியினை கேப்டன் அறிவித்தார். அதன்பின்னர் எங்கள் ரசிகர் மன்ற பொறுப்பாளர்கள், உறுப்பினர் அனைவரும் எந்தவொரு அரசியல் கட்சி சார்ந்தும் செயல்படவில்லை. விஜயகாந்த் ரசிகர் மன்றத்தைப் பொறுத்தவரை, தமிழகம் எங்கிலும் இந்தக் கேள்விக்கே இடமிருக்காது.

பேட்டி, படம் : **திருநாவு**




# ஷைனிங் அண்ட் ஸ்மைலிங்!

✉ 'மினி கல்கி' வெளிவர ஆரம்பித்ததிலிருந்து 'கல்கி ஷைனிங்!' வாசகர்களும் ஈக்குவலி 'ஷைனிங் அண்ட் ஸ்மைலிங்!'

சென்னை - 33, ஆர்.கோபாலன்

✉ சிறுகச் சிறுக அருகிவரும் தப்பாட்டம், கரகாட்டம் உள்ளிட்ட பாரம்பரிய கிராமியக் கலைகளுக்கு, புத்துயிர் ஊட்டி வரும் கன்னியாஸ்திரி சந்திராவின் சமுதாய சேவை மற்றும் பெண்கள் முன்னேற்றத்திற்கான முயற்சிகளை, எவ்வளவு பாராட்டினாலும் தகும்!

கும்பகோணம்,
கே.என். பாலகிருஷ்ணன்

✉ சுத்தியல் பிடித்து கல்லுடைத்த பிஞ்சுக் கரங்கள், கணிப்பொறி மௌஸ் பிடித்து கல்வி கற்கும் ஆசைகள் நிறைவேற, பள்ளியைத் தொடங்கிய கல்லுடைக்கும் தொழிலாளர் சங்கத்தின் நிறுவனர் எஸ்.பி.ஞானமணியின் கல்விப்பணி, மகத்தானது.

சென்னை - 19, பெ. தர்மன்

✉ கல்கி மீது இன்னொரு வழக்கு போட்ட அரசு மீது பரிதாபமும், கோபமும்தான் வருகிறது. ஒரு தலையங்கம் எப்படி எழுத வேண்டும் என்பதை இவர்களே எழுதிக் கொடுத்து விடுவார்கள் போலிருக்கிறது. ஆட்சியாளர்கள் வழக்குகள் போடப் போடப் கல்கியின் அழகு மிளிரும் என்பது எங்கள் எண்ணம்.

ஆலங்குளம், ரா. சாலமோன்

✉ சோனியா தலைமை குறித்து எழுந்த ஐயங்களை அறவே நீக்கி, காங்கிரஸ் கட்சிக்கு டானிக் அளித்துள்ள தலையங்கம் பாராட்டுதற்குரியது. இனி கிடைத்துள்ள நல்வாய்ப்பினைப் பயன்படுத்த வேண்டியது காங்கிரசாரின் கடமை!

கோவை - 30, எஸ். அஸ்வின் சுந்தரேசன்

✉ திண்டுக்கல் சீனிவாசன் பேட்டி உண்மையில் கலகலத்தது!

நெல்லை, ஆர்.ஜி.ஏ. ராமன்

✉ மொக்கராசுவின் குறும்பான கேள்விகளுக்கு அதே பாணியில் பதில் சொன்னாலும், பாகிஸ்தான் பற்றிய கேள்விக்கு இல.கணேசன் சொன்ன பதில் நெகிழ வைத்தது!

திருநெல்வேலி - 11, நெல்லை எஸ்ஸார்

✉ காதல் மேலாண்மை - 'மினி கல்கி' படித்தேன். காதலுக்கு மட்டுமில்லை... நட்பு முதலான அனைத்து உறவுகளுக்கும் இந்த ஆலோசனைகள் பொருந்தும். தன்னையும் புரிந்து, மற்றவரையும் புரிந்து... ஆஹா! எல்லோரும் இதைப் புரிந்து செயல்படுத்த ஆரம்பித்தால், அன்பு மழையில் நனையும் பூமி, அமைதி சுகத்தை அள்ளிக் கொடுக்கும்.

பேராவூரணி, கே. விஜி

✉ உங்கள் தலையங்கங்கள் எப்போதும் தி.மு.கவை ஆதரித்தே அமைகின்றன. நல்லவற்றை யார் செய்தாலும் ஆதரிக்க வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஜெ. ஆட்சியில் 60% நல்லவையும் 40% தீயவையும் இருப்பது உண்மைதான். ஆனால் உங்கள் கவனம் முழுக்க அந்த 40% தீயவற்றை விமர்சிப்பதிலேயே இருக்கிறது. பத்திரிகைகளின் இந்தப் போக்குதான் நம் தேசத்துக்கே உரிய சாபக்கேடு.

சென்னை, (மின்னஞ்சலில்) எஸ்.கே.சங்கீதா

கணிதத்தில்
வல்லமை
பெறுங்கள்!

கம்ப்யூட்டருக்கே
சவால்
விடுங்கள்!

11 ஆண்டுகள்
10 நாடுகள்
2500 பயிற்சி மையங்கள்
25,00,000 மாணவர்கள்

ஓர் அறிவுப் புரட்சியை நோக்கி

# அலோஹா

- mental arithmetic
- more self-confidence
- enhanced creativity
- greater concentration and focus level
- better listening and analytical skills
- better memory and calculation skills
- sharper observation
- speed writing skills



**ALOHA**™

தற்பொழுது இந்தியாவில் 132 கிளைகள்
சென்னையில் மட்டும் 52 கிளைகள்!

## ALOHA MENTAL ARITHMETIC INDIA

**(A Division of KK ACADEMY (P) LTD)**

32, 1st Main Road, R.A. Puram, Chennai - 600 028.
Phone : 24613262, 24616268 Fax : 52066908
E-mail : info@alohaindia.com
Web : www.alohaindia.com

**Franchisee enquiry solicited**

**Our Franchisee Centers across the country :**

**Tamilnadu :** Virudhunagar : 244464, Sivakasi : 226321, Melur : 9843122441, Madurai Bye Pass : 3115497, **Madura 16 :** 3109361, Palayamkottai : 2573882, Karaikudi : 9842199872, Tirupattur : 04577-256240, Ramanathapuram : 3108912, Thirunagar : 9842121887, Dindigul : 2403098, Pudukottai : 9842428455, at **Coimbatore** RS Puram : 2543173, Sai Baba Colony, Tatabad, Peelamedu : 9894126600, 2491434, Ramanathapuram : 9842171325, at Tirupur 'Mangalam Road' : 9843286985, Kongu Nagar, Rayapuram, Avinasi Road : 9842246370, Tirupur Town : 5320726, at Salem Hasthampatti : 9894104538, Athur : 9842970706, Erode : 9842730309, Tanjore : 9443122995, Srirangam : 2430992, Tindivanam : 222790, Tiruthani : 280251, Kancheepuram : 9884041113, Ponneri : 274338.

**Other States :**

**Karnataka : at Bangalore :** Kamanahalli : 5430960, Indira Nagar : 9845309396, Malleswaram : 9845587594, Richmond Town : 9845309396, Vivek Nagar : 31850347, Jaya Nagar : 6655156, R T Nagar : 9845124425, Basavesha Nagar : 9845042790, Frazer Town : 9844248876, Rajaji Nagar : 56706287, Maciver Town : 9845042790, J P Nagar : 9845237395, Banaswadi : 5241141, White Field : 9845124425, Majestic Circle : 9886302056, Koramangala : 25560971, at **Pondicherry :** Kamarajnagar : 2214773, Pentasoft : 2346818, **Kerala** : Tiruvalla : 2603457, **Gujarat :** Ahmedabad : 9825600870, Surat : 9825136873, **Maharastra** at Pune Nigdi : 9823206162, Aundh : 9822538486, Vishranthwadi : 9422013083, Kothrud : 9422009411, at Mumbai Santacruz (E) : 9820242872, Vashi : 9819469443, Nerul : 27651044, **Delhi :** Mayur Vihar : 9891160719, **Bihar :** Dharbanga, : 9835247172, **Thane :** Varant Vihar : 55998812, Hiranadam: 9820556469, Thane (W) : 55998812

# அபாகஸ் என்றாலே அலோஹா தான்




## கிரிக்கெட் அரசியல்!

நமது நாட்டில் சராசரி மக்களை மிக அதிகமாகக் கவரும் இரு விஷயங்கள் கிரிக்கெட், இந்தோ - பாக் உறவு. கிரிக்கெட்டில் நாம் ஜெயிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைவிட, பாகிஸ்தானை அந்த ஆட்டத்தில் நாம் தோற்கடிக்க வேண்டும் என்கிற கண்மூடித்தனமான வெறி நமது நாட்டினரிடையே ஊடுருவி இருப்பதை மறுக்க முடியாது.

இதற்குக் காரணம், பாகிஸ்தானுக்கு எதிராக மூன்று யுத்தங்களை இன்றைய தலைமுறையினர் பார்த்துள்ளனர் என்பது மட்டுமல்ல... பாகிஸ்தானை எதிரி நாடாகச் சித்திரித்து அரசியல் பண்ணுவதென்பது, நம்முடைய அரசியல்வாதிகளுக்குக் கை வந்த கலையாகியிருக்கிறது. இந்த எதிர்ப்புணர்வு மக்களிடையே பரவி, அவர்களைத் தூண்டுகிறது.

பாகிஸ்தானுக்கு எதிராக இந்தியா ஆடக் கூடாது; பாக். அணி இங்கே வரக் கூடாது என்று ஏகமாக ரகளை செய்ய, இங்கே சிவ சேனா போன்ற அமைப்பைச் சேர்ந்தவர்கள் துவஜம் கட்டிக் கொள்கிறார்கள். இந்தோ-பாக் ஆட்டம் நடக்கவுள்ள பிட்சைத் தோண்டிப் போட்டு ரணகளமாக்குகிறார்கள்.

பாகிஸ்தானிலும் 'இந்தியா எதிர்ப்பு' என்பது 'பழம்பெரும்' அரசியல் ஆயுதமாக இருந்து வந்திருக்கிறது. இதன் விளைவாகத் தூண்டப்பட்ட தீவிரவாதம், பயங்கரவாதமாக உருமாறி, இன்று வளர்த்த கடாவாக பாகிஸ்தான் அரசின் மார்பில் பாய்ந்து கொண்டிருக்கிறது. அதிபர் முஷரஃப்பின் உயிருக்கே வேட்டு வைக்க பயங்கர



கல்கி



2004 பிப்ரவரி 29
சுபானு மாசி 17
மலர் : 62
இதழ் : 31

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - *பாரதியார்.*




வாதிகள் முயற்சி செய்ய, அதிர்ஷ்டவசமாக அவர் உயிர் தப்பியிருக்கிறார். சார்க் மாநாடு நடைபெறுவதற்குச் சற்று முன்னதாக நடந்தது இந்த நிகழ்ச்சி. இதைக் காரணம் காட்டி, நமது பிரதமர் அம்மாநாட்டுக்குப் போகாமல் இருந்து விடவில்லை. பாதுகாப்புக் குறைவு என்ற பிரச்னை எழுப்பப்படாமலே சார்க் மாநாடு நடந்து முடிந்திருக்கிறது.

அம்மாநாட்டில் இந்தோ-பாக். உறவுகள் எதிர்பார்த்ததைக் காட்டிலும் பலப்பட்டன. இதற்கு பாகிஸ்தான் தற்போது சந்திக்கும் நெருக்கடி ஒரு காரணம். பயங்கரவாதம் கைமீறியதால் அலுத்து, சலித்துப் போய், இனி அமைதிப் பேச்சுவார்த்தைதான் பிரச்னைகளுக்குத் தீர்வு என்று முடிவுக்கு வந்துள்ளது பாகிஸ்தான் அரசு. நமது பிரதமரின் யதார்த்த நோக்கும் தீர்க்கதரிசனமும், சமாதானத்தை விரும்பும் உள்ளமும் மற்றொரு காரணம். "தற்போது ஆட்சியிலுள்ள பா.ஜ.க அரசால் அமைதிக்கும், இரு தரப்பு ஒப்பந்தத்துக்கும், ஒத்துழைப்புக்கும் சுலபமாக வழிகோல முடியும்" என்று பாகிஸ்தான் பிரதிநிதிகளே கூறும் அளவுக்கு, வாஜ்பாயியின் அறிவாற்றலும் அன்புள்ளமும் செயல்பட்டுள்ளன.

இவ்வாறிருக்க, நமது கிரிக்கெட் அணி பாகிஸ்தானுக்குச் சென்று பந்தயத்தில் பங்கேற்கலாமா வேண்டாமா? என்று நாடு தழுவிய விவாதத்துக்கு, நமது அரசே காரணமாகியிருப்பது மிகவும் வருத்தத்துக்குரியது.

இந்தோ-பாக். கிரிக்கெட் பந்தயங்கள் வேண்டாம் என்று முடிவு செய்த அரசே அம்முடிவிலிருந்து மாறி, பந்தயங்கள் நடக்கும் என்று அறிவித்த பிறகு, பாதுகாப்புக் காரணங்களுக்காக அம்முடிவு பரிசீலனைக்கு உட்படும் என்று கூறுவதும்; உடனே ஆட்டக்காரர்களும் கிரிக்கெட் அமைப்பும் அச்சம் தெரிவிப்பதும், மறுநாளே 'இல்லையில்லை; பாகிஸ்தான் செய்துள்ள பாதுகாப்பு ஏற்பாடுகள் சரிபார்க்கப்படும்' என்று அறிவிப்பதும்; அந்தக் காரியம் நடந்து முடிவதற்குள், பாகிஸ்தான் சுற்றுப் பயணத்தைத் தேர்தலுக்கு அப்புறம் வைத்துக் கொள்ளலாம் என்று செய்தி வருவதும்; பிறகு அது வாபஸ் பெறப்பட்டுப் பயணம் உறுதியாவதும்; 'நமது வீரர்களுக்கு நாமே பாதுகாப்பு ஏற்பாடு செய்யவிருக்கிறோம்' என்று வதந்தி கிளம்புவதும்; மறுநாளே அதற்கு அரசு மறுப்பு தெரிவிப்பதுமாக.... பந்தயங்கள் ஆரம்பிக்கும் முன்னரே




ஏகப்பட்ட டென்ஷன் கிளம்பியிருக்கிறது.

பயங்கரவாதிகள் பெருகிவிட்ட நிலையில் எச்சரிக்கை தேவை என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால், அந்தப் பிரச்னையை இரு அரசுகளும் உயர் அதிகாரிகள் மட்டத்தில் விசாரித்துப் பாதுகாப்பு ஏற்பாடுகளை வரையறுத்துக் கொண்டு, நமது ஆட்டக்காரர்களுக்கும் அவ்வேற்பாடுகள் குறித்து விளக்கி, அவர்களுக்கு உற்சாகமூட்டி, ஆட அனுப்பி வைப்பதே முறையான செயல்பாடு.

அரசியல் ரீதியில் இந்தோ-பாக். அதிகாரிகள் மட்டத்தில் பேச்சுவார்த்தைகள் வெற்றிகரமாக நடந்து வருகின்றன. இரு தரப்பினரும் அடுத்த சுற்றுக்குத் தேதி குறித்துள்ளதுடன், மேல்மட்ட அளவிலான பேச்சு வார்த்தைகளுக்கும் வழி செய்துள்ளனர்.

இந்த நேரத்தில் பாகிஸ்தானுக்குச் சென்று நம் வீரர்கள் ஆடுவதைப் பெரிய பிரச்னையாக்குவது ஆட்டத்துக்கும் நல்லதல்ல, அரசியலுக்கும் நல்லதல்ல. இந்தியா, பாகிஸ்தானுக்குச் சென்று ஆட வேண்டும். அதேபோல் பாகிஸ்தானும் இந்தியாவுக்கு வந்து ஆட வேண்டும். இரு தரப்பினரும் எதிர்த்தரப்பின் பாதுகாப்புக்குப் பொறுப்பேற்பதாக அறிவிக்க வேண்டும். இரு தரப்பினரது ஆட்டத்தையும் மக்கள் சமநோக்குடன் ரசித்து மகிழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

ஆட்டம் வேறு, அரசியல் வேறு என்பது வாஸ்தவம்தான். ஆனால் ஒரு பாகிஸ்தானி குழந்தை, இந்தியாவில் இதய அறுவை சிகிச்சை செய்து கொண்டு போனால், அது எத்தனை பெரிய செய்தியாகி, எத்தனை மனங்களை மகிழ்விக்கிறது! நல்லுறவுக்கு எத்தனை தூரம் உதவுகிறது! அதே போல்தான் கிரிக்கெட்டும். நமது ஆட்டக்காரர்கள் பாகிஸ்தானில் களிப்போடும் முழு ஈடுபாட்டோடும் ஆடித் திரும்பினால், அதுவே வெற்றிதான். அந்தப் பந்தயங்களில் பாகிஸ்தான் வென்றாலும் அது நமக்கு வெற்றிதான். அது சமாதானத்தின் வெற்றி. அதேபோல் நாம் வென்றாலும் அது பாகிஸ்தானுக்கு வெற்றிதான். அது நல்லுறவின், அமைதியின் வெற்றி. இந்த இலட்சிய நோக்கில் ஆட்சியாளர்கள் இரு நாடுகளிலும் சிந்திக்க வேண்டும்; மக்களையும் இந்நிலைக்கு உயர்த்த வேண்டும். ○

லக்ஷ்மி மணிவண்ணன்

காலம் அழிந்த
வாழ்க்கைதான் சௌகரியம்
இல்லையா!
காலண்டர், நாள், நிமிடம்
மணிக்கூர், பகல் - இரவு
எந்தக் கணக்குமில்லாத ஒரு வாழ்க்கை.

பரபரப்பின் தற்கொலையில்
ஆசுவாசம், நிம்மதி.

காலமழிந்த உலகில்
நீ - என் நிமிடங்களைத் திருட
முடியாது - இரண்டு பேரின் இரண்டு
நூற்றாண்டுக்கான உழைப்பை
உன் ஒரு நூற்றாண்டுக்குச்
செலவு பண்ண முடியாது.

புல்லின் மரணம்
எலக்டிரிக் லைனில் அடிபட்டு
அலகொடிந்த காக்கையின் மரணம்
மனித மரணம்
எல்லாம் ஒன்றுதான்
காலத்துக்கு.

காலத்தை யார் போய்
தட்டிக் கேட்பது!
காலம் பூதம்
பூதமே ஆளும் நம்மை.
பூதத்தின் ஆட்சியில்
காற்றில் வரைந்த ஓவியமே
நானும் நீயும்.

# எலக்ட்ரிக் லைனில் தொங்கும் காலம்



நீ வாழ்க்கையில் என்ன காண
பரபரக்கிறாய் - உன் பரபரப்பும்
சாவும் ஒன்றுதான்,
காலத்தை எதிர்க்கும் உன் ஓட்டம்
கடைசியில் வந்து முடியும்
காலத்தின் காலடியில்.

காலத்தின் அட்டகாசம்,
தொடர்ச்சியாய் - நடக்கும்
பிரேத ஊர்வலம்,
கழுத்தில் சுருக்கு மாட்டி
பாதி உயிர் பிரிந்த பிறகு
நீ பிழைத்திருந்தால்
உனக்குப் புரிந்திருக்கும்
உயிருள்ள வாழ்க்கை;
உயிருள்ள காலம்.

காலம் உனக்கு ஒருமுறை
நின்று போகும்.
மற்றபடி - இந்த பூமி
வரலாற்றாசிரியனுக்கும்
தொல்பொருள்
ஆராய்ச்சியாளனுக்குமே
உரியது.

## மார்க் போடு தலைவா!

தலைவர்கள் வரிசையா வர்ற லிஸ்ட்ல இந்த வாரம் மாட்டிக்கிட்டார் வைகோ!

நல்லா ஆற, அமர யோசிச்சு அமர்க்களமா மார்க்கைக் கணிச்சு அனுப்புங்க. மறக்காதீங்க, இந்தப் பக்கத்தை அப்படியே கத்திரிச்சு அனுப்பணும். கவர் மேல, 'மாண்புமிகு டாப் டென்-5'னு குறிப்பிடுங்க.

சிறப்பாக மார்க் போட்டவர்களுக்கு காத்திருக்கு டிக்கெட்! நான்கு பேர் அடங்கிய ஒரு குடும்பத்துக்கு சினிமா டிக்கட்!

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**கடைசி தேதி : 8.3.2004**



# வைகோ எப்படி?

| | தகுதி | முழு மதிப்பெண் | வைகோ பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | |
| 5. | மனித நேயம் | 10 | |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | |
| 7. | மேடைப் பேச்சு | 10 | |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | |
| | மொத்தம் | 100 | |

மாண்புமிகு டாப் டென் - 5

பெயர் ..........

முகவரி ..........

# நடக்கும்; நடக்கும்!

## அக்னிசர்மா பக்கம்

### பிப்ரவரி 25 முதல் மார்ச் 2 வரை

**மேஷம் :** குடும்பத்தில் எல்லா வகையிலும் மகிழ்ச்சி நிலவும். கலைத் துறைக்காரர்களுக்கு ஏற்றமான காலம். உத்தியோகம் சம்பந்தமான பயணம் அனுகூலம் தரும். மாணவர்கள் பீடுநடை போடுவார்கள்.

**ரிஷபம் :** நினைச்சதெல்லாம் நல்லபடியா நடக்கும். பணவசதிக்குக் குறைவில்லை. வெளிநாட்டுப் பயணம் அமையும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**மிதுனம் :** சுயதொழில் வியாபாரத்தில் அபிவிருத்தி உண்டாகும். அரசியல்வாதிகளுக்கு நல்ல திருப்பம் ஏற்படும். மக்கள் நலம் மேன்மை அடையும். தெய்வபலம் அதிகரிக்கும்.



"எனக்கு (மேஷம்) எல்லா வகையிலும் மகிழ்ச்சி யாம்!"

**கடகம் :** தாராளமான பண நடமாட்டம் இருக்கும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். கூட்டுத் தொழில்களில் முன்னேற்றம் தெரியும். சுபமங்கள காரியங்கள் நிறைவேறும்.

**சிம்மம் :** சட்டம், காவல், இராணுவத் துறைக்காரர்களுக்குப் பெயர், புகழ் கூடும். எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும். கோர்ட்டு விவகாரங்களில் அனுகூலமானத் திருப்பம் உண்டாகும்.

**கன்னி :** குடும்பத்தில் விருந்து, உபசாரம், கேளிக்கை என்று உற்சாகமான சூழ்நிலை இருக்கும். பெண்களின் எண்ணம் நிறைவேறும். மனை, நிலம், வீடு, வாகனம் அனுகூலம் தரும்.

**துலாம் :** தாமதமாகி வந்த சுபமங்கள காரியங்கள் நிறைவேறும். ஏற்றுமதி இறக்குமதி லாபம் தரும். புனித யாத்திரை செல்ல நேரிடும். அரசுப் பணியாளர்களுக்கு நல்ல நேரம்.

**விருச்சிகம் :** உடன் பிறந்தவர்களால் ஆதாயம் உண்டு. உத்தியோகஸ்தர்களுக்கு, புதிய பொறுப்பு உண்டாகும். எதிர்பார்த்த அரசாங்க உதவி கிடைக்கும். கணவன் - மனைவி அன்பு தழைக்கும்.

**தனுசு :** கடன் தொல்லைகள் மறையும். வேண்டிய இடத்துக்கு மாறுதல் கிடைக்கும். பிரபு தனவான்களின் ஆதரவு கிடைத்து குதூகலம் உண்டாகும். பிரார்த்தனை நலம் தரும்.

**மகரம் :** எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. சொத்து விவகாரங்கள் நன்மை தரும். பிற மதத்தினரால் ஆதாயம் உண்டாகும்.

**கும்பம் :** உற்சாகமான மன நிலை ஏற்படும். புனித ஸ்தல பயணம் மனநிம்மதி அளிக்கும். எதிர்பாராத பண வரவு உண்டு. புதிய தொழில் தற்போது வேண்டாம்.

**மீனம் :** பயணங்களில் எச்சரிக்கை தேவை. வாரத்தின் பின் பகுதியில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு, பின் நிவாரணம் ஏற்படும். சர்ப்ப சாந்தி, தான தருமம் நலம் தரும்.

# இதுதாண்டா பிரசாரம்!

*இப்போது பாரதிய ஜனதா தேசிய மகளிரணியின் துணைத் தலைவர்; எப்போதும் அம்மா ஆதரவாளர்... இந்தத் தேர்தல் அவருக்கு அல்வா மாதிரி அமைந்திருக்கிறது... 'இதுதாண்டா போலீஸ்' 'நான்தாண்டா எம்.எல்.ஏ' ஸ்டைலில் 'இதுதாண்டா பிரசாரம்' என்று சொல்லும் அளவுக்குத் திட்டமிட்டுப் புறப்பட்டுள்ளார். லேடி சூப்பர் ஸ்டார் விஜயசாந்தியை அவரது சென்னை இல்லத்தில் சந்தித்து, அரசியல் தடகளம் பற்றிப் பேசினோம்.*





***சமீபகாலமாக சத்தத்தையே காணோமே?***

அமைதியாகப் போராடுவதுதான் என் நிஜமான கேரக்டர். தவிர நான் பொறுப்பு வகிப்பது ஒரு தேசியக் கட்சியில். இதனால் மாநில அரசியல், மத்திய அரசியல் இரண்டிலுமே கவனம் செலுத்த வேண்டி இருக்கிறது. பெண்களுக்கான இட ஒதுக்கீடு, முன்னேற்றம், பஞ்சாயத்து ராஜ் என்று பல்வேறு தலைப்புகளில் விவாதிக்கப்படும் மாநாடு, கருத்தரங்குகளில் அடிக்கடி பங்கேற்க வேண்டியுள்ளது என்றாலும், தெலுங்கானா மாநிலம் வேண்டும் என்ற கோரிக்கைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறேன். அதில் அதிக கவனம் செலுத்துகிறேன்.

*ஆந்திராவில் தேர்தல் கூட்டணி அமைத்திருக்கும் தெலுங்கானா ராஷ்ட்ரீய சமிதியும், காங்கிரஸ் கட்சியும், தாங்கள் வெற்றி பெற்றால் ஆட்சிக்கு வந்த இரண்டே மாதத்தில் தெலுங்கானா மாநிலத்தை உருவாக்குவோம் என்று சொல்லி,*

களத்தில் இறங்கியிருக்கிறார்கள். ஆனால் உங்களது தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசு, நாயுடு விரும்பாத தெலுங்கானா பற்றி இதுவரை வாயே திறக்கவில்லை. ஆனால் நீங்கள் தெலுங்கானா பற்றி பேசுகிறீர்கள். இது என்ன காமெடி?

இதில் காமெடிக்கு இடமில்லை. தெலுங்கானா ரொம்ப சீரியஸ் பிரச்னை. ஐம்பதுகளில் ஆரம்பித்த தெலுங்கானா போராட்டத்திலிருந்து, இன்று வரை மக்கள் கேட்டுக் கொண்டேதான் இருக்கிறார்கள். ஆந்திரா மிகப் பெரிய மாநிலம். நிர்வகிப்பது கடினம். ஆந்திர மக்கள் தொகையில் நாற்பத்தைந்து சதவிகித மக்கள் தெலுங்கானாவில் வசிக்கிறார்கள். இந்தப் பகுதியில் உள்ள பத்து மாவட்டங்கள் மிகவும் பின் தங்கிய மாவட்டங்கள். இங்கே தண்ணீர்ப் பிரச்னை, விவசாயிகள் பிரச்னை என்று எதுவும் தீர்க்கப்படவில்லை. அரசின் திட்டங்கள் எதுவும் மக்களைச் சென்று அடைவதில்லை. தெலுங்கானா பிரிக்கப் பட்டால் நியாயம் கிடைக்கும் என்று மக்கள் நினைக்கிறார்கள். இது மக்கள் பிரச்னை. மக்களின் கோரிக்கை, இதை உணர்ந்துதான் ஆந்திர மாநில பி.ஜே.பி, 1998ல் காக்கிநாடா மாநில மாநாட்டில், தெலுங்கானா தேவை என்று தீர்மானம் போட்டது. ஆனால் காங்கிரஸ் இப்போது வோட்டுக்காகக் கூட்டு சேர்ந்து, வாக்குறுதி தருகிறார்கள். மத்தியில் பி.ஜே.பிக்கு அறுதிப் பெரும்பான்மை கிடைத்தால், தெலுங்கானா கிடைத்து



விடும். பொறுத்திருந்து பாருங்கள்.

*உங்களது தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசு, மகளிருக்கான முப்பத்து மூன்று சதவிகித இட ஒதுக்கீட்டைக் கொண்டு வர முடியவில்லையே?*

முப்பத்து மூன்று சதவிகிதமே குறைவு என்று நினைக்கிறேன். மக்கள் தொகையில் பாதிக்கும் அதிகமாக இருக்கிற பெண்களுக்கு, ஐம்பது சதவிகிதம் இட ஒதுக்கீடு கொடுக்கப்பட வேண்டும். *(போச்சுடா!)* இப்போதைக்கு முப்பத்து மூன்று சதவிகிதம் கிடைத்தால் பரவாயில்லை என்று பார்த்தால், எதிர்க் கட்சிகளின் ஒத்துழைப்பு இல்லை. லல்லு, முலாயம் போன்றவர்கள் முப்பத்து மூன்று சதவிகிதத்தில், பிற்பட்ட சமுதாயப் பெண்களுக்குத் தனி ஒதுக்கீடு கேட்டு முட்டுக் கட்டை போடுகிறார்கள்.

*தி.மு.க.-பி.ஜே.பி கூட்டணி இருந்த போதே ஜெயலலிதாவைத் தீவிரமாக ஆதரித்தவர் நீங்கள். இப்போது நீங்கள் விரும்பிய கூட்டணி அமைந்து விட்டது...*

கூட்டணியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அம்மாவை எப்போதுமே ஆதரிப்பேன். கடைசி வரை மதிப்பேன். தனிப்பட்ட முறையிலும் அம்மா மீது எப்பவுமே மரியாதை உண்டு. அவர் சிறந்த நிர்வாகி என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறார். சிறந்த மக்கள் ஆட்சியைத் தந்து கொண்டிருக்கிறார். அவருக்கு வரும் சோதனைகள் எல்லாம் தி.மு.க.காரர்களால் ஊதி ஊதிப் பெரிதாக்கப்பட்டவை. மக்கள் நலனுக்காக அவர் திட்டங்களைத் தீட்டி செயல் வடிவம் தரும்போதெல்லாம், தி.மு.க. காரர்கள் குறை சொல்கிறார்கள். குறுக்கே வருகிறார்கள்.

*இந்தியா டுடேயின் 'முதன்மை முதல்வர்கள்' கருத்துக் கணிப்பில், தமிழக முதல்வருக்குப் பதினேழாவது இடம் கிடைத்திருக்கிறது, தெரியுமா?*

அதே கருத்துக் கணிப்பில்தான் ராஜஸ்தான் முதல்வராக இருந்த அசோக் கெலாட்டுக்கு மூன்றாவது இடம் கிடைத்தது. அவர் தேர்தலில் தோற்றுப் போய், அங்கே இப்போது எங்கள் கட்சி ஆட்சியைப் பிடித்திருக்கிறது. ஒரு சில கருத்துக் கணிப்புகளை நம்பலாம். ஆனால் எல்லா கருத்துக் கணிப்புகளும் முழுமையான கருத்துக் கணிப்புக்கள் அல்ல.

## வந்தாரய்யா வருண்காந்தி!

பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிடத் தேவையான குறைந்த பட்ச வயது (25) கூட ஆகவில்லை, சஞ்சய் காந்தி - மேனகா காந்தியின் ஒரே வாரிசான வருணுக்கு.

கடந்த பாராளுமன்றத் தேர்தல்களில் அம்மா மேனகா காந்தியின் பிரசாரத்தின் போது, கூட சென்றவர் இன்று பி.ஜே.பியின் நட்சத்திர பிரசாரகராக வலம் வரப் போகிறார்.

கடந்த நான்கு பாராளுமன்றத் தேர்தல்களில், பிலிபெட் என்ற உ.பி. தொகுதியில் சுயேச்சை வேட்பாளராக நின்று வெற்றி பெற்ற போதிலும், இந்தத் தடவை பா.ஜ.க. வேட்பாளராகத்தான் போட்டி இடுகிறார் மேனகா. அம்மாவை பி.ஜே.பியில் சேரலாம் என்று தூண்டியவர் வருண்தானாம்!

"பிரமோத் மகாஜன் தொடர்ந்து வருணைச் சந்தித்துப் பேசி, அவரைக் கட்சியில் சேர சம்மதிக்க வைத்தார். அம்மாவைக் கட்சியில் சேர்க்கும் பொறுப்பையும் மகனிடமே விட்டு விட்டார்" என்கிறது பி.ஜே.பி. வட்டாரம்.

ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள ரிஷிவேலி பள்ளியிலும், டெல்லியில் உள்ள பிரிட்டிஷ் பள்ளியிலும் படித்தவர்

*வரவிருக்கும் தேர்தலில் நீங்கள் முக்கியமான பிரசார நட்சத்திரம் இல்லையா?*

நிச்சயமாக! ஆந்திரா, தமிழ்நாடு, கர்நாடகாவில் கட்டாயம் பிரசாரம் செய்வேன். கடந்த தொண்ணூற்று எட்டு நாடாளுமன்றத் தேர்தலின் போது ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளத்திலும் வலம் வந்தேன். மகாராஷ்டிராவில் திட்டமிட்டபடி போக முடியவில்லை. இந்த முறை தமிழ்நாட்டிற்கு அதிக முக்கியத்துவம் தருவேன்.

*உங்களது பிரசார உத்தி என்ன?*

என்ன செய்திருக்கிறோம் என்பதையும், என்ன செய்யப் போகிறோம் என்பதையும் எடுத்துச் சொல்வேன்.

*சோனியா வெளிநாட்டவர் என்ற பிரசாரம் உண்டா?*

வருண். மேற்படிப்புக்காக லண்டன் ஸ்கூல் ஆப் எக்கனாமிக்ஸுக்குப் போனார். அங்கே பொருளாதாரம் படித்திருக்கிறார்.

வருண் ஒரு கவிஞரும் கூட. அவரது ஆங்கிலக் கவிதைத் தொகுப்பு ஒன்று வெளியாகி உள்ளது. தலைப்பு: தி அதர்னஸ் ஆஃப் செல்ப். படிக்கிற நாட்களில் அரசியலில் ஆர்வம் காட்டியவரில்லை வருண்.

புதிதாகக் கட்சியில் சேர்ந்திருக்கும் வருண், தேர்தல் நேரத்தில் பிரசாரம் செய்ய கட்சியினால் பயன்படுத்தப்படுவார் என்பது தவிர, விரைவில் பி.ஜே.பி இளைஞர் அணியில் அவருக்குப் பொறுப்புத் தரப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மேனகா, வருண் இருவரும் கடந்த வாரம் காலையில் பிரதமர் வாஜ்பாயைச் சந்தித்து விட்டு, பின் பா.ஜ.க. அலுவலகத்துக்கு வந்தனர்.

பி.ஜே.பியில் சேருவதற்கான விண்ணப்பப் படிவத்தைக் கட்சித் தலைவர் வெங்கையா நாயுடுவே தன் கைப்பட நிரப்ப, இருவரும் கையெழுத்திட்டனர் என்பது ஒரு சுவாரசியமான உபரி தகவல்.

பா.ஜ.கவில் சேர்ந்த பின் பத்திரிகையாளர்களைச் சந்தித்த வருண் காந்தி, மிகுந்த அனுபவசாலி போல கேள்விகளுக்குப் பதிலளித்து, அனைவரையும் ஆச்சரியத்திலாழ்த்தினாராம்.

"குடும்பம் வேறு, அரசியல் வேறு, அரசியல் ரீதியாக எதிர்முகாமில் இருந்தாலும் சோனியா காந்தியையோ, சகோதர சகோதரியான ராகுல், பிரியங்காவையோ தாக்குவது என் வேலையில்லை. நான் பாசிடிவ் அணுகுமுறையை விரும்புகிறேன்" என்று கூறியிருக்கிறார்.

நம் ஊர் பாலிடிக்ஸில், இந்த பாலிஸி ஒர்க் அவுட் ஆகுமா?

- கௌதம்



• வாஜ்பாயுடன் வருண்காந்தி...

சோனியா, சட்டப்படி இந்தியாவின் குடிமகளாக இருக்கலாம். ஆனால் இந்தியப் பிரதமராக வரும் தகுதியோ, அரசியல் அனுபவமோ அவருக்கு இல்லை. கட்சித் தலைவர் பொறுப்புக்கு வந்து ஆறு ஆண்டுகள் ஆன பிறகு, பத்திரிகையாளர் சந்திப்பு நடத்தும் சோனியாவுக்கு, இந்திய மக்களைப் பற்றி என்ன தெரியும்? பிரதமர் பதவி என்பது ஜோக் இல்லை. அவர் காங்கிரஸ் கட்சிக்குத் தலைவராக இருக்கலாம். ஆனால் பிரதமராக வரக் கூடாது. வரவும் முடியாது. பிரசாரத்தில் இது முக்கியமான தாக்குதலாக இருக்கும். சோனியா பிரதமராக வரக் கூடாது என்று மக்களே விரும்புகிறார்கள். மக்கள் விருப்பத்தை, எண்ணத்தை, பிரதிபலிப்பதுதான் எங்கள் வேலை.

*நாடாளுமன்றத் தேர்தலில் நீங்கள் போட்டியிடப் போகிறீர்களா?*

மெடக், மெஹ்பூப் நகர், வாராங்கல் ஆகிய மூன்று தொகுதிகளில் ஏதாவது ஒன்றில் நான் போட்டியிட வேண்டும் என்று கட்சியில் விரும்புகிறார்கள். கட்சி உத்தரவிட்டால் கட்டாயம் போட்டியிடுவேன்.

பேட்டி: ஜெய்

அட்டை, படங்கள்: ஸ்ரீஹரி

# இலைகள்

தலை சாய்ந்திருந்த ரோஜாச் செடியை, பள்ளிக்குள் நுழையும் போதே கவனித்து விட்டார் கார்த்திகேயன்.

கீழே கிடந்த குச்சியை எடுத்துக் கொண்டு செடியின் அருகில் சென்றார். பூமியில் குச்சியை நட்டு, ரோஜாச் செடியை அதன் மேல் படர்த்தி, நேராக நிற்க வைத்தார். நேற்று பெய்த மழையால் குச்சி பூமிக்குள் எளிதாக இறங்கி யிருந்தது. கவலையில்லை.

அருகில் உள்ள செடிகளைக் கவனித்தார். மலர்ந்த முகத்துடன் சிரித்தன செடிகளும், பூக்களும். மனதுக்குள் பொங்கிய மகிழ்ச்சியுடன் அவற்றிற்குக் காலை வணக்கம் சொன்னார்.

இவர், சென்ற வருடம் இந்தப் பள்ளியில் ஆசிரியராகச் சேர்ந்த போது, பள்ளியின் முகப் பான இந்தப் பகுதி பொட்டல் வெளியா யிருந்தது.. இப் போது பள்ளியின் முன்புறமே அழ காக மாறிவிட்டது.

சிறு வயது முதலே பசுமையின் காதலன் இவர். கிராமத்திலேயே வளர்ந்ததால் மரங்களும், செடி களும், வயல் வெளிகளுமே இவரது நெருங்கிய நண்பர் களானார்கள். அருகில் நிழலாடவே திரும்பி னார். பள்ளியின் அட் டெண்டர்!

"என்ன மாரிசாமி?"

"ஹெட்மாஸ்டர் ஐயா கூப்பிடறாரு."

தலைமை ஆசிரியரின் அறைக்குள் நுழைந் தார் கார்த்திகேயன்.

"வாங்க கார்த்தி. உங்களுக்கு ஒரு சந்தோஷ மான பணியைத் தரப் போறேன்."

"சொல்லுங்க சார்."

தலைமையாசிரியர் தன் மேசை மேலிருந்த ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினார்.

"நம்ம மாவட்டத் தலைநகரிலே ஐயாயிரம் மரக்கன்றுகளை அமைச்சர் நடப் போறாராம். பசுமைப் புரட்சியின் செயல்பாடாம் இது. மழை இல்லாம நம்ம மாநிலத்திலே, குறிப்பாய் நகர்ப் புறங்களில் குடிக்கவே தண்ணீர் இல்லாம வறட்சி நிலவியதும் தான் அரசாங்கம் விழிச்சு, செயல்பட ஆரம்பிச்சிருக்கு."

கார்த்திகேயனும் செய்தித்தாளில்



இதைப் பற்றி படித்திருந்தார்.

மாவட்டத் தலை நகரங்களில் சிறு காடுகளை உருவாக்க அரசாங்கம் திட்டமிட்டுள்ளது. ஏற்கெனவே ஏழெட்டு நகரங்களில் திட்டத்தைச் செயல்படுத்தி விட்டனர். வருகின்ற ஞாயிற்றுக் கிழமை இந்த மாவட்டத் தலைநகரில் மரக்கன்றுகளை நடப்போகிறார்கள். மாணவர்கள் மத்தியிலும் மரவளர்ப்பு பற்றிய விழிப்புணர்வு வரவேண்டும் என்பதனால், ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் ஐம்பது மாணவர்களை அழைத்துச் செல்ல வேண்டும். அதற்காகத்தான் வந்துள்ளது இந்தக் கடிதம்.

"மாணவர்களை நம்ம மாவட்டத் தலை நகரத்துக்குக் கூட்டிச் செல்லும் பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்கிறேன் கார்த்திகேயன்."

**மா**வட்டத் தலை நகரமே விழாக் கோலம் பூண்டிருந்தது. நகரத்தின் வடக்குப் பகுதியில் தான் மரம் நடுவிழா.

பள்ளி, கல்லூரி, தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், அரசாங்க இயந்திரம் என்று எங்கு பார்த்தாலும் பரபரப்பும், சுறுசுறுப்புமாய்க் காணப்பட்டது.

மரம் நடுவதற்கு வசதியாய் ஒரு பெரிய மைதானம் தயார் நிலையில் இருந்தது. மைதானத்தின் முன்புறம் விழா மேடை அமைக்கப்பட்டிருந்தது.

பலவித பள்ளிச் சீருடை அணிந்து மாணவ, மாணவிகள் பட்டாம்பூச்சிகள் போல மைதானமெங்கும் திரண்டிருந்தனர்.

வரிசைக்கு இருபத்தைந்து கன்றுகள் வீதம் நட ஏதுவாய், குழிகள் தோண்டப்பட்டிருந்தன. செடிகளை நடுவதற்கு முன்னும், பின்னும் தண்ணீர் ஊற்ற, சமூக சேவகர்கள் ஒவ்வொரு வரிசையின் நடுவிலும் நீர் நிறைந்த வாளிகளுடன் நின்று கொண்டிருந்தனர்.



மண்ணுடன் சேர்ந்த சிறு கன்றுகள் பிளாஸ்டிக் பையில் போடப்பட்டு, ஒவ்வொரு குழிக்கு அருகிலும் வைக்கப்பட்டிருந்தன தரையில்.

கார்த்திகேயனின் பள்ளிக்கு இருபதாவது, மற்றும் இருபத்தோராவது வரிசையில் இடம் கிடைத்தது.

"ஹலோ கார்த்தி" என்று குரல் கேட்டுத் திரும்பினார். மூன்று வரிசை தள்ளி இவருடன் படித்த பிரபாகரன் நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

"சௌக்கியமா?" பரஸ்பர விசாரிப்புகள் முடிந்ததும், பிரபாகரன் சொன்னார் அலுப்புடன்.

"பெரிய கலைக் குடும்பம்னு சொன்னதை நம்பி பெண் எடுத்தது தப்பாப் போச்சு... இப்போ பயந்து பயந்து வாழறேன்..."

"ஏண்டா?"

"அவ வர்மக்கலை குடும்பத்தைச் சேர்ந்தவ!"

– ஜோசப் காமராஜ்



"வெட்டி வேலைப்பா இது!"

"என்ன பிரபாகர் இப்படிப் பேசறே?"

"ஐயாயிரம் கன்றுகளில், நிறையப் போலிகள். திடீர்னு அவ்வளவு மரக்கன்றுகளுக்கு எங்கே போறதுன்னு அதிகாரிகள் கேட்கறாங்க. சரி, இந்த நல்ல கன்றுகளை இப்ப ஊன்றிடுறோம். அதைப் பராமரிக்க என்ன ஏற்பாடு செஞ்சிருக்காங்கன்னு பார்த்தால் பூஜ்யம்தான்!"

கார்த்திகேயன் நம்ப முடியாமல் பார்த்தார்.

"என்ன பார்க்கற கார்த்தி?" என்ற பிரபாகர், "இந்தச் செடிகள் வளர தண்ணீர் வேண்டுமா, இல்லையா? சொல்லு!"

"அவசியம் வேணும்!"

"நாங்க இங்கே குடிக்கறதுக்கே தண்ணீர் இல்லாமல் அல்லாடறோம். தண்ணீர் என்பது எங்களோட தினசரி வாழ்க்கைப் பிரச்னையாகிட்டு வருது. அப்படியிருக்கும் போது இந்தச் செடிகளுக்குத் தண்ணீர் எப்படிக் கிடைக்கப் போகுது சொல்லு!"

பிரபாகரின் கேள்வியில் உள்ள நியாயம் சுட, கார்த்திகேயன் துடித்துப் போனார்.

எத்தனைச் செலவு, எத்தனை பேரின் உழைப்பு, கால விரயம் எல்லாமே, மண்ணோடு மண்ணாகிப் போய் விடுமா? திடீரென எழுந்த ஆரவாரக் கூச்சல், கார்த்திகேயனின் சிந்தனையைக் கலைத்தது. அமைச்சர் வந்து விட்டார்.

விழா தமிழ்த்தாய் வாழ்த்துடன் தொடங்கியது. மரங்களின் அவசியம் பற்றி அமைச்சர் அழுத்தந்திருத்தமாய்ப் பேசிக் கைத்தட்டலைப் பெற்றார். அமைச்சர் குனிந்து மரக்கன்றை நட, மொத்தக் கூட்டமும் கைதட்டியது. வீடியோ காமிராக்கள் சுழன்றன. ஒலிபெருக்கியில் உத்தரவிட, அனைவரும் தங்கள் அருகே உள்ள குழிகளில் கன்றுகளை நட்டனர்.

"இப்போது நான் நடும் கன்று, பிழைத்து, வளர்ந்து, செழித்து, விருட்சமாய் வளரட்டும்" என்று வேண்டிக் கொண்டு மரக்கன்றை நட்டார் கார்த்திகேயன்.

விழா நிறைவடைந்ததும் பிரபாகர் அருகில் வந்தார். கூட்டம் கொஞ்சம் கலையும் வரை இருவரும் பொதுவான விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது ஒருவர் இவர்கள் அருகில் வந்தார். பிரபாகருக்குச் சொந்தக்காரராம்!

"கார்த்தி இவர்தான் இந்தப் பெரிய மைதானத்தைச் சீர்திருத்திக் கொடுத்தவர். பெயர் சந்துரு. எனக்குப் பெரியம்மா மகன். அதாவது ஒன்றுவிட்ட அண்ணன்" என்று அறிமுகப்படுத்தினார்.

"ஆமாம் சார்! வேலை 'பெண்டு' வாங்கிடுச்சு. மேடு, பள்ளங்களை ஓரளவு சமதளமாக்கி, சுத்தம் செய்து, ஐயாயிரம் குழிகளுக்கும் மேலே வரிசையாய், இடம் விட்டு வெட்டி... அப்பப்பா, கிட்டத்தட்ட பத்து, பதினைந்து நாளாய் போர்க்கால அடிப்படையிலே வேலை செய்ய வேண்டியதாயிடுச்சு!"

கார்த்திகேயன் அந்தப் பெரிய மைதானத்தைச் சுற்றி வரப் பார்த்தார். உண்மையிலேயே பெரிய வேலைதான்.

"சரிங்க, இதுக்கு முன்னாலே இந்த இடத்துல என்ன இருந்துது?" கேட்டார் கார்த்திகேயன்.

"அதை ஏன் கேட்கறீங்க, ஒரே மரமும், செடியும், கொடியுமாய் காடு மாதிரி அடசலாய் இருந்ததுங்க. சுத்தம் செய்யறதுக்குள்ளே போதும், போதும்னு ஆயிடுச்சுங்க!" ○

# பர்கின்சன்ஸ் மருத்துவ சேவையில்
# (PARKINSONS DISEASE)

# PARKINSONS CENTRE

**பர்கின்சன் வியாதியின் குணங்கள்:**

* மூளையில் **Basal ganglion** என்ற பகுதியில் செல்களில் சுரக்கும் **dopamine** என்ற ரசாயனம் குறைவதால் மூளை நரம்புகளின் செயல்திறன் குறைகிறது. இதனால் மூளையின் கட்டளை செயல்பட தாமதமாகிறது. மேலும்
* கை நடுக்கம்
* விறைப்புத் தன்மை
* தசைகளின் செயல்திறன் குறைதல்
* மற்ற வேகக் குறைபாடுகள்

## இரண்டு வகையான ட்ரீட்மென்டுகள்

1. எங்கள் ஆஸ்பத்திரியில் 6 விதமான இயற்கை சிகிச்சைகள் தருகிறோம். மேலும் பர்கின்சன் ஹெர்பல் லேகியம் மற்றும் கேப்சூல் தருகிறோம்.

2. எங்களிடம் நேரில் வந்து சிகிச்சை எடுத்துக் கொள்ள முடியாதவர்களுக்கு, நோயாளியின் தற்போதைய மருத்துவ நிலையை தெரிந்து கொண்ட பின் பர்கின்சன் ஹெர்பல் லேகியமும், கேப்சூல்களும் அனுப்பி வைக்கிறோம்.

(எங்கள் பர்கின்சன் லேகியம் அமெரிக்கா, ஸ்விட்சர்லாந்து நாடுகளுக்கு அனுப்பி வருகின்றோம். படுக்கையில் இருந்தவர்கள் எழுந்து உட்கார்ந்து, நடக்கிறார்கள்.)

அன்புள்ள டைரக்டர் திரு. S.P. Naidu அவர்களுக்கு,

நான் கடந்த ஒரு வருடகாலமாக Parkinson's நோயால் பாதிக்கப்பட்டு, கை, கால்களில் விறைப்புத் தன்மை, கைகளில் நடுக்கம், நடக்கும் போது விழும் தன்மை, இவற்றால் படுத்த படுக்கையாக இருந்து, bedsore வந்து அவதிப்பட்டேன்.

தற்போது Adyar Nature Cure Center-ல் கொடுத்த Parkinson'sக்கான மூலிகை மருத்துவம் எடுத்துக் கொண்டபின் 30 நாட்களில் நல்ல முன்னேற்றம், அத்துடன் நடுக்கம், விறைப்புத் தன்மை குறைந்து என்னால் நடக்க முடிகிறது.

உங்கள் மூலிகை மருத்துவம் எடுத்தபின் ஆங்கில மருத்துவத்தின் அளவைக் குறைத்துள்ளோம். உங்கள் மருத்துவமனையில் வேலை பார்க்கும் டாக்டர்கள், நர்சுகள், இதர பணியாளர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி.

இப்படிக்கு,
நா. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள்
49, முதல் அவென்யூ, இந்திரா நகர், அடையார், சென்னை - 600 020.

இதர விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்

## ADYAR NATURE CURE CENTER™
Regd. Hospital

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 20.
Ph : 2441 3399, 2440 2470. Fax: 044-2491 6650
E-mail: adyarnaturecure@yahoo.com. web: www.adyarnaturecure.com

குறிப்பு: சாதா, A/c தங்கும் அறைகள் மற்றும் ஜெனரல் வார்டு, கலர் டீவி., போன் வசதியுடன் கிடைக்கும். பிராமணர்களால் தயார் செய்யப்பட்ட சைவ உணவு மட்டும் உண்டு. முன்பதிவு அவசியம்.

"எனக்கு ஒரு நாளைக்கு இருபத்து நாலு மணி நேரம் போத வில்லை. - இப்படிப் புலம்புவோரை நாம் நிறையப் பார்க்கிறோம். ஒரு ஹோட்டலில் தொழிலதிபர் ஒருவர் இவ்வாறு கூறக் கேட்ட அவரது நண்பர், உடனே 'வெயிட்டரை'க் கூப்பிட்டு ஒரு வெள்ளைத் தாளைக் கொண்டு வரச் சொன்னார். தாள் வந்ததும் அதைத் தொழிலதிபரிடம் கொடுத்து, "தினமும் இரவில், உறங்குமுன்பு அடுத்த நாள் நீங்கள் செய்ய வேண்டிய வேலைகளை இதில் எழுதுங்கள். மறு நாள் அவற்றைச் செய்யுங்கள். அன்றிரவு, எந் தெந்த வேலைகளைச் செய்ய முடியவில்லை, அதற்கான காரணங்கள், இவற்றை ஆராயுங் கள். மீண்டும் அடுத்த நாளைக்கான வேலை களைக் குறித்துக் கொள்ளுங்கள். இவ்வாறு திட்டமிட்டுக் காலத்தைச் செலவழியுங்கள்." ஒரு வாரம் சென்றது. நண்பரைச் சந்தித்தார் தொழிலதிபர். நண்பர், 'என்ன, நேரம் எப் படிப் போகிறது?' என்று கேட்டார். தொழிலதிபர் மறு பேச்சு பேசாமல் நண்பர் சொன்ன யோசனைக்காக ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டார்.

திட்டமிடலில் நீங்கள் செலவழிக்கும் ஒவ் வொரு நிமிடமும், செயல்பாட்டில் பத்து நிமிடங்களைச் சேமிக்கிறது. ஒரு வேலை யைக் கடினமாக உழைத்துச் செய்வதைவிட, அதைப் புத்திசாலித்தனமாகச் செய்வதுதான் விரும்பிய பயனை அளிக்கும்.

இப்பொழுதே கொஞ்சம் மூளையைக் கசக்கி, திட்டமிட ஆரம்பியுங்கள். எந்தப் பாடங்களை, எவ்வளவு நேரம், எந்தெந்த நாட்களில் படிப்பது என்று திட்டமிடுங்கள். தினமும் உறங்கப் போகுமுன்பு, ஒரு துண்டுச் சீட்டில் மறுநாள் படிக்க, எழுத வேண்டிய பாடங்கள் என்னென்ன, இவை ஒவ்வொன் றிற்கும் எவ்வளவு நேரம் ஒதுக்குவது, என்று திட்டமிடுங்கள். அடுத்த நாள் அதன்படி செயல்படுங்கள். தினமும் உறங்குமுன்பு, திட்டமிட்டபடி செயல்பட உங்களால் முடிந்ததா, இல்லையெனில் என்ன காரணம் என்று கண்டுபிடியுங்கள். தடைகளைக் களைய முயற்சி செய்யுங்கள். இந்தப் பரி சோதனை / பயிற்சி மிக முக்கியம். நீங்கள் எவ்வாறு செயல்பட்டுக் கொண்டிருக் கிறீர்கள் என்று இது உங்களுக்குக் காட்டும்.

# துண்டுச் சீட்டுத் திட்டம்!

திட்டமிடல் என்ற 'கண்ட்ரோல் ரூம்' மட்டும் இல்லாவிட்டால், இலக்கு என்கிற ஏவுகணை திசைமாறிப் போய்விடும். திட்டமிட்டுச் செயல்பட்டால் மட்டுமே, உங் கள் செயல் வேகமும், விவேகமும் நிறைந்த தாக அமையும்.

தேர்வு எழுத அறைக்குள் நுழையும் வரை மாணவர்கள் புத்தகத்தைப் புரட்டிக் கொண் டிருப்பது, ஒவ்வொரு தேர்வின் போதும் அரங்கேறுகின்ற கண் கொள்ளாக் காட்சி! இதற்குக் காரணம், திட்டமிட்டுப் படிக் காதது தான்.

திட்டமிட்டுக் கொண்டிருந்தால் நேரம் வீணாகிறதே என்று கவலைப்படாதீர்கள். இதனால் நீங்கள் இன்னும் சிறப்பாகச் செயல்பட முடியும்.

'துண்டுச் சீட்டுத் திட்டம் தினசரி சட்டம்!' என்ற புதியதொரு விதி செய்து கொண்டு, அதன்படி செயல்பட ஆரம்பி யுங்கள். வெற்றி கைக்கெட்டும் தூரம் தான் என்று புரிந்து கொள்வீர்கள்.

அடுத்த அத்தியாயத்தில் ஒரு புகழ் பெற்ற இயக்குநரோடு கைகுலுக்குவோம். தயாரா யிருங்கள்.

**தினசரி வேலைப் பட்டியல்**

(ஒரு சாம்பிள்தான் - உங்கள் தனிப்பட்ட தேவைக்கேற்ப நீங்களே தயாரித்துக் கொள்ளுங்கள்)

## பேராசிரியர் ப.இராம்கோபால்



1. காலைக் கடன் உடற்பயிற்சி / யோகா
காலை 5.00-5.40 மணி வரை

2. தியானம்
காலை 5.45-6.00 மணி வரை

3. இரவு படித்த பாடங்கள் நினைவு கூறல்
காலை 6.00-6.30 மணி வரை

4. எழுதிப் பார்த்தல்
காலை 6.30-8.00 மணி வரை

5. செய்தித் தாள் படித்தல், etc.,
காலை 8.00-8.20 மணி வரை

6. காலை உணவு
காலை 8.20-8.45 மணி வரை

7. பள்ளியில்...
காலை 9.15 மணி முதல்
மாலை 4.15 மணி வரை

8. நண்பர்களுடன் அரட்டை
மாலை 5.00-5.45 மணி வரை

9. தியானம்
மாலை 5.50-6.15 மணி வரை

10. எழுதுதல்
மாலை 6.15-7.00 மணி வரை

11. தொலைக்காட்சி
இரவு 7.00-8.00 மணி வரை

12. திருத்துதல்
இரவு 8.15-8.30 மணி வரை

13. குறைகள் ஆய்வு
இரவு 8.30-8.50 மணி வரை

14. இரவு உணவு
இரவு 8.50-9.00 மணி வரை

15. உலாவுதல் / அசை போடுதல்
இரவு 9.00-9.30 மணி வரை

16. புதிய பாடங்கள் படித்தல்
இரவு 9.30-10.55 மணி வரை

17. தளர்வுப் பயிற்சிகள் (Relax. Ex.)
இரவு 10.55-11.05மணி வரை

18. தூக்கம்
இரவு 11.05 முதல்
காலை 5.00 மணி வரை

**இந்த நாள்!**



**இனிய நாள்!**

(தொடரும்)




# படியுங்க பரிசு!

இந்த வாரம் சரியான விடை எழுதியவர்களில் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்:

**எம். அலிமாகனி**
**2/180, தெற்கு முஸ்லிம் தெரு,**
**கோவிந்தகுடி, (வழி) ஆவூர்,**
**கும்பகோணம்.**

**ஆறுதல் பரிசாக ரூ. 100/- பெறுபவர்கள்:**

1. பி. திருநாவுக்கரசு, நெல்லை - 1
2. பா.து.பிரகாஷ், தஞ்சை - 1
3. சுகுணா தினகர், சென்னை - 20
4. அ. ராஜா ரஹ்மான், கம்பம்
5. பா. காந்திமதி, நெல்லை
6. ஆர்.பி. ஜெயச்சந்திரன், ஊர்க்காடு
7. ஜி. கண்ணன், போரூர்
8. எஸ். சாரதாதேவி, அமைந்தகரை
9. சி.ஏ. நாராயணன், வேலூர்
10. லெ. கண்ணன், ஆரல்வாய்மொழி
11. சு. முருகன், சிதம்பரம்
12. டி.எஸ். சந்திரசேகரன், கோவை
13. எம். ரமேஷ் பாபு, கூனூர்
14. நா. பாலசுப்பிரமணியன், சென்னை - 40
15. டி.எஸ்.அனுராதா, தாம்பரம்
16. என். கனகராஜன், சமத்தூர்
17. வி.என். கோபால், பாரத் நகர்
18. கிருபா ஸ்ரீனிவாசன், சூரமங்கலம்
19. ஏ. முஹமது ஹுமாயூன், நாகர்கோவில்
20. மு. மஞ்சுளாதேவி, சேலம் - 4

**குவிஸ் போட்டி (12)க்கான விடைகள்:**

1. நாகணவாய்ப்புள் என்று இலக்கியத்தில் அழைக்கப்பட்ட பறவையின் தற்போதைய பெயர் **மைனா.**
2. ஆஸ்கர் விருது முதன் முதலில் வழங்கப்பட்ட ஆண்டு **1929.**
3. சிந்து சமவெளி நாகரிகத்தை வெளிப்படுத்திய புராதன நகரங்கள் **மொகஞ்சாதாரோ, ஹரப்பா** ஆகியன தற்போது **பாகிஸ்தானில்** உள்ளன.
4. 'பூஜ்யம்' என்ற எண்ணை கணித உலகிற்கு அளித்த நாடு **இந்தியா.**
5. பார்வையற்றவர்களுக்கான முதல் தமிழ் நூலகம் உள்ள இடம் **கோயம்புத்தூர்.**
6. தமிழகத்தில் சமீபத்தில் உருவாக்கப்பட்ட மாவட்டம் **கிருஷ்ணகிரி.**

பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்!

## வாழ்த்துகள்

'**ம**ன்மத ராசா'வுக்கு ஆட்டம் போட்ட சாயாசிங், மறுபடியும் வருகிறார். 'கவிதை' படத்தில் கதாநாயகி. மன்மதராசா போலவே, இதிலும் ஒரு கெட்ட ஆட்டம் உண்டாம். "காத்தவராயா! காத்தவராயா!" என்று தொடங்கும் அந்த ஏடாகூடப் பாடலை, இந்த முறையும் யுகபாரதிதான் எழுதி தமிழ்க் கவிதையை வாழ(?) வைத்திருக்கிறார். சாயா சிங்குடன் ஆட்டத்தைப் பகிர்ந்து கொண்டிருக்கும் அந்தப் புதுமுக நாயகர் வம்சி.

இயக்குனர் ஜி. கிச்சா, "சத்தியமா தலைப்பைக் கேவலப்படுத்துகிற மாதிரி படம் இருக்காது" என்று வாக்குறுதி தருகிறார். தேர்தல் நேரமாக இருக்கிறதே என்று யோசிக்க வேண்டியிருக்கிறது.

# காலம் கடந்த தீம்!



• 'குத்து' - திவ்யாவுடன் சிம்பு

**சு**ள்ளான்! "தலைப்பே கறுகறுப்பாக இருக்கு, தனுஷ்தான் அந்தச் சுள்ளானா?" படத்தின் இயக்குனர் திருமலையிடம் கேட்டால் 'வீட்டில் கடைசியா பொறக்குற பையனோ, பொண்ணோ, ரொம்ப வால் தனம் பண்ணுவாங்க. நானே நிறையப் பார்த்திருக்கேன். படத்துலே தனுஷ் பேரு சரவணன். சுள்ளெறும்புக் கூட்டுலே ஒரு சின்ன தூசி விழுந்தாக் கூட, கூட்டம் கூட்டமா வெளியே வந்து எதிரியைத் தேடும். நம்ம சுள்ளான் தனுஷும் அப்படித்தான். விக்ரமுக்கு சீயான் பட்டம் மாதிரி, தனுஷுக்குச் சுள்ளான் பட்டம் எப்படிப் பொருந்தப் போகுது பாருங்க" என்று உணர்ச்சி வசப்படுகிறார். நமக்கோ கேட்கக் கேட்க, சுள்ளென்று ஏறியது!



• 'அடிதடி' கோஷ்டியுடன் சத்யராஜ்

**மெ**ரீனா பீச். "எனக்கு பயமா இருக்கு! நான் வீட்டுக்குப் போறேன், விட்டுடுங்க!" என்று கையெடுத்துக்கும்பிட்டார் ரதி. யாரிடம் இப்படிக் கெஞ்சுகிறார் என்று பார்த்தால், துளி மேக்கப் இல்லாமல், விக் இல்லாமல், இயல்பான வழுக்கைத் தலை

பளபளக்க அங்கே நின்றிருந்தவர், நம்ம சத்யராஜ். 'அடிதடி' படத்தின் ஷூட்டிங். "மாநகரில் பெரிய அரசியல் செல்வாக்கோடு இருக்கிறவர் திருப்பதி. அதாவது கொஞ்சம் சுப்ரமண்யம் சுவாமியை பிரதிபலிக்கிற மாதிரியான ஒரு பவர்புல்(?) கேரக்டர். காதல், கல்யாணம் மாதிரி, எந்தவித ஆசாபாசத்திலும் சிக்காத திருப்பதி, கல்லூரி மாணவி பிரியாவைச் சந்திக்கிறார். காலம் கடந்து அவருக்குள்ளே காதல் தீ பெருக்கெடுத்து...." என்று கதையைச் சொன்னார், படத்தின் இயக்குனர் டி. ஷிவ்ராஜ். அப்புறம் எதற்கு படத்திற்கு 'அடிதடி'என்று தலைப்பு வைத்திருக்கிறீர்கள்?' என்று மடக்கினால், "இது மனசுக்கும், வயசுக்கும் இடையில் நடக்கிற அடிதடி" என்கிறார்.

அடியாத்தி!



• 'கவிதை'யில் சாயா சிங் - வம்சி



இப்போது சிம்புவை மொய்க்கத் தொடங்கிவிட்டனராம். "நல்ல கதை இருந்தா கிட்ட வாங்க, இல்லேன்னா எட்டப் போங்க" என்று தனது தந்தை பாணியில் சிம்பு டயலாக் பேச, இப்போது தயாரிப்பாளர்கள் கதை கதை என்று உதவி இயக்குனர்களைத் துரத்த ஆரம்பித்திருக்கிறார்களாம். நல்ல முன்னேற்றம்!

— ரவுண்ட்ஸ்பாய்



• சிந்து துலானியுடன் 'சுள்ளான்' தனுஷ்

**கோ**வில் படம், ஆரவாரமில்லாத அமைதியான வெற்றி சூட, தனுஷை முற்றுகையிட்ட தயாரிப்பாளர்கள்

"ஹலோ! திருநாவுக்கரசரா? வணக்கங்க."

"வணக்கம், செம்பியன்."

"என்னங்க இப்படி நடந்துபோச்சு..."

"கவலைய விடு; புதுக்கோட்டை எங்க போவுது! நான்தான் எங்க போயிட்டேன்...? தேவைப்பட்டா, தேவைப்படற நேரத்துல, மறுபடி கட்சி ஆரம்பிச்சு, தேர்தல்ல நின்னு ஜெயிக்கத் தெரியாதா எனக்கு?"

"அதென்னங்க, 'தேவைப்பட்டா'...?"

"இப்போதைக்கு என்னை வேற விதமா கவனிச்சுக்கிறதா கட்சித் தலைமை சொல்லியிருக்கு. நானும் தமிழ்நாட்டுல பி.ஜே.பி. வளர்ச்சிக்குப் பாடுபடறதா சொல்லியிருக்கேன். தேர்தலுக்கு நிற்காமலேயே, பிரசாரம் - பணச் செலவுன்னு இல்லாமயே பதவி கிடைக்குதுன்னா, கசக்குதா?"

"அதுசரி, அப்படி உங்களுக்குப் பதவி கொடுக்கிற சமயத்துல அம்மா புதுப்பிரச்னை கிளப்ப மாட்டாங்கன்றது என்ன நிச்சயம்?"

"அதை அந்த நேரத்துல சந்திப்போம்."

"என்னங்க, கட்சியை ஒட்டுமொத்தமா அப்படியே கொண்டு போய் பி.ஜே.பி.ல இணைச்சதுக்கு இதுதான் பிரதிபலனா?"

"சிண்டு முடியாதே!"

"சுலபமா ஜெயிக்கக் கூடிய ஒரு தொகுதியை, தெரிஞ்சே பறி கொடுக்கிறதுதான் கூட்டணி தர்மமா?"

"அதை போயஸ் தோட்டத்துல போய்க் கேளு" என்றார் திருநாவுக்கரசர்.

★★★



ஈமெய்ல் டு போயஸ் கார்டன்.

# செய்திகள்,

"பத்துக்கு ஏழு மார்க் கொடுத்து பாஸ் பண்ண வைச்சுட்டீங்க..."

"அந்த ஏழுல ஐந்தாவது ஜெயிச்சு, மறுபடி பாஸ் மார்க் வாங்கற வழியை கவனிக்கச் சொல்லு."

"எங்க... அதான் ஜெயிக்கிற தொகுதிகள்லாம் இல்லேன்னு கைவிரிச்சுட்டீங்களே... திருச்சி... தென்சென்னை... புதுக்கோட்டை..."

"சீச்சீ! புதுக்கோட்டைன்ற பேரையே சொல்லாதே! கொதிச்சுப் போயிடுவேன்!"

"திருநாவுக்கரசருக்காகவே அவ்வளவு கொதிச்சுப் போறதுன்னா, உச்ச நீதி மன்றம் உங்க வழக்கை பெங்களூர்லதான் நடத்தியாகணும்னு உத்தரவு போட்டப்ப எப்படி இருந்திருக்குமோ, உங்களுக்கு?"

"இன்டர்நெட்ல எரிமலைன்னு தேடிப்பாரு!"

இந்தச் செய்தியுடன் கூடவே கம்ப்யூட்டர் திரையில் சிவப்பு நிறம் படர ஆரம்பிக்க, பயந்துபோய் ஸ்விட்ச் ஆஃப் செய்து உறை மாட்டினேன்.

★★★

"ஹலோ, மிஸ்டர் ரூடி?"

"என்னப்பா, செம்பியன்! உன்னை மாதிரி பத்திரிகைக்காரங்கல்லாம் சேர்ந்து பண்ணின கலாட்டாவினால், இரண்டரை லட்ச ரூபாய்க்கு மேல்

# திரிப்பது செம்பியன்!

என்னுடைய சொந்தப் பணத்தை செல வழிக்கும் படியாகிவிட்டது!"

"கோவா, ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல குடும்பத்தோடு ஜாலியா இருந்தப்ப இதை நினைச்சுப் பார்த்திருக்க வேண்டாமா, நீங்க?"

"அடப் போய்யா, புது வருஷம் ஆரம்பிக்குதேன்னு கொஞ்சம் ஹாப்பியா இருந்துட்டேன், அது தப்பா?"

"அதுல தப்பு இல்லீங்க. மக்களோட வரிப் பணத்தை சொந்தச் செலவுக்கு வாரி விட நினைக்கிறதுதாங்க தப்பு. உங்க ரெண்டரை லட்சம் பில்லை ஏர்போர்ட் அத்தாரிடி கட்டணும்னு எதிர்பார்த்தீங்களே, அதுதான் கோளாறாப் போச்சு."





"அவனவன் மந்திரின்ற பந்தாவுல எத்தனை செலவு பண்றான்!... சொந்தப் பணத்தையா பயன்படுத்தறான்? பி.ஜே.பி.யின் தேர்தல் பப்ளிஸிட்டியே மக்களோட வரிப் பணத்துலதானே நடக்குது?"

"அதென்னவோ உண்மைதான். இப்ப கூட அத்வானிக்கு விமானப் படை விமானத்தைத் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்த அனுமதி வேண்டும்னு, தேர்தல் கமிஷனுக்கு மத்திய அரசு எழுதியிருக்காமே!"

"அதெல்லாம் பெரிய இடத்து விஷயம்பா... ஆளைவிடு!"

***

IA flight to Delhi.

"வாஜ்பேயிஜி...!"

"சீக்கிரம் சொல்லு; பிரசாரத்துக்குக் கிளம்பிக்கிட்டிருக்கேன். பூஜை வேளைல கரடி புகுந்த மாதிரி நுழைஞ்சிருக்கே..."

"கங்கிராட்ஸ் சொல்லத்தானுங்க வந்தேன். வருண் காந்தியை வளைச்சுப் போட்டுட்டீங்களே... சுத்தமான இந்திய ரத்தம் ஓடுது அவர் உடம்பிலே..."

"நேரு குடும்ப ரத்தம்! அதைச் சொல்லு!"

"அது சரி, வாரிசு அரசியலை காங்கிரஸ் வளர்க்கிறதா குற்றம் சாட்டிவிட்டு, இப்ப நீங்களே நேரு குடும்ப அரசியலுக்குத் துணை போறீங்களே..."

"நாங்களா போய்க் கூப்பிட்டோம்! அவங்களே வந்தாங்க, சேர்த்துக்கிட்டோம்..."

"நாளைக்கு ஒட்டகம் கூடாரத்துக்குள்ள நுழைஞ்ச கதையாகிடப் போகுது. ஜாக்கிரதை!" என்று எச்சரித்துவிட்டு, டாக்ஸி பிடித்துப் போய் அத்வானிஜி வீட்டுக் கதவைத் தட்டினேன்.

***

"என்னப்பா, கருணாநிதி சௌக்கியமா?" என்று கேட்டார் துணைப்பிரதமர்.

"என்னங்க, இது... கருடா சௌக்கியமான்ற மாதிரி கேட்கறீங்க..?"

"நீ கதையை மாத்தாதே! அவர் ஒருத்தர்தான் கௌரவமா எனக்கு அரசு விமானம் ஒதுக்கலாம்னு சொல்றாரு."

"தேர்தல் பிரசாரத்துக்குன்னு விமானம் கேட்க முடியாது, பாதுகாப்புக்குன்னு சொல்லி சமாளிக்கிறீங்க..."

"அதுக்குப் போய் எவ்வளவு யோசனை, எத்தனை எதிர்ப்பு... சேச்சே..."

"எதிர்கட்சிகளோட எதிர்ப்பு இருக்கட்டும்.... காங்கிரஸ் ஆட்சியில் இருந்தப்ப 'தேர்தல் சமயத்தில் பிரதமருக்கு அரசு விமானம் கூடாது. அது, எதிர்க்கட்சிக்கு இல்லாத சலுகை ஆளும்கட்சிக்கு கிடைத்ததாகிவிடும்'னு நீங்களே தேர்தல் கமிஷனிடம் வாதாடியிருக்கீங்களே...! ஹிந்து பத்திரிகை கொட்டை எழுத்துல எடுத்துக்காட்டியிருக்கே... பிரதமருக்கே கிடைக்கக் கூடாத சலுகை, துணைப்பிரதமருக்குக் கேட்கப் படலாமா...?"

"அது 1996; இது 2004. சூழ்நிலை எவ்வளவோ மாறியிருக்கு" என்றார் அத்வானி, குட்டுப்பட்ட வழுக்கைத் தலையைத் தடவியபடி.

"ஆமாமாம்; அன்று நீங்க எதிர்க்கட்சி, இன்று ஆளும் கட்சி" என்று கூறி, அவர் 'கெட் அவுட்' சொல்லுமுன், நானே 'அவுட் கேட்' நோக்கி விரைந்தேன்.

# சொப்பனம்

அமாவாசை இருட்டில் காட்டுக்குள் நடப்பது கூனனுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. கஷ்டத்தைப் பார்த்தால் முடியுமா? முடியாதுதான். ஆனால் கற்களும் சிறுசிறு முட்களும் அவனது ஆணிக் காலைப் பதம் பார்க்கையில், வலி 'விண்' ணென்று உயிர்வரை போய் வந்தது. செருப்பை மாற்றலாமென்றால் மேட்டுத் தெரு வம்பன், 'இன்னா தச்சிட்டேன், நாளைக்குத் தந்திருதேன்' என்று நாட்களை நகர்த்திக் கொண்டிருக்கிறான்.

தெக்கூட்டு வாத்தியார் மகன், வேண்டா மென்று போட்ட ரப்பர் செருப்புதான், தற் சமயத்துக்கு உதவிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதுவும் தேய்ந்து தேய்ந்து, குதிகால் படும் இடத்தில் இரண்டு ஒரு ரூபாய் அளவில் ஓட்டையாகி விட்டது.

கொம்பையாவும், பொந்தனும் மாயாண்டியுடன் பேசிக் கொண்டே வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறார் கள். அவர்களுக்கு ஈடாக கூனனால் நடக்க முடியவில்லை. மெதுவாகப் பார்த்து கற் களில்லாத இடத்தில் பாதத்தை வைத்து அழுத்திச் செல்வதில் தாமதம்.

"ஏல... கொஞ்சம் மெதுவாகப் போங்க..."

"மெதுவாவா? ஒன்னய யாரு வரச் சொன்னா... இப்படி ஆமை மாதிரி நடந்தா, நாளைக் குத்தான் தோணியாத் துக்குப் போவ முடி யும்?"

"சரிடே.... நீங்களாம் இளவட்டப் பயலுவோ... என்னால முடியுதா?"

"முடியலைனா சாக்கை மூடிட்டு சிமெண்டு களத்துல தூங்க வேண்டியது தான... சரியான எமத்தனா இருக்கியே..."

"நாளைக்கு நீங்களும் வயசாவிதாங்கறத மறந்துராதீங்கலே..."

"ஒங்கிட்ட வீணா கத பேச நேரமில்ல... சீக்கிரமா வந்து தொலை."

நடந்து கொண்டிருந்தார்கள். சிவ சைலத்திலிருந்து காட்டுக்குள் மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் தோணி யாறு. பாறைகளில் விழுந்து நொறுங்கி ஓயாமல் ஓடும் ஆற்றின் சத்தம், தனிச் சங்கீதம்.

காட்டுக்கு விறகு பொறுக்க, தேன் எடுக்க, யாருக்கும் தெரியாமல் சாராயம் காய்ச்சு பவர்கள், கருத்தப்பிள்ளையூர், சிவசைலம், கல்யாணிபுரம் பகுதி இளவட்டங்கள் என்று வந்தால் தான் மனிதவாடை.

உயரமான இந்த ஆற்றின் ஒரு கரையி லிருந்து மறுகரைக்குச் செல்ல, 'வின்ச்' வசதி கூட இருந்தது. பக்கத்தூர் பள்ளிக் கூடங் களிலிருந்து இங்கு டூர் கூட்டி வருவார்கள் மாணவர்களை. வின்ச்சில் ஏறி கரைக்கும் மறு கரைக்கும் செல்வதில் அவர்களுக்கு அலாதிப் பிரியம். ஆனால் ஒரு மழைக் காலத்தில் வந்த வெள்ளத்தில் 'வின்ச்' எங்கே போனதென்று தெரியவில்லை. அது போனதிலிருந்து பள்ளி மாணவர் களை இங்கு அழைத்து வருவதும் நின்று போனது.

தோணியாற்றின் சிறப்பே ஆற்றின் அருகிலிருக்கும் வீடு போன்றதொரு கரும் பாறை. அப்படியே அச்சு அச லாக பத்துப் பதி னைந்து பேர்



படுத்துறங்கும் அளவுக்குப் படுக்கையறை மாதிரியும், அருகிலேயே மூன்று பெரும் கற்களை அடுக்கி சமையலறை மாதிரியும், இயற்கை செய்து வைத்த வீடு. என்னதான் கொடும் மழை என்றாலும், சின்ன தூறல்கூட மேலே விழாத அளவுக்குக் கதகதப்பான பாறை.

இந்தப் பாறையின் அருகில் தான் மாயாண்டி அதைப் பார்த்தான். விறகு வெட்டி விட்டு, தலையில் கட்டோடு தண்ணீர் குடிக்க வந்தவன் திடுக்கென்று நின்றான்.

ஒரு முழ நீளம்தான். நல்ல உருட்டுக் கட்டை மாதிரி இருந்தது அந்தப் பாம்பு. ஊர்ந்து செல்லவே முடியாமல், மெதுவாக செடி தழைகளின் மேல் அசைந்து அசைந்து சென்றதைப் பார்த்தவன், ஒரு கல்லைத் தூக்கிப் போட்டுக் கொன்று விடலாம் என்றுதான் நினைத்தான். அடுத்த நொடி கோமுட்டித் தாத்தா சொன்னது ஞாபகத்துக்கு வந்தது.



"நம்ம கருப்பன் எப்படிப் பண்ணையாரு ஆனான்னு நெனைக்க? எவனுக்கும் அந்தக் கதை தெரியாதுலா, என்னைத் தவிர. அந்தக் காலத்துல நம்மள மாதிரி அத்தக் கூத்து வேலை பார்த்திட்டிருந்தவன்தான் அந்தப் பய. ஒரு நாள் மலைக்கு வெறவு பொறுக்கப் போனவன், ஒரு கெழட்டு நல்ல பாம்பைப் பாத்திருக்கான். அது எந்தப் பொந்துக்குள்ள போவுதுன்னு பார்த்துட்டு, அரவமில்லாம வந்துட்டான். அமாவாசை அன்னிக்கு யார்ட்டயும் மூச்சுக்காட்டாம அந்தப் பொந்துகிட்ட போனாம். நடு ராத்திரி பன்னெண்டு மணிக்கு பாம்பு வெளில வந்து, பொந்துகிட்ட நவரத்னங்களைக் கக்கிட்டு, அந்த வெளிச்சத்துல இரை தேடியிருக்கு. இவன் வசமா மாட்டுச் சாணியையும் கொண்டு போயிருக்காம்.

நவரத்னங்கள் மேல சாணியை வீசிட்டு பாம்பை அரிவானால ஒரே போடு. பெறவு அதை கொண்டுட்டு திருநெல்வேலியில ஒரு பெரிய ஆளுகிட்ட வித்திருக்கான். அடுத்த மாசமே ஊர்ல முக்காவாசி

வயக் காட்டை வாங்கிட்டான். இன்னும் ஏழு தலைமுறைக்கு அவனுக்கென்ன கவலை சொல்லு? இன்னைக்கு அவன் கிருதாயென்ன, மீசையென்ன, வயிறு வரை மாட்டுச் சங்கிலி மாதிரி தொங்குத செயின் என்ன? தோரணையென்ன? ஊர்ல எல்லாப் பயலும் அவன் பேச்சுக்குப் பயப்படுதாம்!''

ஆஹா, நாமும் பணக்காரனாக ஒரு வாய்ப்பு. சாமி கொடுத்த வாய்ப்பு. வீணாக் கலாமா? தூக்கிய கல்லை மெதுவாகத் தரையில் வைத்தான். பாம்பு இப்போது இடுக்குப் பாறைக்கருகில் இருந்த பொந்துக் குள் சென்று கொண்டிருந்தது. அடையாளம் கண்டுவிட்டான். தண்ணீர் குடிக்காமலேயே விறகுக் கட்டைத் தலையில் சுமந்து கொண்டு, ஊருக்கு வந்து விட்டான்.

வந்ததும் வராததுமா அவன் அழைத்தது கொம்பையாவைத்தான். சேக்காளி.

"ஒரு வெஷயம் பேசணும்டே..."

"என்ன எழவெடுத்த வெஷயம்?"

"ஆக்கங்கெட்டால இப்படிப்பேசாதல... தோணியாத்துப் பக்கத்துல ஒரு பாம்பைப் பாத்தேன். நிச்சயமா அது நவரத்னம் வச்சிருக்கிற பாம்புதான். சரியான கெழடு. இந்த அமாவாசைக்கு அமுக்கிட்டா, இனும நாமதான் இந்த ஊர்ல பணக்காரன்."

இதோ நடக்கத் தொடங்கிவிட்டார்கள். கொம்பையா கையில் டார்ச் லைட். பொந்தன் பசுஞ்சாண வாளியைத் தூக்க மாட்டாமல் தூக்கிக் கொண்டு நடந்தான்.

ஜில்லென்று குத்திச் சென்ற காற்றும் அருவியின் சத்தமும் இடத்துக்கு வந்து விட்டோம் என்பதை உணர்த்தின. மாயாண்டி சுறுசுறுப்பானான். உதட்டின் மீது கை வைத்து, யாரும் பேசக் கூடாது என்று சைகை செய்தான். பீடி குடிக்கக் கூட தடை போட்டிருந்தான். பீடியின் புகை உணர்ந்து பாம்பு வெளியே வராமலிருந்து விட்டால்... என்ற பயம்தான். அப்படியே பொந்திற்கு எதிரில் நால்வரும் குத்த வைத் தார்கள்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான சொப்பனங்கள் விரிந்தன.

கிடைக்கும் நவரத்னத்தில் மாயாண்டி சரியாகப் பிரித்துத் தராவிட்டால் கூட பொந்தனுக்குக் கவலையில்லை. அவனது கவலையெல்லாம் மாயாண்டியின் கொழுந்தியாளான கந்தம்மாவின் மீது இருந்தது.

'எங்க மாயாண்டி மச்சான் மனசு வச்சா தான் நம்ம கல்யாணமே நடக்கும்' என்று அவள் சொல்லியதிலிருந்து, மாயாண்டி எங்கே சென்றாலும் அவன் அழைக்காமலேயே ஒட்டிக் கொண்டு அலைகிறான் பொந்தன்.

கிடைக்கும் பங்கை அவனே வைத்துக் கொண்டு கந்தம்மாவை கல்யாணம் பண்ணிக் கொடுத்தால், வீடு பேறு அடைந்து விடுவானாய் இருந்தான் பொந்தன்.

ஆனால் கொம்பையாவின் கனவு வேறு மாதிரி இருந்தது.

"மாயாண்டி சரியான நப்பிப் பய. இவன் எப்படிச் சரியா பங்கு பிரிச்சுக் கொடுப்பான்? அவன் மட்டும் இதுல எக்குத் தப்பா ஏதாவது பண்ணுனாம்னா, சொட்டையை உரிச்சிடணும்'' என்று மனதோடு மல்லாடிக் கொண்டே வந்தான்.

கூனனுக்கு இதில் எந்தக் கவலையுமில்லை. மாயாண்டி சொந்தக்காரன்தான். அவன் பங்கென்று எவ்வளவு கொடுத்தாலும் லாபம் தான். துணைக்கு வந்ததற்கு அதுவாவது கிடைக்கும் என்ற நம்பிக்கை, அவனை பீடி குடிப்பதை விட சந்தோஷமாக மூச்சுவிட வைத்திருந்தது. பணம் வந்ததும் மேலப் பத்தில் ஆற்றுக் கரையோரமாக இரண்டு தோப்பையும், மனைவி ராசவுக்கு தேன் கூடு கம்மல் ஒரு ஜோடி

''ராப்பிச்சை வேடத்தில் நகர்வலம் போய்வந்த மன்னர் என்ன அலுத்துக் கிறார்?''

''அரண்மனைச் சமையலைவிட வெளில எவ்வளவோ நல்லாயிருக்குதுன்னு சொல்றார்!''

\- பம்மல் நாகராஜன்



யும், கிளிக் கூடு கம்மல் ஒரு ஜோடியும், ரெட்டை வடச் செயினும் வாங்க வேண்டும்.

இதைவிட மேலாக நவரத்னங்களின் மீதான கற்பனை அவனை ஆச்சர்யப் படுத்திக் கொண்டே போனது. பார்த்ததுமே கண்ணைப் பறிக்குமாமே? தங்கம் மாதிரி இருக்குமா? வெள்ளி மாதிரி இருக்குமா? அல்லது என்ன நிறத்தில் இருக்கும் என்ற கேள்வி வேறு மனத்துக்குள்.

**வே**று உலகத்துக்குள் சஞ்சரித்துக் கொண்டிருந்தான் மாயாண்டி. அடிவயிறு வரை சிங்கப் பல் பொதிந்த டாலர் பொருந்திய தங்கச் சங்கிலியுடனும், சட்டை யற்ற கருந்தேகத்தில் ஜரிகை மின்னும் நேரி யலுடனும், மீசையைத் திருகியபடி உலா வரும் பண்ணையாரின் உருவத்தில் தன்னைப் பொருத்திப் பார்த்தான் மாயாண்டி.

"ஏல, பொம்பளையோ தண்ணி புடிக்க எடத்துல உங்களுக்கு என்ன வேலை? போங்கல... போங்க. போய் சந்தையா மடத்துல போய் உட்காருங்க" என்று அவர் அதட்டும் தோரணையில் இப்போது இவன் முகம் இருந்தது.

ஊரைச் சுற்றிலும் பெரும்பாலான நிலப் பரப்பு இந்தப் பண்ணையாரிடம்தான் இருக்கிறது. இந்த நவரத்னங்கள் கிடைத்த பிறகு வேறு யார் நிலத்தை வாங்கலாம்? பண்ணையாரிடமே போய் 'அந்த கோவங்குள தென்னந்தோப்பை எனக்கு எழுதிக் கொடுத்திருங்க. எவ்வளவு தொகை வேணுமோ அதைத் தந்திருதேன்" என்று சொல்ல வேண்டும். ஊருக்கு நடுவில் ஒரு அரண்மனை மாதிரி வீடு கட்ட வேண்டும். அதைச் சுற்றித் தோட்டம் இருக்கலாமா? வேண்டாமா? சரி, இப்படி வீட்டையும் புதிது புதிதாகச் சொத்தையும் வாங்கினால் ஊரில் எவனுக்காவது சந்தேகம் வராதா? வரும்.

'முப்பாட்டன் சொத்து மலைக்குள்ள இருந்த விஷயம் இப்பதான் தெரிஞ்சது. அதை வித்துதான் இதை வாங்குதேன்' என்று பொய் சொல்லி இதைச் சமாளிக்க வேண்டும்.

சொப்பனங்கள் விரிந்து கொண்டே போயின.

**"ஏ**ல, மணியப் பாரு."

பன்னிரண்டு. இதுதான் பாம்பு வர வேண்டிய நேரம். இப்போது கொம்பையா சாணத்தைக் கையில் லாகவமாக வைத்துக் கொண்டான். பொந்தனின் கையில் தயாராக அரிவாள். மாயாண்டியின் கையில் டார்ச்.

இவர்கள் குத்த வைத்திருப்பதற்குப் பின்புறமாகச் செடி, செத்தைகள் அசைந் தால் கூனனுக்கு உடல் ஆடும். பாம்பு ஏற்கெனவே வெளியில் சென்று பின்பக்க மாக வந்து கடித்துத் தொலைத்து விட் டால்..?

கடிகார முட்கள் கவலையின்றி மணியை இரண்டு, மூன்று என்று கடத்திக் கொண்டி ருந்தன.

இதோ கிடைக்கப் போகிறது. கைக்கெட் டும் தூரத்தில்தான் காத்திருக்கிறது பணக்கார வாழ்க்கை, என்று நம்பிக்கை யுடன் அவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். ○




## ஹலோ பேசுங்க!

**சி**னிமா நட்சத்திரங்களோடு, 'சாட்' செய்வதெல்லாம் ரொம்பப் பழசு. இப்போது 'வெப் கான்பரன்ஸ்' வந்து விட்டது. இணைய தளம் வழியே பதினோரு டீ.வி. சானல்களை வழங்கி வந்த பெண்டாமீடியா நிறுவனத்தின் நம் டீ.வி. டாட் காமும், தமிழ் சினிமேக்ஸ் நிறுவனமும் இணைந்து இதை ஆரம்பித்திருக் கிறார்கள். இந்த நிகழ்ச்சிக்கு 'குளோபல் ஸ்டார் டைரக்ட்" (Global Star Direct) என்று பெயர் வைத்திருக்கிறார்கள். முதல் நிகழ்ச்சி யில் நடிகை குஷ்பு கலந்து கொண்டு, உலக லாவிய ரசிகர்களோடு பேசி மகிழ்ந்து இருக் கிறார்.

இணைய தளங்களில் நீச்சலடிக்கும் ரசிகர் கள், ஒவ்வொரு சனிக்கிழமையன்றும், நம் டீ.வியில் லாக் பண்ணினால் போதும், அன் றைய நட்சத்திரத்தோடு நேருக்கு நேர் இலவச மாகப் பேசலாம் என்கிறார்கள்.

• விஷுவல்

# கோஷ்டிப் பூசலை 'ஜனநாயகம்' என்கிறாரே ஜெயந்தி?



* கவிழ்ந்த கதை!



* அரிது அரிது!

● த. பரதன், திருவாரூர்

? பிளஸ் ஒன் மாணவி ஒருவர் கின்னஸ் சாதனைக்காக, தேசப்பிதா பற்றி ஒரு நாள் முழுதும் தொடர்ந்து எழுதியது ஆச்சர்யமில்லையா...?

! இருபத்து நாலு மணி நேரம் எழுதியது கின்னஸ் ஆற்றலாக விளங்கலாம்; ஆனால் என்ன எழுதினார் என்பதைப் பொறுத்துத் தான் அறிவாற்றலை எடைபோட முடியும்.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? தேர்தல் நெருங்கும் நேரத்தில் வேலை இழந்த அரசு ஊழியர்களை மீண்டும் பணியில் சேர்த்ததால் அவர்கள் வாக்கு அ.தி.மு.க.வுக்குக் கிடைத்துவிடுமா?

! கிடைக்காது என்பது ஜெயலலிதாவுக்கும் சர்வ நிச்சயமாகத் தெரியும். ஆனால் எதிர்க் கட்சிகள் அதைப் பெரிதாகப் பிரசாரம் செய்ய முடியாதல்லவா! வாயை அடைக்க, காயை நகர்த்தி விட்டார்.

● ஏ. ஜஹ்பர் காதர், விளாத்திகுளம்

? உலகிலேயே வசீகரமான பெண்ணாக ஐஸ்வர்யா ராய் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளாராமே...?

! அது மட்டுமா? 'டைம்' பத்திரிகை அட்டையிலே கூட இடம் பெற்றுவிட்டாரே... எல்லாம் ஒரு 'டைம்' தான்!

● வே.ந. கதிர்வேல், வேலூர் - 6

? 'எங்கள் கட்சி மிலிட்டரி மாதிரி. அம்மாதான் தலைமை கமாண்டர்' என்கிறாரே திண்டுக்கல் சீனிவாசன்?

! இதைப் பெருமைக்குரிய விஷயமாக நினைக்கும் அவரை நோவதா? பேச வைக்கிற தலைவரை நோவதா..!

● கா.அ. தாஜ்மஜீத், திருமயம்

? உமது நெஞ்சைத் தொட்டுச் சொல்லும்... வெளிநாட்டுக்காரரான சோனியா காந்தியால் இந்தியாவை ஆள முடியுமா...?

! ஆள முடியுமா என்பது வேறு, இந்தியாவின் கௌரவத்துக்கு ஏற்றதா என்பது வேறு. அதனால்தான் கட்சித் தலைமையோடு நின்றுகொண்டு ஆட்சிப் பொறுப்பை மன்மோகன் சிங் மாதிரியான, அதிகம் அரசியல் வண்ணமில்லாத, கறைபடாத நபரிடம் தந்துவிட வேண்டும் என்கிறேன்.



* சிதறடிப்புக்...



* ... கூட்டணி!

● கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர் ★

? தேர்தலில் வாக்குப்பதிவு சதவிகிதம் அதிகரித்தால் நல்லாட்சி மலரும் என்று



அமைகிறது. படித்தவர்கள், அறிவாளிகள் வாக்களிக்க முன்வரும் போதுதான், அறிஞர்கள் வேட்பாளர்களாக நிற்க முன் வருவார்கள். இல்லாதுபோனால், முழு நேர அரசியல்வாதிகள்தான் போட்டியிடுவார்கள்.

● கே. சம்பத், திருக்கழுக்குன்றம்

? ம.தி.மு.க. தே.ஜ. கூட்டணியிலிருந்து விலகிய பின்னரும், நண்பர் என்கிற முறையில் ஃபெர்னாண்டஸ் வை.கோ.வைச் சந்தித்திருக்கிறாரே...?

! அரிய பண்பு.

● உமரி பொ. கணேசன், மும்பை - 37

? திருமணமாகி சில ஆண்டுகளில்

• வசீகர வேளை!



• ராணுவ வீரர்!

சில அறிவு ஜீவிகள் சொல்கிறார்களே...?

! இது மிகவும் சரியான கருத்து. காரணம், வாக்களிக்காமல் இருப்பவர்கள், பெரும்பாலும், சிந்திக்கத் தெரிந்த நடுத்தர வர்க்கத்தினர்தான். இதன் விளைவாக, உணர்ச்சி அடிப்படையிலோ, அல்லது பெற்றுக் கொண்ட 'அன்பளிப்பு' அடிப்படையிலோ, எளியவர்கள் தேர்ந்தெடுக்கும் ஆட்சி



• மாற்று மார்க்கம்



• திறந்த வழி

குழந்தை பிறக்கா விட்டால் அந்தத் தம்பதிக்கு ஆள் ஆளுக்கு அறிவுரை கூறுகிறார்களே... அவர்கள் மனம் எவ்வளவு சங்கடப்படும்?

! திருமணத்தின் முதலும் இறுதியுமான இலக்கு, பிள்ளை பெறுவதுதான் என்பது நமது சமூகத்தில் பரவியுள்ள தவறான நம்பிக்கை. அதையும் மீறிய அர்த்தமுள்ள வாழ்வை, நிச்சயம் எந்தத் தம்பதியும் தேடிக் கொள்ள முடியும். இந்த உறுதி இருந்தால், சமூகத்தின் பார்வை அவர்களை பாதிக்காது.

• ஜி. ஆரோக்கியதாஸ்,
சென்னை - 15

? தராசு ஆச்சரியப்படுகிற விஷயம்...?

! பாகிஸ்தான் கிரிக்கெட் பயணத்தைக் குறித்து. இத்தனைக் குறுகிய காலத்தில் இத்தனை பெரிய நாடகம் நடந்து, இன்னும் முடியாமல் இருப்பதுதான்.

• கே.எல்.வி. நடராஜன்,
ஆதமங்கலம்புதூர்

? நம் நாட்டிற்கு எது பெரிய சவால்..? எது ஆறுதல்..?

! சவால் - மதவாத அரசியல். ஆறுதல் - கட்டுப்பாட்டில் இருக்கும் மக்கள் தொகை.

• எஸ்.கே. மூர்த்தி, கும்பகோணம்

? இரு துருவங்களாகச் செயல்பட்ட கிருஷ்ணசாமியும், திருமாவளவனும் ஒன்று சேர்ந்ததனால் சாதிக்கப்போவது என்ன..?

! வாக்குகளைச் சிதறடித்து பா.ஜ.க. - அ.தி.மு.க. கூட்டணிக்கு மறைமுகமாக உதவுவது.

• பா.சு. மணிவண்ணன்,
திருப்பூர் ❐

? தேர்தல் காலத்தில் உண்மையிலேயே பலனடையக்கூடியவர்கள் யார்..?

! ஆட்சியின் உத்தரவாதத்துடன் முழுப் பக்க கட்சி விளம்பரங்களை ஏராளமாகப் பெறும் பத்திரிகைகள்.

• கி. துரைசாமி,
மங்கலப்பட்டி

? காங்கிரஸின் கோஷ்டிப் பூசல் ஒரு வகையில் ஜனநாயகம்தான் என்கிறாரே ஜெயந்தி நடராஜன்?

! கெட்டது குடி! கதையையே புரட்டிப் போடறாரே! உட்கட்சி ஜனநாயகம் இலலாததால் தானே கோஷ்டிப் பூசல் உருவாகுது!

• மீனா முருகேசன், திருச்சி - 18

? "சில தலைவர்களிடம் கூட்டு என்று போனவர்கள் பொரியல் - வறுவல் ஆகி உள்ளனர்" என்று கூறும் ஜெயலலிதா, தம்மிடம் கூட்டு கேட்டு வந்தவர்களை நடத்திய பழைய கதைகளை மறந்துவிட்டாரா...?

! இப்போது புதிய கதை எழுத ஆரம்பித்திருக்கிறார்! திருநாவுக்கரசர் திருப்பம் நிகழ்ந்திருக்கிறது. போகப் போக கதை எப்படி வளர்கிறது என்பதை பி.ஜே.பி. புரிந்து கொள்ளும்.

• பி. செந்தில் குமார்,
கும்பகோணம்

? மொழி - இனப் பற்று, தேசப் பற்றின் எல்லையைத் தாண்டும்போதுதானே சிக்கல்..?

! அடுத்தவர் பற்றைக் குறைவாக மதிக்கும் பற்றினைப் பற்றாமல் இருந்தால், எந்தப் பற்றும் தவறில்லை. எந்தச் சிக்கலும் பற்றுவது இல்லை.

• ஆர்.ஜி. ராமன், திசையன்விளை

? ரஜினியின் பங்கேற்புக்கு வழிகள் எங்கே திறந்திருக்கின்றன..?

! தமது ரசிகர் மன்ற அன்பர்களைக் கட்டுப்படுத்தி நல்வழிப் படுத்துவதில்.

❐ ரூ.100 பரிசு பெறுபவர் :
பா.சு. மணிவண்ணன்,
184, தென்னம்பாளையம்,
திருப்பூர் - 641 604.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
கே. சண்முகம்,
சித்ரா ஸ்டோர்ஸ் மளிகை,
ஆதமங்கலம்புதூர் - 606 901.

# கோடி கோடி

**ராஜேஷ்குமார்**

**வை**கை சுவாசிக்க ஒரு விநாடி திணறிவிட்டு இளஞ்செழியனை ஏறிட்டாள்.

"நான் தயாநிதி அறக்கட்டளையின் தலைவர் நித்தியானந்தம் கிட்டேதான் பேசினேன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்...?"

"நான் இப்போ அங்கிருந்துதானே வர்றேன்...?"

"என்னது...! அங்கிருந்துதான் வர்றீங்களா..?"

"ஆமா...! போன வருஷம் மெட்டியோசை பத்திரிகையும், தயாநிதி அறக்கட்டளையும் இணைந்து நடத்திய மங்கையர் மறுமலர்ச்சி விழாவில் ஐம்பது இளம் விதவைகளுக்கு தையல் மிஷன் வழங்கினோம். அது சம்பந்தமா அவங்க சைடிலிருந்து ஒரு 'பேமெண்ட்' வரவேண்டியிருந்தது. கேட்கப் போனேன். மாடிப்படிகள் ஏறும்போதே உங்க பெயரும், சொஸைட்டி ஃபார் கேரிங் அண்ட் ஷேரிங் பெயரும் அவங்க பேச்சுல அடிபட்டது. 'இன்னும் ஒரு மணி நேரம் கழிச்சு அந்த வைகைக்கு ஃபோன் பண்ணி விஷயத்தை ஞாபகப்படுத்தணும்'ன்னு ஒருத்தர் சொல்ல, இன்னொருத்தர் 'காலையிலேயே ஃபோன் பண்ணியிருக்கலாமே'ன்னு சொல்லிட்டிருந்தார்."

"அப்புறம்...?"

"துண்டு துண்டா சில வார்த்தைகள் காதுல விழுந்தது... அதை வெச்சு விஷயத்தை ஓரளவுக்கு யூகம் பண்ணிட்டேன்..."

"என்ன யூகம் பண்ணீங்க...?"

"உங்க சோஷியல் சர்வீஸ் அமைப்புக்கு தயாநிதி அறக்கட்டளை அஞ்சு லட்ச ரூபாய் கொடுத்திருக்காங்க... அதுல ஃபிப்டி பர்சண்ட் கமிஷன் எதிர்பார்க்கிறாங்க... சரியா...?"

"சரிதான்..." வைகை மையமாய் தலையாட்ட, வாஷ் பேசினுக்குப் போய் கை கழுவிக் கொண்டு வந்த அர்ச்சனா, "வைகை! நீ பேசிட்டு வா! நான் செக்ஷனுக்குப் போறேன்... ஒரு ஸ்டேட்மெண்ட் காப்பியை அஞ்சு மணிக்குள்ளே தயார் பண்ணி, ஆர்த்தோ டிபார்ட்மெண்டுக்கு அனுப்பணும்" என்றாள்.

"சரி...! நீ போ அர்ச்சனா...! நான் ஒரு பத்து நிமிஷத்துக்குள்ளே வந்துடறேன்..."

அர்ச்சனா காண்டீனிலிருந்து இறங்கிப் போக, இளஞ்செழியன் சொன்னான். "அந்த தயாநிதி அறக்கட்டளை கிட்டத்தட்ட ஒரு கொள்ளை கும்பலின் கூடாரம். மூணு பேரும் ஃபிப்டி பர்சண்ட் கமிஷன் வாங்கியே எக்கச் சக்கமா சொத்து சேர்த்துட்டாங்க..."

"நீங்க அவங்களுக்கு கமிஷன் கொடுத்தீங்களா இளஞ்செழியன்?"

"பின்னே... கொடுக்காம இருக்க முடியுமா...? அவங்களை 'டச்' பண்ணினவங்க யாரும் கமிஷன் கொடுக்காமே இருந்துட முடியாது."

"நான் அவங்களுக்கு கமிஷன் கொடுக்கப் போறதில்லை."

"எ...எ...என்ன.... சொன்னீங்க...?"

"கமிஷன் கொடுக்கப் போறதில்லை..."

இளஞ்செழியன் தன் வலது கை கட்டை விரலையும், நடு விரலையும் இணைத்து ஒரு 'சொடுக்குப்' போட்டான். "ஹலோ..! மிஸ். வைகை! அந்த அறக்கட்டளை நபர்கள் மூணு பேரும் நல்லவங்க கிடையாது. அவங்க உடம்புல ஓடறது 'A' க்ரூப் ரத்தமும் கிடையாது 'B'க்ரூப் ரத்தமும் கிடையாது. 'V'க்ரூப் ரத்தம்.

" 'V'க்ரூப் ரத்தமா...?

"ம்... வயலன்ஸ் க்ரூப்."

"அவங்க உடம்புல ஓடறது எந்த வகை ரத்தமாய் இருந்தாலும் சரி. எனக்கு பயம் கிடையாது."

"வைகை! இது வீண் பிடிவாதம்... வம்பை விலை கொடுத்து வாங்காதீங்க..."

"வம்பை விலை கொடுத்து வாங்கினது நானில்லை இளஞ்செழியன். அந்த அறக்கட்டளை ஆட்கள்..! அவங்க கொடுத்த ஐந்து லட்ச ரூபாயை, எந்தெந்த சமூகக் காரியங்களுக்கு உபயோகப்படுத்திக் கிறதுன்னு நானும், அமைப்போட பிரஸிடெண்ட்டும் லிஸ்ட் போட்டுட்டோம்..."

இளஞ்செழியன் வைகையை ஒரு

# 6

பயப் பார்வை பார்க்க, அவள் சிரித்தாள். "உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? நான் பிறந்ததுமே எங்கப்பா எனக்கு வைச்ச பேரு தைரியலட்சுமி. நான்தான் காலேஜ் படிக்கும் போது என்னோட பேரை 'வைகை'ன்னு மாத்திக்கிட்டேன்."

"சரி... அவங்களால உங்களுக்கு பிரச்னை வந்தா அதை எப்படி சமாளிக்கப் போறீங்க...! போலீஸுக்குப் போவீங்களா...?"

"உங்க கேள்வியே தப்பு..."

"கேள்வி தப்பா...! எப்படி...?"

"அவங்களால எனக்கு எந்தப் பிரச்னையுமே வராது..."

"அது... எப்படி... நீங்க கமிஷன் தரலைன்னா அவங்களுக்குக் கோபம்

# மின்னல்கள்



வருமே...?"

"கோபம் வராது..."

"நீங்க பேசறது எனக்குப் புரியலை வைகை."

"நாளைக்குப் புரியும்" சொல்லிக் கொண்டே வைகை கிளம்ப முயல, மறுபடியும் அவளுடைய செல்போன் ரிங் டோனை வெளியிட்டது. எடுத்து டிஸ்ப்ளே யைப் பார்த்துவிட்டு உற்சாகமாய்க் குரல் கொடுத்தாள் வைகை.

"சொல்லுங்க ராஜா ஷெரீப்...! மீண்டும் ப்ளட் டோனர்ஸ் அஸோசியேஷனுக்கு நீங்க பிரஸிடெண்டா தேர்ந்தெடுக்கப்பட் டதை பேப்பர்ல போட்டோவோடு பார்த் தேன். மனசுக்கு ரொம்பவும் சந்தோஷமாய் இருந்தது. 'க்ரீட்' பண்ண உங்க செல்லை ட்ரை பண்ணினேன். அட் ப்ரசன்ட் 'நாட் ரீச்சபிள்'ன்னு மெஸேஜ் வந்தது. ஏதாவது வெளியூர் போயிருந்தீங்களா?"

"ஆமா... கோயமுத்தூர்ல 'ட்ரன்ட் செட்டர்ஸ்'ன்னு ஒரு சமூக அமைப்பு 'ரத்த சேமிப்பு வாரம்' கொண்டாடினாங்க. போயிட்டு வந்தேன்...!"

"வெரி நைஸ்...!"

"வைகை...! நான் இப்ப உங்களுக்கு போன் பண்ணினது ஒரு அவசரத் தேவைக்காக..."

"சொல்லுங்க... என்ன விஷயம்...?"

"உங்களுக்குத் தெரிஞ்ச நண்பர்கள் வட்டாரத்தில் யாருக்காவது A-1 நெகட்டிவ் க்ரூப் ரத்தம் இருக்கா...?"

" A-1 நெகட்டிவ்...?"

"ஆமா... ஒரு ஆக்ஸிடெண்ட் கேஸ். உடனடியா ஒரு ஆபரேஷன் பண்ண வேண்டிய கட்டாயம். இன்னும் ரெண்டு மணி நேரத்துக்குள்ளே 'ப்ளட்' வேணும். எங்க ப்ளட் டோனர்ஸ் லிஸ்ட்ல ரெண்டு பேருக்கு மட்டும்தான் A-1 நெகட்டிவ் க்ரூப். அதுல ஒருத்தர் இப்போ பிஸினஸ் விஷ யமா மும்பை போயிட்டார். இன்னொ ருத்தர் 'ப்ளட்' கொடுத்து 'ஒன் மன்த்'தான் ஆகியிருக்கு."

"மத்த ஹாஸ்பிட்டல என்கொயர் பண்ணிட்டீங்களா?"

"பண்ணிட்டேன்...! உங்க ஹாஸ்பிடல் உன்பட எல்லா இடத்திலும் ட்ரை பண்ணிட்டேன். பட் எங்கேயும் அந்த ப்ளட் க்ரூப் ஸ்டாக் இல்லை..."

"எவ்வளவு யூனிட் ப்ளட் வேண்டி யிருக்கும்?"

"இப்போதைக்கு ஒரு யூனிட் போதும்..."

"எந்த ஹாஸ்பிடல்...?"

"சபரி நர்ஸிங் ஹோம்..."

"ரெண்டு மணி நேரத்துக்குள்ளே 'டோனர்'ஹாஸ்பிடல்ல இருக்கணும் இல் லையா?"

"ஆமா..."

"டோன்ட் வொர்ரி ராஜா ஷெரீப்... இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே A-1 நெகட்டிவ் க்ரூப் உள்ள டோனர் சபரி நர்ஸிங் ஹோமில் இருப்பார்..."

"தேங்க்யூ... வைகை..."

வைகை செல்ஃபோனை அணைத்து விட்டு, தன் வேனிடி பேக்கின் ஜிப்'பைப் பிரித்து, ஒரு சிறிய பாக்கெட் டயரியை எடுத்து பக்கங்களைப் புரட்ட, இளஞ் செழியனின் குரல் கேட்டது.

"அப்ப... நான் கிளம்பட்டுமா மிஸ் வைகை?"

"ம்... கிளம்புங்க... என்னைப்பத்தி எந்தக் கவலையும் படாமே, உங்க ரிப்போர்ட்டர் வேலையைப் பாருங்க..."

"நான் கிளம்பட்டுமான்னு சொன்னது வீட்டுக்கு இல்லைங்க... சபரி நர்ஸிங் ஹோமுக்கு..."

வைகை டயரியிலிருந்து நிமிர்ந்தாள்.

"சபரி நர்ஸிங் ஹோமுக்கா... எதுக்கு?"

"எனக்கு A-1 நெகட்டிவ் க்ரூப் ப்ளட்."

"க்ரேட்...!" வைகை தன் இரண்டு கண்களையும் அகல விரித்து, எதிர்பாராத ஒரு விநாடியில் இளஞ்செழியனின் கையைப் பற்றிக் குலுக்கினாள்.

"பையன்கிட்ட 'பரீட்சையில கோட்டை விடாம பார்த்துக்கப்பா'னு சொல்லக் கூட பயமா இருக்குப்பா..."

"ஏன்?"

"நீ தேர்தல்ல கோட்டை விடாம பார்த் துக்கோன்'னு திருப்பிக்கிட்டானா?"

— எம். ஏ. அஜீஸ்

ஏதோ ரகசியம் பேசுகிற தினுசில் சென்னை விடிந்து கொண்டிருக்க, கடற் கரைச் சாலையில், டாக்டர் சர்வேஸ் வரனும், ஆதித்யாவும் 'ஜாக்கிங் சூட்'களில் வியர்வை மினுமினுக்க நடந்து கொண்டி ருந்தார்கள். இரண்டு பேர்களுக்கும் இடை யில் ஒரு வேண்டாத மௌனம் நீடித்ததை ஆதித்யா கலைத்தான்.

"என்னப்பா...! நான் கேட்டதுக்கு

பதிலையே காணோம்?"

சர்வேஸ்வரன் பெருமூச்சோடு ஆதித்யாவை ஏறிட்டார்.

"நீ கலிபோர்னியாவிலிருந்து வந்து இன்னும் ரெண்டு நாள் கூட ஆகலை... அதுக்குள்ளே மறுபடியும் அங்கே போறதைப்பத்தி பேச ஆரம்பிச்சுட்டே! நான் இதை எதிர்பார்க்கலை..."

"அப்பா...! நானே இதை எதிர்பார்க்கலை... ஒரு சக்சஸ்ஃபுல்லான ஃபைவ் ஸ்டார் ஹோட்டல், நான் 'கோட்' பண்ணியிருந்த விலைக்கு வருது. அதை வாங்கிப் போட்டு நிர்வாகம் பண்றதுல என்ன தப்பு?



ஹோட்டல் மானேஜ்மெண்டல எனக்கு எவ்வளவு இன்ட்ரஸ்ட் இருக்குன்னு உங்களுக்குத்தான் தெரியுமே...!"

"நீ ஹோட்டலை எடுத்து நடத்தறதைப்பத்தி எனக்கு எந்த ஆட்சேபணையும் கிடையாது. என்னோட கவலையெல்லாம் நீ கலிபோர்னியாவிலேயே செட்டில் ஆயிடக் கூடாதுங்கிறதுதான்..."

ஆதித்யா எரிந்தான், "அப்பா இன்னிக்கு இருக்கிற டெலி கம்யூனிகேஷன் டெக்னாலஜியில் இந்த உலகம் ஒரு சின்ன கிராமமா மாறிடுச்சு... வீடியோ டெலிபோன் வந்தாச்சு. நினைச்ச நேரம் என்னை நீங்க பார்க்கலாம், பேசலாம். நேர்ல பார்க்கணும்ன்னு நினைச்சா சில மணி நேர விமானப் பயணம் போதும்."

"இருந்தாலும்..."

"ப்ளீஸ் அப்பா... வெளிநாட்டில் ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலை வெற்றிகரமாய் நடத்தணும்ங்கறது என்னோட பல வருஷக் கனவு. அந்த கனவு கைகூடப் போகிற நேரத்தில் 'நோ என்ட்ரி' போர்டை மாட்டிடாதீங்க..."

நடந்து கொண்டிருந்த சர்வேஸ்வரன் நின்றார். "சரி... நீ கலிபோர்னியாவுக்கு எப்ப புறப்படணும்?"

"நாம நியமிச்ச பவர் ஏஜெண்ட் அந்த கலிபோர்னியா ஹோட்டல் டைரக்டரோடு பேசிட்டிருக்கார். ரேட் முடிவாயிட்டதால, இனிமேல் டாக்குமெண்டேஷன் வேலைகள்தான் பாக்கி... அந்த வேலைகள் முடிய எப்படியும் மூணு மாச காலமாயிடும்..."

"ஸோ... நீ மூணு மாசம் கழிச்சுத்தான் கலிபோர்னியாவுக்குப் புறப்பட வேண்டியிருக்கும்...?"

"ஆமா..."

"நீ கலிபோர்னியாவுக்குப் போய் செட்டிலாக விரும்பினா... நான் சொல்லப் போகிற ஒரு நிபந்தனைக்கு நீ கட்டுப்படணும்."

"நிபந்தனையா...?"

"யெஸ்...! நீ ஒரு கல்யாணத்தைப் பண்ணிகிட்டுத்தான் கலிபோர்னியாவுக்குப் புறப்படணும்..."

"அப்பா... அது... வந்து..."

"ஐ டோண்ட் வாண்ட் எனி எக்ஸ்ப்ளனேஷன்! நீ கல்யாணத்தைப் பண்ணிக்கிட்டு, உன் ஒய்ஃபோடு கலிபோர்னியா போறதாக இருந்தால் என் கையில் பச்சைக் கொடி. இல்லேன்னா சிவப்புக் கொடி. என்ன சொல்றே...? நீ 'எஸ்'ன்னு சொன்னா, இன்னிக்கே உன்னோட கல்யாணத்துக்காக பிள்ளையார் சுழியைப் போட்டுடுவேன். நம்ம ஸ்டேட்டஸுக்கு ஏத்த மாதிரி நிறையப் பெண்கள் இருக்காங்க... ஹை கோர்ட் சீஃப் ஜஸ்டீஸ் சாரங்கபாணியோட பெண்ணை, போன வாரம் ஒரு கல்யாணத்துல பார்த்தேன். பொண்ணு உண்மையிலேயே மஹாலட்சுமி தான். பார்த்துடலாமா?"

"அ...ப்...பா...!" ஆதித்யா குரலை இழுத்தான்.

"என்ன...?"

"அந்த மஹாலட்சுமியை யாராவது ஒரு சீனிவாசன் கட்டிக்கட்டும். எனக்கு..."

"உனக்கு...?"

"எனக்கு வைகை வேணும்."

(தொடரும்)

* பழனி ஜி. பெரியசாமி.

"மார்டின் கோவன் என்னோட நண்பர். 'கராத்தே கிட்'ங் கற ஹாலிவுட் படத்தின் ஹீரோ அவர். சமீபத்துல இந்தியாவுக்கு வந்திருந் தார். வந்ததுமே ஆச்சரி யப்பட்டுப் போனார். 'இந்தியான்னா ரோட் டைச் சுற்றிப் பாம்பு, பன்றி, யானைன்னு மிரு கங்கள் அலையும், குடிக்க தண்ணீர் கிடைக் காது'ன்னு சொல்வாங்க. இங்க வந்து பார்த்தா ஃப்ளோரிடா மாதிரி இருக்கே! அமெரிக்காவுல இருக்கற மாதிரியான ஹோட்டல்கள்லாம்கூட இருக்கே'ன்னு ஆச்சர்யம் அவருக்கு. 'நீங்க பார்த்தது ஒரு பகுதி தான். இன்னும் இதைவிட நல்ல இடங்



# "இந்தியான்னா தண்ணீர் கிடைக்காதே!"

களும் ஹோட்டல்களும் இருக்கு'ன்னு நான் சொன்னேன். நம்ம நாடு மீதான தப்பான அபிப்ராயம் அங்க இருக்கு. அதை மாற்ற ணும்" என்கிறார் லீ ராயல் மெரிடியன் ஹோட் டலின் சேர்மன் பழனி ஜி. பெரியசாமி.

2003ம் ஆண்டின் மனித வள மேம்பாட் டுக்கான விருதை, சமீபத்தில் பெற்றிருக்கிறது இந்த ஹோட்டல்!

"எந்த ஒரு இண்டஸ்ட்ரியும் டெவலப் ஆகணும்னா, அதுக்கு முக்கியமானது சர் வீஸ்தான். ஹோட்டலுக்கு வந்தா வாடிக்கை யாளர்கள் வீட்டுல இருக்கற மாதிரி உணர ணும். ஒரு நாளைக்கு ஆயிரம் பேர் வந்தாங் கன்னா, ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு விதமான மூட். அவங்களைச் சந்தோஷமா வச்சுக்கணும். இது யாரால முடியும்னா, இங்க வேலை பார்க்கறவங்களாலதான். அவங்க சந்தோஷமா இருந்தாதான், மற்ற வங்களைச் சந்தோஷமா வச்சுக்க முடியும். அதனால எங்க நிறுவனத்துல வேலை பார்க் கறவங்களோட அடிப்படைத் தேவைகளை உணர்ந்து, நாங்க பூர்த்தி பண்றோம். எங்க ஸ்டாஃபோட குழந்தைகள் படிப்புல டிஸ் டிங்ஷன் வாங்குனா, எங்க காலேஜ்ல இல வசமா என்ஜினியரிங் சீட் கொடுக்கறோம். ப்ளஸ் டூக்கு கீழே உள்ள குழந்தைகள்னா, இலவசக் கல்விக்கு ஏற்பாடு பண்றோம். பொதுவா ஹோட்டல் இண்டஸ்ட்ரியில என்னவெல்லாம் பண்றாங்களோ, அதைவிட அதிகமாவே பண்றோம். இங்க எல்லாருமே ஒரு குடும்பம் மாதிரிதான். இதனாலதான் இந்த அவார்டைப் பெற முடிந்தது" என் கிறார் பெரியசாமி!

இந்த ஹோட்டலுக்குத் தேவையான முக்கியமான முடிவுகளை, வேலை பார்ப் பவர்களே சேர்ந்து எடுக்கிறார்களாம்!





குன்னு சீசன் உண்டு. ஆனா இப்ப அப்படியில்லை. தகவல் தொழில் நுட்பம், லெதர், கார்மென்ட்ஸ், மோட்டார் ஆகிய துறைகள்ல சென்னையும் ஒரு முக்கியமான இடம் என்பதால், அதிகமானவர்கள் இங்க வந்து போயிட்டு இருக்காங்க. அதன் காரணமா, எப்பவும் ஹோட்டல்கள் நிரம்பி வழியற சூழ்நிலை தான் இருக்கு. சமீப காலமா, மத்திய மாநில அரசுகளின் முனைப்புனால டூரிஸம் முன்னேறியிருக்கு. கடந்த வருடம் டூரிஸ்டாக வந்தவர்களின் எண்ணிக்கையில் உலக அளவுல, இந்தியா மூணாவது இடத்துல இருக்கு. இன்னும் கொஞ்ச நாள்ல இந்த முன்னேற்றம் அதிகரிக்கும்னு எதிர்பார்க்கறோம். ஹோட்டல் துறைக்கு டூரிஸம் முக்கியம்'' என்கிறார் பெரியசாமி.

"இது பொய்யில்லை. இங்க பணியில இருக்கற யார்ட்டயும் நீங்க கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்'' என்றவர், இப்போதைய ஹோட்டல் இண்டஸ்ட்ரி பற்றிப் பேசினார்.

"ஹோட்டல் இண்டஸ்ட்ரி இந்தியாவுல இப்ப நல்லா இருக்கு. அதுவும் குறிப்பா சென்னையில. முன்பெல்லாம் நவம்பர்லயிருந்து மார்ச், ஏப்ரல் வரைக்கும் இதுக்

- அப்பு

படம் : ஸ்ரீஹரி

## மாண்புமிகு டாப் டென்-2 போட்டி முடிவு

ஆச்சரியம்தான்! சோனியாவுக்கு ஏறக்குறைய அதிகமான வாசகர்கள் ஒரே ரேஞ்சில் மார்க் போட்டிருக்கிறார்கள்.

பத்திரிகையாளர் சிகாமணியிடம் நடுநிலையாக மார்க் போடச் சொன்னோம். அவர் போட்ட மார்க் லிஸ்ட் படி, வாசகர்கள் ஐந்து பேர் சரியாகவே கணித்திருந்தார்கள். அதில் குலுக்கல் முறையில் டிக்கெட் வென்றவர்.

அ. பரஞ்சோதி
எலவம்பட்டி (அஞ்சல்)
ஜலகண்டாபுரம் (வழி)
ஓமலூர், சேலம் - 636 501.

'தினமலர்' சிகாமணி கொடுத்த மார்க் **50/100**

| | தகுதி | முழு மதிப்பெண் | சோனியா பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | 5 |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | 5 |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | 7 |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | 3 |
| 5. | மனித நேயம் | 10 | 6 |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | 6 |
| 7. | மேடைப் பேச்சு | 10 | 2 |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | 7 |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | 7 |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | 2 |
| | மொத்தம் | 100 | 50 |



* 'தினமலர்' சிகாமணி

# குறையொன்றுமில்லை

29

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பீஷணம் = பத்ரம் - இரண்டுமே நரசிம்ஹனுக்குரிய குணங்கள்.

பீஷண - பீகர என்று அவனை மந்திரங்கள் அழைக்கின்றன.

பீஷணம் மேலோங்குகிறபோது அவனைக் கிட்டே நெருங்க முடியாது.

பத்ரம் மேலோங்குகிறபோது ஓடி நெருங்கி வரலாம்.

நரசிம்ஹன் இவ்வாறு பத்ரனாகவும் இருக்கிறான், பீஷணமாகவும் இருக்கிறான்.

ஹிரண்யகசிபு மாதிரி இருக்கக் கூடியவர்களுக்கு பீஷண: பிரஹலாதன் மாதிரி இருக்கக் கூடியவர்களுக்கு பத்ர:

ஹிரண்ய கசிபுவாக நாம் இருந்தால்தானே பயப்பட வேண்டும்! பிரஹலாதன் மாதிரி இருந்தால் ஏன் பயப்பட வேண்டும்! இந்த எம்பெருமான் மாதிரி தயை படைத்தவர்கள் உண்டோ? அவனை மாதிரி காருண்யம் யாருக்கு உண்டு! இந்த அவதாரத்திலேதான் காருண்யம் அதிகம்.

முப்பத்து முக்கோடி தேவர்கள் பிரார்த்திக்க ராம, லக்ஷ்மண, பரத சத்ருக்னர்களாக நான்கு உருவிலே வந்தான்... ஆனால் ஒரு சின்னக் குழந்தை பிரார்த்திக்க, இங்கே லோகமெல்லாம் நிறைந்தான் நரசிம்ஹன். மற்ற அவதாரங்களைக் காட்டிலும் அவன் திருமேனி அழகிலே ஈடுபட்டு 'அழகியான் தானே' என்று பாடுகிறார் திருமழிசை ஆழ்வார்.

எப்படிப்பட்டவன் அவன்...?

அழகியவன்! அந்தத் திருமேனியைப் பாருங்களேன். 'க்ஷீரம் - சர்க்கரை சேர்த்தாற்போலே..' என்கிறார் பராசர பட்டர்! அதாவது, ஒருத்தர் நித்யம் பால் (க்ஷீரம்) பருகுவார்... ஒரு நாள் வெளியூர் போனார். போனால், அந்த கிருஹத்தில் பால் கொடுத்தார்கள். அவர் பிறந்தது முதல் இதுநாள் வரை அந்த மாதிரி பால் அவர் சாப்பிட்டதில்லை. ஏன்... இப்படி, இந்த கிருஹத்திலே மட்டும் இருக்கிறது? என்று பார்த்தால், அவர்கள் பாலில் சர்க்கரை போட்டுக் கொடுத்திருந்தார்கள். சர்க்கரை சேர்ந்த பாலைச் சாப்பிட்டவுடனே, 'ரொம்ப ருசியாக இருக்கிறதே' என்று நினைத்தவர், 'என்ன பண்ணினீர்கள்?' என்று கேட்டார்.

"சர்க்கரை சேர்த்தோம்" என்று அந்த கிருஹத்திலே சொன்னார்கள். மறு நாளிலிருந்து, இவருக்கு ஏற்கெனவே இத்தனை நாட்களாகச் சாப்பிட்டு வந்தாரே அந்தப் பால் - சர்க்கரை போடாத பால் - பிடிக்காமல் போய்விட்டது! சர்க்கரை சேர்த்த பால்தான் பிடிக்கிறது. 'அதைக் கொண்டு வாருங்கள்!' என்கிறார் அவர். 'அதைக் கொடுத்தால்தான் சாப்பிடுவேன்' என்கிறார்!

அந்த மாதிரி... நரமும் சிம்ஹமும் சேர்ந்த சேர்த்தி இருக்கிறதே... அது பாலும் சர்க்கரையும் சேர்ந்த சேர்த்தி! இதற்கு முன் நாம் வெவ்வேறு அனுபவித்தோம். நரசிம்ஹனை ஸேவித்த பிற்பாடு அதெல்லாம் புறக்கணிக்கப்படும். பாலும் சர்க்கரையும் சேர்ந்திருக்கும்படியான ரூபத்தைப் பார்த்த பிற்பாடு, மற்றொன்றைப் பார்க்க முடியுமா...? மற்றொன்றிலே மனது போகுமா! இவனல்லவோ பரம ருசி!' என்று மகான்கள் அத்தனை பேரும் ஈடுபடுகிறார்கள், அந்த திவ்யமான வடிவழகிலே... அதற்கு அழகான வியாக்யானமும் பண்ணுகிறாள் ருக்மிணிப் பிராட்டி. பொய்யில்லாத பெருமாள்



என்று அவனைக் குறித்து அவன் கூறியிருக்கிறான்.

'மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்' என்று ராமனைப் பாடிய ஆண்டாளையும், ரொம்பவும் ஆகர்ஷித்தவன் நரசிம்ஹன்தான்.

'அரிமுகன் அச்சுதன் கைமேல் என் கை வைத்து'... என்று ஆண்டாள் அவன் கரம் பற்றியதைத்தான் பாடுகிறாள்.

ருக்மிணிப் பிராட்டி 'நரலோக மனோபிராமம்' என்று நரசிம்ஹனை அழைக்கிறாள்.

ராமனோ, நரசிம்ஹனோ, கிருஷ்ணனோ... அந்தந்த நேரத்திலே பார்க்கிறபோது ருசிமிக்க அவதாரம்தான். இருந்தாலும், அந்தந்த அவதாரத்தைச் சொல்கிறபோது, நஹிநிந்தா நியாயத்தால், மற்றவற்றுக்கெல்லாம் குறை என்று அர்த்தம் இல்லை... பகவான், ஒவ்வொரு அவதாரத்தில் ஒவ்வொரு விதமாகக் காட்சி கொடுக்கிறான். நரசிம்ஹ அவதாரம் கொள்ளை கொண்ட மாதிரி, வேறு எந்த அவதாரமும் கொள்ளை கொள்ளவில்லை அந்த மஹாலக்ஷ்மியின் ஹ்ருதயத்தை. 'நரலோக மனோபிராமம்' என்றாளே ருக்மிணிப் பிராட்டி - எல்லா உயிர்களின் ஹ்ருதயத்துக்கும் ரம்மியமான ரூபம் உடையவன் நரசிம்ஹன். 'அலைத்த பேழ் வாய்' என்று அவனை வர்ணிப்பதைக் கண்டு நாம் பயப்பட வேண்டாம். சுவாமி தேசிகன் 'பிலவாய்' என்கிறார். குகை போன்ற வாய்! பிடரி மயிரும் பெரிய வாயும்...

அதையெல்லாம் பார்த்தால் பயமாக இராதா? என்றால், இல்லை! ரொம்ப ரம்மியமான மூர்த்தி அவன். கிட்டே நெருங்கி சேவித்தால் அவன் சுவபாவம் புரியும். தயாபூர்ண ஹ்ருதயம் அவனுடையது. அதனால்தான் அடியேனுடைய வாக்கிலே 'மட்டபல்லி நிவாஸாய மதுரானந்த ரூபிணே, மஹாயக்ஞ ஸ்வரூபாய ஸ்ரீ நரசிம்ஹாய மங்களம்' என்று ஸ்துதித்து வரவழைத்தான்.

மதுரானந்த ரூபிணே! - அந்த ரூபம் இருக்கிறதே... தீர்கமான நாசிகை - திருத்தமான மூக்கு எம்பெருமானுக்கு. மட்டபல்லி பெருமானின் மூக்கு

## அருள்வாக்கு

ஒவ்வோர் அவயவத்தாலும் ஏற்படக்கூடிய தோஷத்தைப் போக்கிக் கொள்ள அந்த அவயவத்தாலேயே செய்யக் கூடிய புண்ய கர்மாக்கள் இருக்கின்றன. குப்பைத் தொட்டியான மனஸை சுத்தம் பண்ண அந்த மனஸாலேயே த்யானம் செய்ய முடிகிறது. கண்டதைப் பேசுகிற நாக்கை



திர்வையைப் போய்ப் பார்க்க வேண்டும். என்ன அழகான மூக்கு எம்பெருமானுக்கு! மூக்கு பக்கத்திலே இருக்கிற இரண்டு நேத்திரமும் விசாலமான நேத்திரம் (கண்) 'ம்ருதோத்புல்ல விசாலாக்ஷம்' - எத்தனை பக்தர்கள் வந்தாலும் கொள்ளக் கூடிய திருநேத்திரம் எம்பெருமானுக்கு. எத்தனை பேரை வேண்டுமானாலும் அவன் விசேஷமாகக் கடாக்ஷிப்பான். அப்படிப்பட்ட திவ்யமான திரு நேத்திரமுடையவன். அத்தனை அழகாக அங்கே மட்டபல்லியிலே பார்க்கலாம்.

மது வித்யாபிரகரணத்திலே ஆராதிக்கப்பட வேண்டியவன் நரசிம்ஹன். 'அவனுடைய திருவடியிலிருந்து தேன் சொட்டுகிறது' என்கிறது வேதம். அவனை உபாஸனை பண்ணுகிறபோது, அந்தத் திருவடியிலிருந்து ஒழுகும்படியான தேனிலே நாம் மூழ்க வேண்டும்.

ஆவந்தி ஹோமம் என்று விசேஷமாக நடக்கும். உபநிஷத்தில் வரக்கூடிய வாக்கு - உயர்ந்த வாக்கு அங்கே ஜபிக்கப்படும் - மதுவாகிய தேன் எம்பெருமான் நரசிம்ஹனின் திருவடியிலே ஒழுகியவாறு இருக்கிறது. அந்தத் திருப்பாதத்தைப் பாருங்கள், பற்றுங்கள் என்று... இன்றைக்கெல்லாம் அவனை ஸேவித்துக் கொண்டே இருக்கலாம்.

இதைத்தான் பீஷ்மாச்சார்யார் ஸஹஸ்ர நாமத்திலே *'யோகோ யோக விதாம் நேதா ப்ரதான புருஷேஸ்வர:'* என்றார்.

நரசிம்ஹ தாபனீய உபநிஷத்துக்கு விசேஷமாக பாஷ்யம் எழுதிய ஆதிசங்கரர், ஞானேந்த்ரியங்கள் ஐந்தினாலே விசேஷமாக மனத்தை ஒருமுகப்படுத்திய யோகிகளின் ஹ்ருதயத்திலே, விசேஷமாகத் தெரியக் கூடியவன் நரசிம்ஹன் என்கிறார்.

யம, நியம, பிராணாயாம, ப்ரத்யாஹார, தாரண, ஆஸன, ஸமாதி என்கிற நிலையிலே இந்த அஷ்டாங்க யோகங்களைக் கையாளும் யோகயுக்தர்களுக்கு, எம்பெருமான் விசேஷமாய்க் காட்சி கொடுப்பான். அவனைத் தங்கள் ஹ்ருதய குகையிலே அவர்கள் பார்க்கலாம்.

நம்மாழ்வார் சொல்கிறார்:
*'பக்கம் நோக்கி அறியான் என் பைந்தாமரைக் கண்ணன்'*
என்று!

எம்பெருமான் அப்படி வைத்த கண் வாங்காது தன் பக்தர்களை, யோகிகளைக் கடாக்ஷிக்கிறானாம்.

திருக்குருவை காவலப்பன் என்ற யோகி, விசேஷமாக திருவேங்கடமுடையான் சன்னிதியிலே உட்கார்ந்து கொண்டு எம்பெருமானை தியானம் பண்ணிக் கொண்டிருந்தாராம். யோக தசையிலே அவர் இருக்கிறார். அப்போது, ஆளவந்தார் வம்சத்திலே - நாத முனிகள் வம்சத்திலே - தோன்றிய ஒருவர் அங்கே வந்து நின்றார். காவலப்பன் - யோகத்திலே இருக்கிறார். யோகம் என்றால் அது என்ன... எத்தகைய நிலை? பரமாத்மாவை இவர் பார்ப்பது; இவரைப் பரமாத்மா பார்ப்பது - இது இரண்டும் இந்த சரீரத்துக்குள்ளேயே நடக்கிறது. ஆகையினாலே, உள்ளே அந்தர்யாமியாக இருக்கும்படியான எம்பெருமானை ஜீவாத்மா பார்க்கிறது. அந்த எம்பெருமானை ஜீவாத்மா பார்க்கிற மாதிரி, பரமாத்மாவும் அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறான். - இது யோகிகளுக்கு உண்டான சக்தி. ஹ்ருதயத்திலே எம்பெருமானைப் பார்க்கிறார்கள். அப்படி அவர் நேருக்கு நேர் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

இவ்வாறு அவர் யோகத்திலே இருக்கிறார் என்று தெரிந்தவுடனே, வந்தவர் பேசாமல் அவர் பின்னாடி போய் உட்கார்ந்து கொண்டார். யோகம் கலைந்த பிற்பாடு அவரிடத்திலே பேசலாம் என்று இருந்தார்.

அப்போது என்னாயிற்று... காவலப்பரின் உள்ளுக்குள்ளே இருக்கிற எம்பெருமான், வந்தவரைத் திரும்பித் திரும்பிப் பார்க்

சுத்தப்படுத்திக் கொள்ள அந்த நாக்காலேயே பகவத் நாமாவைச் சொல்ல முடிகிறது. குயுக்தி எல்லாம் பண்ணும் மூளையை சுத்தமாக்கிக் கொள்ள, அந்த மூளையா லேயே தத்வ ஆராய்ச்சி பண்ண முடிகிறது. இப்படியே, இந்த சரீரத்தால் - கையாலும், காலாலும், உடம்பாலும் - எத்தனையோ தப்புத் தண்டா பண்ணுகிறோமல்லவா? அதை இந்த சரீரத்தாலேயேதான் சுத்தப் படுத்திக் கொள்ள வேண்டும். சரீரப் பிர யாசையாலேயே பண்ணிக் கொள்ளும் இந்த சுத்திதான், பொதுக்கார்யங்களான பூர்த்த தர்மங்கள் - ஸோஷல் ஸர்வீஸ் - அத்தனையும். சரீரப் பிரயாசையாலேயே இது சித்த சுத்தியையும் தரக் கூடியது. ஏனென்றால் சரீரத்தால் செய்கிற இந்தக் காரியங்களுக்கு மூலமாகப் பரோபகாரம் என்ற எண்ணம் நம் சித்தத்தில் இருப்பது தான்.

தயை என்பது ஒவ்வொருவர் மனஸிலும் இருக்க வேண்டிய உயர்ந்த குணம். அந்த தயைக்கு உருக் கொடுக் கும்படியான ஒரு கார்யத்தை சரீரத்தி னாலும் அவச்யம் செய்ய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

கிறானாம்! பின்னாலே போய் உட்கார்ந்த வரைப் பார்க்கிறானாம்!

தியானத்திலே இருந்தவருக்கு உடனே புரிந்து போயிற்று...! 'பகவான் நம்மைப் பார்க்காமல் வெளியிலே பார்க்கிறான்' என்று உணர்ந்து, அவருக்குள்ளே சந்தேகம் எழுந்தது. யாரோ யோக தசையிலே கைதேர்ந்த ஒருவர் வந்திருக்கிறார்... இங்கே... அவரை பகவான் பார்க்கிறான் என்று உணர்ந்து, தான் விழித்துக் கொண்ட பிற்பாடு,

"சொட்டை நம்பி வம்சத்திலே பிறந்த வர்கள் யாரேனும் இங்கே வந்திருக் கிறார்களா?" என்று கேட்டாராம்!

கேட்டதும், "இதோ, அடியேன் வந்திருக் கிறேன்" என்று எழுந்து வந்தாராம் பின்னால் அமர்ந்திருந்தவர்.

பக்கம் நோக்கி அறியாத பரமாத்மா பக்கம் பார்க்கிறான் என்றால், அந்த யோகிகள் வம்சத்தவர்தான் வந்திருக்க வேண்டும் என்று இவர் கண்டுபிடித்து விட்டார்.

நாதமுனிகள் யோக சாஸ்திரத்திலே மஹா நிபுணர். சித்தித்ரயம் என்ற விசேஷ மான அந்த விஷயத்தை விவரித்தவர்... யோகதசையிலே நம்மாழ்வாரை அவர் சாக்ஷாத்கரித்தார். அவ்வாறு சாக்ஷாத்கரித்த தாலே, இல்லாத பிரபந்தம் - மறைந்து போன பிரபந்தத்தையெல்லாம் நம்மாழ்வார் அவருக்கு யோக தசையிலே உபதேசம் பண்ணினார். அந்த நாதமுனிகளே அந்த உயர்ந்ததான திவ்யப்பிரபந்தத்தை உலகத் துக்குக் கொடுத்தார்.

*காலம் வலம்புரியென்ன நற்காதல்*
*அடியவர்க்கு*
*தாளம் வழங்கி தமிழ்மறை இன்னிசை*
*தந்த வள்ளல்*
*பூணும் தவநெறி ஊட்டிய நாதமுனி*
*கழலே*
*நாளும் தொழுதெழுவோம் நமக்கார் நிகர்*
*நானிலத்தே...!*

என்று நாதமுனி குறித்துப் பாடல் உண்டு.

தாளம் வழங்கி தமிழ்மறை தந்த வள்ளல் நாதமுனிகள். மேலயகத்தாழ்வான் கீழை யகத்தாழ்வான் என இரண்டு பேருக்குத் தாளத்தோடு தமிழ் மறையை உபகரித்தவர்!

அந்தத் தமிழ்மறை அவருக்கு எங்கே கிடைத்தது என்றால், யோகத்திலேயே கிடைத்துவிட்டது.

இப்படிப்பட்ட யோகிகளுடைய ஹ்ரு தயத்திலே நித்யவாஸம் பண்ணக் கூடியவன், ஸம்யோகமாக எப்போதும் யோகிகளுடைய ஹ்ருதயத்திலே இருக்கக் கூடியவன், சாமானியர்களுக்குச் சாதாரண கண் களுக்குப் புலப்படாதவன் அவன் என்பது தெரிகிறது.

இப்படிப்பட்ட யோகிகளுக்குள்ளே ஸர்வ சிரேஷ்டர்களாக இருக்கிறார்கள் பாருங்கள்... அவர்களுக்கெல்லாம் அதி நாயகனாய், அவர்களுக்கெல்லாம் தலை வனாய் இருக்கக் கூடியவன் எம் பெருமான். அதனால்தான் அவனும் யோக தசையிலே அமர்ந்திருக்கிறான்.

*'யோகோ யோக விதாம் நேதா'* என்பது இதையே குறிக்கிறது.

(வளரும்)





• லீனா மணிமேகலை

# மங்கிப்போன 'தங்கச் சங்கு'!

இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை இந்திய அரசு, 'மும்பை இன்டர்நேஷனல் ஃபிலிம் பெஸ்டிவல்' என்ற பெயரில் டாகுமென்டரி படங்களுக்கான திரைப்பட விழா நடத்துவது வழக்கம். இதில் இந்தியாவைச் சேர்ந்த டாகுமென்டரி படங்களைத் தவிர, அகில உலக அளவிலும் பங்கேற்பு இருக்கும். மிகச் சிறந்த படத்துக்கு 'தங்கச் சங்கு' விருது வழங்கப்படும். இதுவரை ஏழு திரைப்பட விழாக்கள் எந்தவிதப் பிரச்னையுமின்றி நடந்தன. இந்த வருஷம், வந்தது பிரச்னை!

இந்த விழாவுக்குச் சென்று வந்த டாகுமென்டரி இயக்குனர் லீனா மணிமேகலையிடம் பிரச்னை பற்றிக் கேட்டோம்.

"வரலாற்றில் இல்லாத வகையில், மத்திய அரசு, இம்முறை 'திரைப்பட விழாவில் பங்கேற்கும் இந்திய டாகுமென்டரிகள் சென்சார் செய்யப்படும்' என்று அறிவித்தது. டாகுமென்டரி படங்களில் பல வர்த்தக நோக்கமின்றி, பிரச்னைகளைப் பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்தும் ரகத்தைச் சேர்ந்தவை என்பதால், இது கருத்துச் சுதந்திரத்துக்கு தடைபோடுவது என்ற அடிப்படையில், கடுமையான எதிர்ப்பு எழுந்தது.

"இதன் பலனாக சென்சார் கண்டிஷன் விலக்கிக் கொள்ளப்பட்டது. ஆனால், இது வெறும் கண்துடைப்பு என்பது சீக்கிரமே வெட்ட வெளிச்சமாகியது. ஆளும் பா.ஜ.க. வுக்குத் தர்ம சங்கடம் ஏற்படுத்தும் படியான கோத்ரா பிரச்னை, நர்மதா அணை பிரச்னை, நாகா தீவிரவாதப் போராட்டம், என்று சுமார் ஐம்பது டாகுமென்டரிப் படங்களுக்கு, திரையிட வாய்ப்பு மறுக்கப்பட்டுவிட்டது.

"மத்திய அரசின் இந்தப் போக்கைக் கண்டித்து தேர்வுக் குழுவில் இடம் பெற்றிருந்த கிரிஷ்கர்நாட், தமிழகத்தின் மூத்த டாகுமென்டரி இயக்குனர் ஆர்.வி. ரமணி போன்றவர்கள், தேர்வுக்குழுவிலிருந்தே ராஜிநாமா செய்து விட்டனர்.

"அத்துடன் விஷயம் முடியவில்லை. அனுமதி மறுக்கப்பட்ட டாகுமென்டரிகாரர்களும், பிற கருத்துச் சுதந்திரப் போராளிகளும் ஒருங்கிணைந்து, மும்பையில், அரசு டாகுமென்டரி திருவிழா நடத்திய அதே நேரத்தில், அந்த அரங்கத்துக்கு எதிரிலேயே, தாங்களாகவே, டாகுமென்டரிப் படங்களைத் திரையிட்டு வெற்றிகரமாக விழா நடத்திவிட்டார்கள். இவர்கள் நடத்திய விழாவில் மேதா பட்கர், அருந்ததி ராய், விக்ரம் சேத், ராகுல் போஸ் போன்ற பிரபலங்கள் கலந்து கொண்டு கௌரவித்தனர்.

"அரசாங்கம் நடத்திய விழாவில் கலந்து கொண்டு பரிசு பெற்ற அயல் நாட்டு இயக்குனர்கள்கூட, அரசாங்கத்தின் அராஜகப் போக்கைக் கண்டிக்கத் தவறவில்லை."

**- மௌலி**

# சர்ச்சைகளின் தொகுப்பு!

சத்தமே இல்லாமல் முழுத் திரைக்கதையையும் எழுதி முடித்திருக்கிறார், நாடக வித்தகர் இந்திரா பார்த்தசாரதி. ஏற்கெனவே சேது மாதவன் இயக்கிய 'மறுபக்கம்' படத்திற்கு கதை, வசனம் எழுதியவர்தான் என்றாலும், இந்த முறை எழுதியிருப்பது ஓர் ஆங்கிலப் படத்திற்கு. படத்தை இயக்கப் போவது 'குட்டி' படத்தின் மூலம் திரும்பிப் பார்க்க வைத்த ஜானகி விஸ்வநாதன்.

"ஏற்கெனவே இந்தோ - அமெரிக்க கதையம்சத்தோடு நிறையப் படங்கள் வந்திருக்கின்றன. அமெரிக்க இந்தியர்களது புலம்பெயர் வாழ்க்கையை, அங்கே அவர்கள் சந்திக்கும் பல்வேறு கலாசாரப் பிரச்னைகளை, நையாண்டியாகவும், நகைச்சுவையாகவும், பிரசாரமாகவும் இந்தப் படங்களில் காட்டினார்கள். அந்த வரிசைப் படங்களில் 'பெண்ட் இட் லைக் பெக்காம்' போல வியாபார ரீதியாக வெற்றி பெற்ற படங்களும் உண்டு. ஆனால் நாங்கள் தரப்போகும் படைப்பு, இது போன்ற ஸ்டீரியோ டைப் இந்தோ - அமெரிக்கப் படமல்ல. முற்றிலும் புதிய கோணத்தில் அமெரிக்க இந்தியர்களின் திரிபு நிலை வாழ்க்கையை நியாயப்படுத்தும் சீரியஸ் முயற்சி. புதிய சூழலில், புதிய வளர்ப்பு முறையில், அங்கே நம்மவர்களின் வாழ்க்கை வேறுபட்ட, மாறுபட்ட வண்ணங்களோடு இருக்கலாம். ஆனால் இதை 'இந்தியர்களின் கலாசாரப் போராட்டம்' என்று வர்ணிப்பதிலோ, புலம்புவதிலோ அர்த்தமில்லை. இதுதான் இந்தக் கதையின் மையப்புள்ளி" என்கிறார் இந்திரா பார்த்தசாரதி.

"கடந்த 1992ல் தொடங்கி ஒவ்வொரு வருடத்திலும், குறைந்தது ஆறுமாத காலம் அமெரிக்க மண்ணில் தங்கி வாழும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்து வருகிறது. இங்கே நான் சந்தித்த இந்தியக் குடும்பங்கள், அமெரிக்கர்கள், ஆகியோரோடு எனக்கு நிறைய நேரடி அனுபவங்கள். இவற்றைக் கொண்டு நான் புதிய கோணத்தில் ஒரு கதையைச் சிந்திக்க முடியும் என்று, ஜானகி விஸ்வநாதன் என் மீது நம்பிக்கை வைத்து அணுகினார். அவருக்காக முதல் முறையாக திரைக்கதை எழுதியிருக்கிறேன்" என்று சொல்லும் இவர், "திரைக்கதை எழுதுவதில் உள்ள சுதந்திரம், நாடகத்தில் கிடையாது" என அனுபவம் பகிர்கிறார்.

படத்திற்கு இன்னும் தலைப்பு சூட்டப்படாத நிலையில், ஜானகி விஸ்வநாதன் தற்போது இயக்கி வரும் 'கனவு மெய்ப்பட வேண்டும்' பட வெளியீடு முடிந்ததும், புதிய படம் தொடங்குமாம்! நியூஜெர்சி, நியூயார்க் ஆகிய பகுதிகளில் ஒரே மூச்சில் படத்தை எடுத்து முடிக்கவும் திட்டமிட்டு இருக்கிறார்கள். படம் சர்ச்சைகளின் தொகுப்பாக இருக்கும் என்பதை ஒப்புக் கொள்கிறார் இந்திரா பார்த்தசாரதி!

– ஆர்.சி. ஜெயந்தன்



| ஸ்ரீ ராமஜெயம் | வடமாநில புனித யாத்திரை | 34 ஆண்டுகளுக்கு மேலான அனுபவம் |
|---|---|---|

**2.5.2004** 30 நாட்கள் கொண்ட காசி, நேபாளம், முக்திநாத், பத்ரி, கேதார் உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 11,800/-

**2.5.2004** 18 நாட்கள் கொண்ட காசி, நேபாளம், முக்திநாத் உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 7650/-

**7.5.2004** 24 நாட்கள் கொண்ட காசி, கயா, பத்ரி, கேதார் உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 8600/-.

**7.5.2004** 12 நாட்கள் கொண்ட காசி, கயா, ப்ரயாகை உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 5650/-.

**17.5.2004** 14 நாட்கள் கொண்ட ஹரித்துவார், ரிஷிகேஷ், பத்ரிநாத், கேதார்நாத் உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 6100/-.

**7.6.2004** 34 நாட்கள் கொண்ட காசி, கேதார்நாத், பத்ரிநாத், சிம்லா, குளு, வைஷ்ணவிதேவி உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 13,100/-.

**7.6.2004** 23 நாட்கள் கொண்ட காசி, கயா, பத்ரி, கேதார் உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 8500/-.

**7.6.2004** 12 நாட்கள் கொண்ட காசி, கயா ப்ரயாகை உள்ளிட்ட யாத்திரை - நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 5650/-.



ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராம்மணர்களைக் கொண்டு காலை - காபி, டிபன்; மதியம், இரவு உணவளிப்பதுடன் இங்கு குறிப்பிட்ட அனைத்துச் செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.

மேலும் விவரங்களுக்கு :-

## ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்

நெ.7, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. ✆ : 28440144

உரிமையாளர் : S. ஜெயராமன்

# நம்பூதிரி ஜோதிஷம்

## தெய்வீகம் - ஜோதிஷம் - பரிகாரம்

கேரளீய மாந்ரீக ஜோதிஷ அதர்வணவேத பண்டிட் T.V. புகழ்

## "பாலகாடு சூரியன் நம்பூதிரி"

*(வியாபார வசியம் - காரிய சித்தி - பிரச்சன்னம் - லட்சுமி ஆகர்ஷணம் - வசீகரம் - சத்ரு நிவாரணம் - துர்சக்தி சம்காரம் - சுபிட்ஷம் வழங்குகின்றார்)*

'முன் அனுமதியுடன்' கூடிய (கடித) தகவல் (நேரிடை) ஆலோசனைக்கு

16, பெருமாள் கோவில் தெரு, சைதாப்பேட்டை,
சென்னை - 600 015
Phone : 91/044 /22541257/ 55890284/ 098401-02001

குறிப்பு: வெளியூர் அன்பர்கள் ஜாதகம்/இல்லாவிடில் தங்கள் பிரச்னைகளை எழுதி சுயவிலாசமிட்ட கவருடன் ரூபாய் **201** ற்கான ***M.O/D.D*** யுடன், மற்றும் வெளிநாட்டு அன்பர்கள் ரூபாய் **501** ற்கான ***D.D*** யுடன் கடித தொடர்பு கொள்ளவும்.



# துரோகம்

அரசியல்வாதிகள், அரசியல், அரசு, அரசு ஊழியர்கள் என்ற நான்கும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. இவற்றைப் பொது நலம் அல்லது சேவை என்ற கயிறு பிணைக்க வேண்டும். அரசியலுக்கு வருபவர்களும், அரசுப் பொறுப்பை ஏற்றுக் கொள்பவர்களும், அரசு ஊழியர்களும் தன்னலம் கருதாதவர்களாக இருக்க முடியாதா என்ற கேள்வி எழலாம்.

தன்னலம் கருதாத அரசியல் தலைவர்கள் எல்லா நாடுகளிலும் இருந்திருக்கிறார்கள். இருபதாம் நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்த தலைவர்களின் வரிசையைப் பாருங்கள். வ.உ. சிதம்பரனார், சுப்பிரமணிய பாரதியார், ராஜாஜி, சத்தியமூர்த்தி, காமராஜர், அண்ணா, கக்கன், முத்துராமலிங்கத் தேவர் போன்ற தலைவர்கள், தங்கள் நலனையோ, தங்கள் குடும்பத்தின் நலனையோ கருத்தில் கொள்ளவில்லை. சொத்துச் சேர்க்கவில்லை. ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகவில்லை. இவர்கள் எல்லோரும் 'உயர்ந்த சிந்தனை, எளிய வாழ்க்கை' என்ற தத்துவத்தைப் பின்பற்றி வாழ்ந்தார்கள்.



• காமராஜர்

தன்னலம் கருதாத தலைவர்களைப் போலவே, தன்னலம் கருதாத அரசு ஊழியர்களும் இருந்திருக்கிறார்கள். இன்றும் இருக்கிறார்கள். 1985ஆம் ஆண்டில் நான் முதன் முறையாக அமைச்சர் பொறுப்பேற்றேன். பணியாளர் துறை, உள்துறை, வர்த்தகத் துறை, சட்டத்துறை, கம்பெனித் துறை, நிதித்துறை என்று பல்வேறு துறைகளில் அமைச்சராகப் பணியாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஒவ்வொரு துறையிலும் நூற்றுக்கணக்கான அரசு ஊழியர்களுடனும் அதிகாரிகளுடனும் பணியாற்றுவதற்கும், பழகுவதற்கும் எனக்கு வாய்ப்புக் கிட்டியது. குறிப்பாக, 'அரசுச் செயலாளர்' என்று, ஒரு துறையின் தலைவராக இருந்த உயர் அதிகாரிகள் பலருடன் நான் இணைந்து செயல்பட்டிருக்கிறேன். அவர்களில் மிகப் பெரும்பான்மையானவர்கள் அப்பழுக்கற்றவர்கள், நேர்மையானவர்கள் என்று என்னால் உறுதிபடக் கூற முடியும்.

மத்திய அரசுச் செயலாளர்களாகப் பல தமிழர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களில் பலர் என்னுடன் பணியாற்றியிருக்கிறார்கள். 1985ஆம் ஆண்டு முதல், என்னுடன் பணியாற்றிய சில தமிழ் அதிகாரிகளின் பெயர்களை நான் குறிப்பிட விரும்புகிறேன். இவர்கள் ஒவ்வொருவரும் திறமையானவர்கள் மட்டுமல்ல, மிக நேர்மையானவர்கள் என்றும் கூற விரும்புகிறேன்.



• பாரதியார்

என்னுடைய முதல் அரசுச் செயலாளர், பணியாளர் துறையிலிருந்த கே. ராமானுஜம். அதைத் தொடர்ந்து உள்துறைச் செயலாளர் கல்யாண கிருஷ்ணன்; தபால் துறைச் செயலாளராக உயர்ந்த எஸ்.கே. பார்த்தசாரதி; எல்லோருக்கும் அறிமுகமான, புகழ்பெற்ற டி.என். சேஷன்; நகர்ப்புற வளர்ச்சித் துறைச் செயலாளராகப் பதவி உயர்வு பெற்ற சிவராமகிருஷ்ணன்; சிவில் சப்ளைத் துறைச் செயலாளராக உயர்ந்த ஏ.கே. வெங்கடசுப்பிரமணியம்; வர்த்தகத் துறைச் செயலாளர் ஏ.வி. கணேசன், வருவாய்த் துறைச் செயலாளர் எம்.ஆர். சிவராமன்; செலவுத் துறைச் செயலாளர் சி. ராமச்சந்திரன்; கம்பெனித் துறைச் செயலாளராக இருந்த, இன்றைய தலைமைத் தேர்தல் ஆணையர்

# இழைக்கும் அரசியல்!

ப.சிதம்பரம்

டி.எஸ். கிருஷ்ணமூர்த்தி; பிரதமரின் செயலாளர் மீனாட்சி சுந்தரம்; அமைச்சரவைச் செயலாளர் என்று அரசுத் துறையின் தலைவராக இருந்த டி.எஸ்.ஆர். சுப்பிரமணியன்.

இவர்களைத் தவிர, கூடுதல் செயலாளர், இணைச் செயலாளர், துணைச் செயலாளர் என்று பல தமிழர்களுடன் நான் பணியாற்றியிருக்கிறேன்.



• அண்ணா



• வ.உ.சி.

அரசுச் செயலாளர் என்பது மிகப் பெரிய பதவி. ஒரு மாநிலத்தில் உள்ள அமைச்சரைவிடக் கூடுதல் அதிகாரம் செலுத்தக் கூடிய பொறுப்பு. கோடிக் கணக்கான ரூபாய்கள் புழங்கும் இடம். அதிலும் வருவாய்த் துறை, உள்துறை, பாதுகாப்புத் துறை என்றால், அந்தப் பதவிக்குரிய அதிகாரங்களும், செல்வாக்கும், சலுகைகளும் எண்ணிப் பார்க்க முடியாதவை. இந்தப் பொறுப்புகளில் இருப்பவர்கள் விரும்பியிருந்தால், கோடி கோடியாகப் பணம் சேர்த்திருக்க முடியும். ஆனால், நான் மேலே குறிப்பிட்டிருக்கும் தமிழர்கள் - இந்தியர்கள் - யாரும் அது போன்ற தவறான பாதையில் செல்லவில்லை. எந்தச் சபலத்திற்கும் ஆளாகவில்லை. அவர்கள் பதவியிலிருந்த காலத்திலும், இப்பொழுது ஓய்வு பெற்ற பிறகும் அவர்களுடைய புகழ் ஓங்கி நிற்பதற்குக் காரணம், அவர்களுடைய அப்பழுக்கில்லாத நேர்மை. அவர்கள் சேவையால் இந்தியா உயர்வு பெற்றது; அவர்கள் தமிழ் நாட்டுக்கும் பெருமை சேர்த்தார்கள்.

பதினைந்து ஆண்டுகள் கழித்து இது போன்ற ஒரு கட்டுரைத் தொடரை நான் எழுதினால், இன்னொரு தமிழர் புகழ் வரிசையை என்னால் குறிப்பிட முடியுமா என்று சந்தேகப்படுகிறேன். அரசியல் தலைவர்களாகட்டும், அதிகாரிகளாகட்டும் - நாணயம் குறைந்தவர்களாக, ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு உட்பட்டவர்களாக, சந்தேகத்திற்குரியவர்களாக, சொத்துச் சேர்த்துக் கொண்டவர்களாக, பல தவறுகளைச் செய்தவர்களாகவே காணப்படுகிறார்களே, ஏன்? பொது வாழ்க்கை, பொதுச் சேவை, பொது நலம் என்ற குணங்கள் எல்லாம் முற்றிலும் அழிந்துவிட்டன என்று கருதும் காலத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்தச் சரிவு எப்பொழுது ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது?

அமைச்சரவைச் செயலாளராக இருந்து 1998-ஆம் ஆண்டில் ஓய்வு பெற்ற திரு. டி.எஸ்.ஆர். சுப்பிரமணியன், தன்னுடைய நினைவுகளை ஒரு நூலாக எழுதி அண்மையில் வெளியிட்டார். இந்த நூல் ஒவ்வொரு அமைச்சருக்கும், ஒவ்வொரு உயர் அதிகாரிக்கும், கட்டாயப் பாட நூலாக இருக்க வேண்டும். தம்முடைய முப்பத்தேழு ஆண்டுக் கால அரசுப் பணிக்குப் பிறகு, அவர் காணும் இந்தியாவை - குறிப்பாக அரசுத் துறையை - மிகுந்த வேதனையுடன் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்.

"ஓர் இளம் அதிகாரி அரசுத் துறையில் நுழையும்போது ஆர்வமும், நேர்மையுமுள்ளவராக இருப்பதைப் பார்க்க முடிகிறது. ஆனால் அவர் வாழ்க்கைப் பாதையில் நடந்து போகும் போது, ஏதோ ஒன்று அவரை வேறு பாதைக்குத் தள்ளிவிடுகிறது.

"நான் பணியில் சேர்ந்தபோது நல்லாட்சி, நல்ல நிர்வாகம், என்ற உயர்ந்த நோக்கங்களுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட அரசியல் தலைவர்களும், அரசு ஊழியர்களும் மிகப் பெரிய எண்ணிக்கையில் இருந்தார்கள். ஆனால், இப்பொழுது காலம் மாறிவிட்டது. தராசுத் தட்டு தாழ்ந்துவிட்டது. இப்பொழுது

இருக்கும் ஆட்சி முறை, உளுத்துப் போன ஆட்சி முறை.

"சுதந்திர இந்தியாவில் ஒரு ஜனநாயக நாட்டுக்குத் தேவையான வரன்முறைகளை நாம் உருவாக்கிக் கொள்ளவில்லை. ஆகவே தான் இன்றைய நிர்வாகம் சீர் குலைந்து விட்டது.

"நான் நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்க்கிறேன். சில இனிய நினைவுகளைத் தவிர்த்து, நடைபெற்ற நிகழ்ச்சிகளையும், காலம் வடித்த மாறுதல்களையும் எண்ணிப் பார்க்கும்போது, ஒன்று தெளிவாகப் புரிகிறது : என்னுடைய வாழ்க்கையின் கதை என்னவென்றால், 'இந்திய மக்களுக்கு நாங்கள் பெரும் துரோகம் இழைத்துவிட்டோம்' "

இதைவிட வெளிப்படையாக யாரும் சொல்ல முடியாது. அப்பழுக்கற்ற, நேர்மையான, திறமையான, அரசுத் துறையின் தலைவராக இருந்த ஓர் அதிகாரியின் ஒப்புதல் வாக்கு மூலம், என்னை நிலைகுலையச் செய்து விட்டது.

இந்தியா சுதந்திரமடைந்து மூன்று தலைமுறைகள் முடிந்துவிட்டன. ஒவ்வொரு தலைமுறையிலும் தரம் குறைந்து வந்திருப்பதைப் பார்க்கிறோம். புதிய தலைமுறை அரசியல்வாதிகளும், புதிய தலைமுறை அரசு ஊழியர்களும், புதிய வழிகளில் ஊழலில் ஈடுபடுவதைப் பார்க்கிறோம். ஊழல் என்பதன் பரிமாணமே மாறிவிட்டது. முன்பு ஊழல் என்றால், ஏதோ பத்தாயிரம் ரூபாய் வாங்கினார், இரண்டு லட்சம் ரூபாயில் சொந்த வீடு கட்டிக் கொண்டார். நகை வாங்கினார் என்ற அளவில் இருந்தது. இப்பொழுது ஊழல் என்பது பன்னாட்டு வியாபாரமாக, கோடிக் கணக்கில் பணம் புழங்கும் வியாபாரமாக, பண்டைய கால மன்னராட்சியின் ஆடம்பர வாழ்க்கையாக மாறிவிட்டது.

தினசரிப் பத்திரிகைகளில் மூன்றாம் பக்கம் என்று ஒரு புதிய பக்கம் முளைத்திருக்கிறது. நல்ல வேளையாக ஹிந்து, தினமணி, தினமலர் போன்ற பழம்பெரும் பத்திரிகைகளில் இந்தப் பக்கம் இன்னும் தலைகாட்டவில்லை. 'மூன்றாம் பக்கக் கலாசாரம்' என்று ஒரு புதிய கலாசார வடிவமே தோன்றியிருக்கிறது. அரசியல்வாதிகளும், அரசு அதிகாரிகளும் மூன்றாம் பக்கத்தில் தங்கள் பெயர் வரவில்லை என்றால், தங்களுடைய அந்தஸ்து குறைந்துவிட்டது என்று நினைக்கத் தொடங்கிவிட்டார்கள். இந்த மூன்றாம் பக்கக் கலாசாரத்தின்படி,

- ஓர் அரசியல் தலைவர் மெர்சிடிஸ் பென்ஸ் காரில் வந்து இறங்குவது;
- ஓர் அரசு அதிகாரி ரூ.40,000 மதிப்புள்ள சூட், கோட் அணிவது;
- ஒரு நாடாளுமன்ற உறுப்பினர், ரூ.10 லட்சம் மதிப்புள்ள வைர மோதிரங்களைக் கொண்டு ஒவ்வொரு விரலையும் அலங்கரித்துக் கொள்வது;
- ஓர் அமைச்சரோ, நாடாளுமன்ற உறுப்பினரோ, ஆயிரம் பேருக்கு ஐந்து நட்சத்திர ஓட்டலில் (தலைக்கு ஆயிரம் ரூபாய் செலவில்) விருந்தளிப்பது;
- அமைச்சர்கள் தனியாருக்குச் சொந்தமான தனி விமானங்களில் பயணம் செய்வது;
- ஒரு தொழிலதிபரின் இல்லத் திருமணத்தில், நூறு கோடி ரூபாய் செலவில் நடைபெறும் ஆடம்பர நிகழ்ச்சிகளில், பிரதமர் முதல் நூற்றுக்கணக்கான அரசியல்வாதிகளும், அரசு அதிகாரிகளும் கலந்து கொள்வது...

- இவையெல்லாம் இருபத்தியோராம் நூற்றாண்டுக்குக் கட்டியம் கூறும் பொது வாழ்க்கை ஒழுக்கங்களாகிவிட்டன!

இவைதாம் இந்த நூற்றாண்டின் பொது வாழ்க்கை ஒழுக்கங்கள் என்றால், இந்த நூற்றாண்டின் அரசியலும், இந்தியாவுக்குப் பெரும் துரோகம் இழைக்கும் அரசியலாகவே இருக்கும் என்று கூற விரும்புகிறேன்.

இருபதாம் நூற்றாண்டில் இழைக்கப்பட்ட துரோகத்தின் விளைவாக, இன்னும் இந்தியாவில் சுமார் நாற்பது கோடி மக்கள் வறுமையின் கோரப்பிடியில் இருக்கிறார்கள். இருபத்தியோராம் நூற்றாண்டிலாவது அந்த அவல நிலைமை மாற வேண்டும் என்று விழையும் தலைமுறையைச் சார்ந்த இளைஞர்கள் முன், நான் ஒரு கேள்வியை எழுப்ப விரும்புகிறேன்.

**புதிய அரசியல் ஒழுக்கத்தையும், பொது வாழ்க்கை நெறிகளையும் கொண்டு வருவதற்கு, உங்கள் பங்களிப்பு என்ன?**

(தொடரும்)

---

"புதுசா காலட்சேபம் பண்ண வந்திருக்கார் போலிருக்கு.. நிலையாமை பற்றி அருமையாப் பேசிக்கிட்டிருக்காரே!"

"ஆமா, டிஸ்மிஸ் ஆன அரசு ஊழியர்களில் ஒருவர்! இப்படி மாறிட்டார்!"

- உ. ராஜாஜி



- எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதற வாசகருக்கு ரூ.10,000 பரிசு!
- நிறையப்பேர் சரியான விடைகளை எழுதிட்டா,



# ஆஹா! ரூ.10,000 பரிசு!

குலுக்கல் முறையில்தான்.

- ஆறுதல் பரிசு 20 பேருக்கு தலா ரூ. 100/-
- முதல் பரிசுத் தொகை வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
- உறையின் மேல் 'ஆஹா! ரூ.10,000 (16)' என்று கண்டிப்பா குறிப்பிடணும்.
- போட்டி தொடர்பாக விசாரணை எதுக்கும் அனுமதியில்லை.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.
- விடைகள் 6.3.2004க்கு முன்னால் வந்து சேரணும்.

## குவிஸ் போட்டி கூப்பன் - 16

1. 'பல்லாங்குழியில் வட்டம் பார்த்தேன்' பாடலை எழுதியவர் யார்?
   ..........................................................
2. அடினோ என்ற வைரஸால் 'மெட்ராஸ் ஐ' கண்நோய் வருகிறது என்று கண்டறிந்த மருத்துவமனை ..........................................................
3. லயன்ஸ் கிளப்பை உருவாக்கியவர் ..........................................................
4. 823 வார்த்தைகள் கொண்ட உலகின் நீளமான வாக்கியத்தை தமது நாவலில் பயன்படுத்திய எழுத்தாளர் ..............................
5. தமிழக அரசின் மாநில மரம் ..........................................................
6. தமது கல்லறையில் 'நான் தமிழ் மாணவன்' என்று பொறிக்கச் சொன்ன தமிழறிஞர் ..........................................................

பெயர் : ..........................................................

முகவரி : ..........................................................

..........................................................

..........................................................

கையொப்பம் : ..........................................................

# கல்கி வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி


புத்தம் புது டிசைன்களில்
நவநாகரீக ரக சேலைகள்
உற்பத்தி செய்து
குவிக்கப்பட்டுள்ளது. தங்களது
இல்ல பண்டிகை கால
தேவைக்கு தரமான அசல் பட்டு
வெள்ளி
ஜரிகை சேலைகளை
INDIA'S No. 1
கோ-ஆப்டெக்ஸ் ®
10% சங்கத் தள்ளுபடி மற்றும் ரூ.200
அரசு தள்ளுபடியிலும் சில குறிப்பிட்ட
ரகங்களை 45% to 55% தள்ளுபடி
விலையிலும் ரூ.2200 முதல் ரூ.32000
வரை விலையில் வாங்கி மகிழ
இந்தியாவின் பட்டு விற்பனையில்
முதலிடம் வகித்து வரும்
திருபுவனம் பட்டு
கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிட்., Z.322
தலைமையகம் :
55, சன்னதி தெரு,
திருபுவனம்-612 103 (தஞ்சை மாவட்டம்),
போன் : 0435-2460068, 2461327, 2460074
● எல்லா விசேஷ மற்றும் விடுமுறை
நாட்களிலும் தலைமையகத்தில்
விற்பனை உண்டு.
எங்களது கிளை விற்பனை நிலையங்கள் :
● 86, தெற்காவணி மூலவீதி, மதுரை ● 135ஏ, கீழவெளி வீதி, மதுரை ● காவேரி சிறப்பு அங்காடி, தஞ்சாவூர் ● மகாராஜா பட்டு மாளிகை, தஞ்சாவூர் ● கடை எண்.7ஏ, இரண்டாவது அக்ரஹாரம், சேலம் ● 1, பிளாக் எண்.5, நெய்வேலி - 3 ● சுபம், புதுக்கோட்டை ● 157, மெ.மெ.வீதி, காரைக்குடி ● மு.ரா.சில்க்ஸ், திருவாரூர் ● வசந்தா சில்க்ஸ், விருத்தாச்சலம் ● வி.எம்.ஆர்.டிரேடர்ஸ், திருச்சி ● ராம் சில்க், பாண்டிச்சேரி ● கோ.ஆப்.டெக்ஸ் திடல், சென்னை ● ஓம் வேர்ல்டு, கோயம்புத்தூர் ● மகாராணி சில்க்ஸ், பட்டுக்கோட்டை ● ராயா சில்க்ஸ், கும்பகோணம் ● கஸ்தூரி பாய் கம்பெனி, சிதம்பரம் ● ஸ்ரீமகாலெக்ஷ்மி சில்க் பேலஸ், விழுப்புரம் ● வாஹீது & கோ, அறந்தாங்கி ● வளநாடு பட்டு சென்டர், திருத்துறைப்பூண்டி ● ஆறுமுகம் பிள்ளை சன், காரைக்கால் ● சங்கம் சில்க் ஹவுஸ், மயிலாடுதுறை ● பக்கீரான்ஸ் சில்க்ஸ், திண்டுக்கல் ● ராதிகா சில்க்ஸ், வேதாரண்யம் ● மு.ரா.சன்ஸ், நாகப்பட்டினம் ● சுமங்கலி சில்க்ஸ், கடலூர்-2 ● ராஜலெக்ஷ்மி ஸ்டோர்ஸ், திட்டக்குடி ● ஏ.பி. நாராயணசாமி செட்டியார், அரியலூர் ● கண்ணன் ஜவுளி ஸ்டோர்ஸ், அரியலூர்

# குடமுழுக்கில் குடந்தைக் கோயில்கள்!

மகாமகத்தை முன்னிட்டு குடந்தையில் முக்கியமான பதினேழு கோயில்களுக்கும், நூற்றுக்கும் மேற்பட்ட சிறிய கோயில்களுக்கும் குடமுழுக்கு நடந்தேறியுள்ளன. "எங்கள் ஊர்க் கோயில்களுக்கு இது ஒரு நல்ல வாய்ப்பு" எனக் கூறுகின்றனர் குடந்தை நகரவாசிகள்.

ஆதிகும்பேசுவர சுவாமி கோயில், காசி விசுவநாத சுவாமி, நாகேஸ்வர சுவாமி, சோமேஸ்வர சுவாமி, ஏகாம்பரேஸ்வர சுவாமி, கௌதமேஸ்வர சுவாமி, காளகஸ்தீஸ்வர சுவாமி, பாணபுரீஸ்வர சுவாமி அபமுகேஸ்வர சுவாமி, கம்பட்ட விசுவநாத சுவாமி, சோடச மகாலிங்க சுவாமி, அமிர்தகலச நாதசுவாமி, சாரங்க பாணி சுவாமி, சக்கரபாணி சுவாமி, இராமசாமி, ஆதிவராகப் பெருமான் மற்றும் இராஜகோபால சுவாமி திருக்கோயில்களுக்கு குடமுழுக்கு நிறைவேறி உள்ளன.

இவை மட்டுமின்றி, குடந்தை நகரிலிருக்கும் நூற்றுக்கும் மேற்பட்ட சின்னச் சின்ன கோயில்களில் கும்பாபிஷேகம் நடந்தேறியுள்ளன. குடந்தை நகரில் சென்ற மகாமகத்தின்போது நிறைவேறிய குடமுழுக்கினை விட, தற்போது அதிக எண்ணிக்கையிலான கோயில்களில் குடமுழுக்கு நடந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.



# 'இங்கு வசிப்பதே பெருமை!'

"வடமாநிலத்தில் நடக்கும் கும்பமேளா மாதிரிதான் மகாமகத் திருவிழாவும். இது தெற்கே நடக்கும் கும்பமேளா" என்கிறார் கும்பகோணம் ராஜா வேத பாடசாலையின் முன்னாள் முதல்வர் ராமநாத சர்மா!

"குடந்தை நகரில் நான் கைந்து தலைமுறைகளாக வாழ்ந்து வருகிறவர்கள் நாங்கள். மகாமகம் என்பது இந்து மதத் திருவிழாவாக மட்டும் இங்கு நடைபெறுவதில்லை. கடந்த இரண்டு, மூன்று மகாமகங்களாக, எல்லா மதத்தினரும் உற்சவத்தின் போது பக்தியுடன் வந்து செல்கின்றனர். இந்திய ஒருமைப்பாட்டுக்கு இது முக்கியத் திருவிழா!" என்கிற சர்மா, மகாமகத்தன்று இந்தியாவின் ஒட்டுமொத்த பக்தர்களால் நிரம்பி வழியப் போகிறது கும்பகோணம் என்கிறார்.

• ராமநாத சர்மா



"உற்சவத்தின் பத்துப் பதினைந்து நாட்களிலும் நகரம் களை கட்டி விடும். வட இந்திய யாத்ரீகர்கள், இந்தியா முழுவதும் உள்ள இந்து மதத் துறவிகள், தேசம் எங்கிருந்தும் வந்திருக்கும் ஆன்ம நேய பக்தர்கள், ஒரே நேரத்தில் வேறு எங்குமே பார்த்திட இயலாத லட்சக்கணக்கான மனித முகங்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையேனும் அவர்களது பாதச் சுவடுகளைத் தன்னுள் ஏற்றுக் கொள்ளும் புனித மிகு குடந்தை மண்ணில் நாங்கள் வசிக்கிறோம் என்பதே குடந்தை வாசிகளுக்குப் பெருமைதான்!" என்று சொல்கிறார் வி. ராமநாத சர்மா.



• கும்பமேளாவில்





# தி யோகா பப்ளிஷிங் ஹவுஸ்

462, கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர் - 641 012.
போன்: 91-0422-5378494, 3102977

ரூபாய் 250/- மேல் புத்தகம் வாங்கும் அன்பர்களுக்கு தபால் செலவு இன்றி அனுப்பப்படும்*

* Within India

## பெங்களூர் யோகாச்சார்யா சுந்தரம் அவர்கள் எழுதிய புத்தகங்கள்......



### ஆனந்த ரகஸ்யம்

எண்ணற்ற அன்பர்கள் இந்நூலின் உதவியால் எம் மருந்து சிகிச்சையாலும் குணப்படுத்தப் பெறாத கொடிய நோய்களை குணமடைந்துயுள்ளனர். இந்நூலில் அனைத்து ஆசனசெய்முறையை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. - விலை : 120.00



### வலிவும் வனப்பும்

வீட்டில் இருந்தபடியே இந்நூலைப் படித்துப் பழகி பலசாலிகளாக ஆகமுடியும். இப்பயிற்சி பயில வெளிநாட்டு காக பிடுங்கும் கருவிகளோ, விலை உயர்ந்த உணவுகளோ அவசியமில்லை. எளிய உணவிலும் உடலை வலிவும் வனப்புடன் வைத்துக் கொள்ள முடியும் என்கிறர் ஆசிரியர் இந்நூலில். - விலை :90.00



### ஆரோக்கிய உணவு

உணவு விஞ்ஞானம், பல உணவுப் பொருள்களின் தன்மை, உண்ணும் விதம், காலம், காரப்பொருள்களின் கெடுதல்கள், விட்டமின் குறைபாடுகளை நீக்கும் வழி, பட்டினி, ஆகிய பல விஷயங்கள் மிகத் தெளிவாக விறுவிறுப்பான நடையில் விரிவாக இந்நூலில் உரைக்கப்பட்டிருக்கின்றன. - விலை :50.00



### The Secret of Happiness

It will perfect your body, cure your diseases; add years to your life; help you to save the money that goes to your doctor and medical shop, gives you vibrant Health, dynamic Health, the equal of which no other system in world has given or couldgive. Rs:200.00



### யோக சிகிச்சை

இது அரிய அற்புத சிகிச்சை இந்நூலில் பெண்களின் நோய்கள், சர்க்கரை வியாதி, ஆண்மையின்மை, குஷ்டம், வலிப்பு, மலச்சிக்கல், ரத்தக்குறைவு போன்ற 40 வகையான நோய்களுக்கு ஆசனங்கள் மூலமாக குணப்படுத்தும் முறைகளை நன்றாக எழுதியிருக்கிறார். - விலை :195.00



### ராஜயோகம்

தற்கால நாகரீக வாழ்வில் ஏற்படும் குறைபாடுகளை நீக்கி எளிதாக யோக வாழ்வைக் கடைப்பிடித்து மனித வாழ்வின் எல்லையான நிலையான உன்னத சுகானத்தத்தையடைய சாதனைவழிகளை விளக்கும் அரிய பெரிய நூல். - விலை : 190.00



### சாந்தி யோகம்

சூக்ஷ்மப் பிராணாயாமம், பிராணனும் மனமும், சாந்தியும் மூலேயும், ஒழுக்கமும் சாந்தியும், யாருக்கு சாந்தி, பிறப்பு இறப்பு மர்மம், சத்சங்கத்தின் அவசியம், சிறு உதாரணக் கதைகள், யோகாசார்ய சத்குரு ஸ்ரீ சிவப்ரகாச ஆனந்தகிரியாரின் வாழ்க்கை வரலாறு கொண்டது - விலை : 100.00



### சந்தியா காயத்ரி ஜெப யோகம்

காயத்ரி ஜெபத்தின் அவசியம் - ஏன், எதற்காக, எப்படி செய்ய வேண்டும் என்பதற்கான விளக்கங்களும், அது எல்லா மதத்தாருக்கும் பொதுவான, இன்றியமையாத ஜெபயோகத்தை விளக்கியுள்ளார். - விலை : 75.00



### ஒலி, ஒளித்தட்டு (V.C.D)

யோகாசனம், தியானம் & பிராணாயாமங்களின் விரிவான செய்முறைப் பயிற்சியை எளிய தமிழில் விளக்கி, அதன் விளக்க உரையும் கூடியது. - விலை :130.00



### சூர்ய நமஸ்காரம்.

இந்நூலில் எப்படி சூர்ய நமஸ்காரம் செய்ய வேண்டும், ஏன் செய்ய வேண்டும்? அதனால் என்ன லாபம் எப்படிப் பழகுவது, சகல மதத்தினரும் செய்யலாமா? நாஸ்திகர்கள் எப்படி சூர்ய நமஸ்காரம் செய்வது என்பவை எல்லாவற்றிற்கும் இந்நூலில் விரிவான விளக்கம் காணலாம். - விலை : 20.00

### ஆனந்த ரகஸ்யம் புத்தகம் + ஒலி, ஒளித்தட்டு (V.C.D)

சிறப்புச்சலுகை

விலை : 200/-



DEALERS: **CHENNAI:** Leo Book Distributors-Arumbakkam-Ph:23791283. Vijay Trading-Thiruvanmur-Ph:2446852. SoftView-(forCD'sOnly)-Amanjikarai-Ph:23742471. Higginbothams. Giri Trading Agency-Mylapore-Ph:24643551 **MADURAI:** Sarvodaya Ilakkiya Pannai-Ph: 2341746. **COIMBATORE:** Vijaya Padhipagam-2382614. Kandhasamy Padhipagam-Ph:3103498. Alankar Supermarket-Ph:2234460. Giri Trading Agency-Ph:2541523. Girinath Agencies-Ph:5378494.

யோகாச்சார்யா சுந்தரம் அவர்களின் முறையில் நேரடியாகவும், தபால் மூலமும், இணையதள மூலமும் யோக சிகிச்சை பெற

## கிரிநாத் யோகா சென்டர்

224, சங்கனூர் மெயின் ரோடு, கணபதி, கோயமுத்தூர் - 641 006.

Ph:0422- 3102977, 5378494

Adm. Office: 462, கிராஸ்கட் ரோடு, மாருதி பெட்ரோல் பங்க் பின்புறம் கோயமுத்தூர் - 641 012.

visit : www.girinathyoga.com for online purchase e-mail: girinath@vsnl.com, girinathyoga@hotmail.com



* கும்பகோணம் - தஞ்சை சாலை

கொடியில் உலர்த்திக் காய வைத்த கறுப்பு ரிப்பன் மாதிரி, குடந்தை நகரின் சாலைகளும், தெருக்களும் மெருகுடன் காட்சியளிக்கின்றன. மகாமக பக்தர்களின் பாதங்களைத் தாங்கிக் கொள்ள அவை இப்போதே தயாராகி விட்டன.

கும்பகோணம் - தஞ்சை சாலை புதிதாக அமைக்கப்

# தயாராகிறது குடந்தை!

பட்டு வருகிறது. இருபத்திநான்கு கோடி ரூபாய்ச் செலவில் ஒன்பது கி.மீ. நீளத்துக்குப் புறவழிச்சாலை ஒன்றும், ஆங்காங்குப் பாலங்களுடன் அமைக்கப்பட்டு வருகிறது. மேலும் ஏழு இடங்களில் தற்காலிகப் பேருந்து நிலையங்கள்.

சுமார் ஐம்பது லட்சம் பக்தர்கள் வருவார்கள் என எதிர்பார்க்கப்படும், குடந்தையில் அத்தனைப் பேர்களுக்கும் குடிநீர் மற்றும் சுகாதார வசதிகளுக்கு என்ன செய்யப் போகிறார்கள்?

கும்பகோணம் நகராட்சி நல அலுவலர் டாக்டர் எஸ். சிவபுண்ணியத்தைச் சந்தித்தோம்.



* தயாராகும் கழிவறைகள்

"குடந்தை நகர எல்லைக்குள் ஏற்கெனவே தொண்ணூறு பொது இடங்களில் கழிவறைகள் இயங்கி வருகின்றன. மகாமகத்தை முன்னிட்டு, மேலும் நாநூறு இடங்களில் தற்காலிகக் கழிவறைகள் கட்டப்பட்டு வருகின்றன. அவற்றிற்கு இருபத்தி நான்கு மணி நேரமும் தண்ணீர் சப்ளை செய்து வர நகராட்சி நிர்வாகம் ஏற்பாடுகள் செய்துள்ளது. கழிவறை மற்றும் துப்புரவுப் பணிகளுக்கென்று மகாமகத்தினை முன்னிட்டு இரண்டாயிரம் தொழிலாளர்கள் தற்காலிகப் பணியில் ஈடுபடுத்தப்பட உள்ளனர்.

ஒன்பது இடங்களில் மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டி அமைந்துள்ளன குடந்தை நகராட்சியில். அவற்றில் இருந்து பொது மக்களின் தினசரிப் பயன்பாட்டுக்காக பதினான்கு மில்லியன் லிட்டர் தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வருகிறது. பிப்ரவரி 25லிருந்து மகாமகத்துக்கென, தினசரி முப்பத்தைந்து மில்லியன் லிட்டர் தண்ணீர் சப்ளை செய்யப்பட இருக்கிறது. மேலும் நூறு இடங்களில் ஆயிரம் லிட்டர் கொள்ளளவு கொண்ட சின்டெக்ஸ் தண்ணீர்த் தொட்டிகள் நகராட்சி சார்பில் வைக்கப்பட உள்ளன. சுமார் முந்நூறு இடங்களில் புதிதாக குடிநீர்ப் பொதுக் குழாய்கள் பொருத்தப்பட இருக்கின்றன.



குடந்தை நகரின் கடைகளில் விற்கப்படும் தண்ணீர் பாக்கெட்டுகள் இப்போதே சோதனையிடப்படுகின்றன. தர முத்திரை இடப்பெற்ற தண்ணீர் பாக்கெட்டுகளை மட்டுமே விற்பனை செய்ய வேண்டுமென நகராட்சி நிர்வாகம் நடவடிக்கை எடுத்து வருகின்றது. இதற்காக குடிநீர்ப் பகுப்பாய்வுக் குழு ஒன்று குடந்தையில் முகாமிட்டிருக்கிறது."

**பக்தர்களுக்குத் தூய்மையான குடிநீர், இயற்கை உபாதைகளை அகற்றிக் கொள்ள தற்காலிகக் கழிவறைகள், எல்லாம் சரி, கும்பகோணத்தில் மகாமகம் எப்படிப் புகழ் பெற்றதோ, அது போல கும்பகோணத்துக் கொசுக்களும் வெகுவாகப் புகழ் பெற்றவை. அதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?**



"நகராட்சியின் நாற்பத்தைந்து வார்டுகளிலும் கடந்த ஆகஸ்ட் மாதத்திலிருந்தே கொசு ஒழிப்பு முயற்சியில் ஈடுபட்டுள்ளோம். தேசிய யானைக்கால் நோய்த் தடுப்புத் திட்ட அலுவலகத்துடன், நகராட்சியும் ஒன்றிணைந்து செயல்பட்டு வருகிறது. கும்பகோணத்தில் முன்பு பாசன வாய்க்காலாய் இருந்த ஐந்து வாய்க்கால்கள் காலப்போக்கில் கழிவுநீர் வாய்க்கால்களாக மாறிப் போயின. கொசுக்கள் அதிகம் என்பதற்கு அதுவும் ஒரு காரணம். இருப்பினும் கடந்த ஆறு மாதங்களுக்குள் குடந்தை நகரில் கொசுக்களை ஓரளவு ஒழித்துள்ளோம். ஒரு நாளைக்கு 240 லிட்டர் டீசல் செலவு செய்து, கொசு தெளிப்பான் மூலமாக தினசரி கொசு மருந்து தெளிக்கப்பட்டு வருகிறது. இங்கு வரும் மகாமக பக்தர்களுக்குக் கொசுத் தொல்லை இருக்காது என்று எங்களால் உறுதியாய்க் கூற முடியும்!" என்கிறார் சிவபுண்ணியம்.



• சிவபுண்ணியம்

## துலாபார மண்டபம்!

மகாமகத் திருக்குளத்தைச் சுற்றியுள்ள பதினாறு மண்டபங்களில் ஒன்று, துலாபார மண்டபம்!

1570ம் ஆண்டு தஞ்சையை ஆண்டு வந்த நாயக்க மன்னரான அச்யுதப்ப நாயக்கர், குடந்தை நகரக் கோயில்களின் திருப்பணிகளுக்காக, தம் எடைக்கு எடை, பொன்னை நிறுத்துக் கொடுத்தார். அந்தக் காட்சி மேல்தள உட்புறத்தில் புடைப்புச் சிற்பமாக அழகுற செதுக்கப்பட்டுள்ளது இந்தத் துலாபார மண்டபத்தில்.





* உ.வே.சா

# ஏதேனும் ஒரு தர்மம்!

"அந்த வருஷம் (1873) மகாமக வருஷம். மகாமகக் காலத்தில், கும்பகோணத்தில் பெருங்கூட்டம் கூடுமென்றும், பல வித்வத் சபைகள் நடைபெறும் என்றும் கேள்வியுற்றிருந்தேன். ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் தம் பரிவாரங்களோடு சென்று தங்குவாரென்றும், பல வித்துவான்கள் அவர் முன் கூடுவார்களென்றும், பிள்ளையவர்களும் அவருடன் போய்த் தங்குவாரென்றும் அறிந்தேன். 'நம்முடைய துரதிர்ஷ்டம் எவ்வளவு கொடியது! பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு முறை வரும் இந்த விசேஷத்துக்குப் போய் வர நம்மால் முடியவில்லையே! பிள்ளையவர்களைச் சார்ந்தும், அவர்களோடு சேர்ந்து இப் புண்ணிய காலத்தில் நடக்கும் விசேஷங்களைக் கண்டு களிக்க முடியாமலும், அசௌக்கியம் நேர்ந்துவிட்டதே!' என்றெல்லாம் நினைத்து நினைத்து வருந்தினேன்.

"சூரிய மூலையிலிருந்து சிலர் மகாமகத்துக்குப் போய் வந்தனர். அங்கே சுப்பிரமணிய தேசிகருக்கு, பிள்ளையவர்களும் வந்திருந்தார்களென்றும், பலப் பல விசேஷங்கள் நடைபெற்றன என்றும் அவர்கள் வந்து சொல்ல, எனக்கு இயல்பாகவே இருந்த வருத்தம், பின்னும் அதிகமாயிற்று.

"தாருண வருஷம் மாசி மாதம் (1885 மார்ச்) மகாமகம் வந்தது. அப்போது கும்பகோணத்தில் அளவற்ற ஜனங்கள் கூடினர். தியாகராச செட்டியாரும் வந்திருந்தார். திருவாவடுதுறையிலிருந்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் பரிவாரத்துடன் விஜயம் செய்து, கும்பகோணம் பேட்டைத் தெருவிலுள்ள தங்கள் மடத்தில் தங்கியிருந்தனர். பல கனவான்களும், வித்துவான்களும் வந்து அவரைக் கண்டு பேசி இன்புற்றுச் சென்றனர். அக்காலத்தில் எல்லாம் நான் தேசிகருடனே இருந்து வந்தேன். அதனால் பல புதிய மனிதர்களை அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் எனக்கு வாய்த்தது.

''மடத்தின் ஆதரவில் வளர்ந்த எனக்கு, என் உத்தியோக வருவாயிலிருந்து தக்க சமயத்தில், ஏதேனும் ஒரு தர்மம் மடத்தில் நடத்த வேண்டுமென்று எண்ணம் இருந்தது. அதனை மகாமகக் காலத்தில் நிறைவேற்றினேன். சுப்பிரமணிய தேசிகரிடம் நூறு ரூபாய் கொடுத்து, "மடத்தில் மகேசுவர பூஜையில், ஒரு பாகத்துக்கு வைத்துக் கொள்ள வேண்டும்" என்று சொன்னேன்.

தேசிகர் மிகவும் மகிழ்ந்து, "மடத்துப் பிள்ளையாகிய நீங்கள் இப்படிச் செய்ய வேண்டியது அவசியமில்லையே!" என்றார். நான் உசிதமாக விடை அளித்தேன்.

மகாமக விழா முடிந்தபின், திருவாவடுதுறைக்குத் திரும்புகையில், என் தந்தையாருக்கும் எனக்கும் பீதாம்பரங்களும், என் குமாரன் சிரஞ்சீவி கல்யாண சுந்தரத்திற்குச் சந்திரஹாரமென்னும் பொன்னாபரணம் ஒன்றும் அளித்தார்."

- உ.வே. சாமிநாதய்யர் எழுதிய என் சரித்திரத்திலிருந்து....

**- சித்தார்த்.**

# நாங்க ரெடி!

## – களத்தில் குதிக்கும் அமைப்புகள்!

மகாமகத்தின்போது வெள்ளம் போல் திரண்டிருக்கும் பக்தர்களுக்கு, தண்ணீர் மற்றும் உணவு, பொட்டலங்கள் வழங்க வழக்கம்போல் இப்போதும் பல அமைப்புகள் களத்தில் இறங்கி இருக்கின்றன.

அந்த அமைப்பாளர்கள் என்ன சொல்கிறார்கள்?

**எஸ்.எம். சுவாமிநாதன்** *(மாநில துணைத் தலைவர், தமிழ் மாநில வி.எச்.பி.)*

'ரெயில்வே ஸ்டேஷன் மற்றும் ஏழு தற்காலிகப் பேருந்து நிலையங்கள் அருகிலும் வி.எச்.பி.யின் முகாம்கள் அமைக்கப்பட உள்ளன. இங்கேயிருந்து தினமும் ஐம்பதாயிரம் உணவுப் பொட்டலங்கள் தயாரித்துத் தர இருக்கிறோம். பிப்ரவரி இருபத்தைந்தாம் தேதியிலிருந்து மார்ச் ஏழாம் தேதி வரை பன்னிரண்டு நாட்களுக்கு இது நடைபெறும். மேலும் பன்னிரண்டு இடங்களில் மருத்துவ முகாம்கள் அமைக்க இருக்கிறோம். "இருபத்தாறு டாக்டர்கள் அவற்றில் இருப்பார்கள். வெவ்வேறு மாநிலங்களிலிருந்து பக்தர்கள் வருவர்கள் என்பதால், தென்னிந்தியா முழுவதிலிருந்தும் ஆறாயிரம் வி.எச்.பி. தொண்டர்கள் இங்கே வந்து சேவை செய்ய இருக்கிறார்கள்.


* ஆர். வாசுதேவன்


* எஸ்.எம். சுவாமிநாதன்

**ஆர். வாசுதேவன்** *(தஞ்சை மாவட்டத் தலைவர், தமிழ்நாடு பிராமணர் சங்கம்.)*

நாங்க மகாமக அன்னதான அறக்கட்டளைங்கற ஒன்றை அமைச்சிருக்கோம். போன மகாமகத்துல முப்பதாயிரம் உணவுப் பொட்டலங்களை வழங்கியிருந்தோம். இப்ப ஒரு லட்சம் உணவுப் பொட்டலங்களும், ஒரு லட்சம் தண்ணீர் பாக்கெட்டுகளும் தர இருக்கிறோம். நகரின் எட்டு முக்கிய இடங்களில், காவல்துறை அனுமதி அளிக்கும் பகுதிகளில் நின்று இவற்றை பக்தர்களுக்கு வினியோகம் செய்ய இருக்கிறோம்.

**ஆர். வெங்கடேசன்** *(முன்னான் தலைவர், லயன்ஸ் கிளப், கும்பகோணம்)*

சின்டெக்ஸ் தண்ணீர்த் தொட்டி நாற்பது இடங்களில் வைக்க இருக்கிறோம். நகராட்சி சப்ளை செய்ய இருக்கும் பாதுகாக்கப்பட்ட தண்ணீரை அதில் நிரப்பிக் கொள்வோம். மகாமகம் முடிந்த பிறகு அந்த நாற்பது தண்ணீர்த் தொட்டிகளையும் அனாதை ஆசிரமம், முதியோர் இல்லம் மற்றும் கிராமத்துப் பள்ளிகள்





போன்றவற்றுக்கு அன்பளிப்பாகத் தர முடிவு செய்திருக்கிறோம். மகாமகக் குளத்துக்குப் போகும் வழி, திரும்பி வருகின்ற வழி கும்பகோண நகர மேப்புடன் ஐம்பதாயிரம் காப்பிகள் ஆங்காங்கு வெளியூர் பக்தர்களுக்குத் தர இருக்கிறோம்.

மேலும் 1995லிருந்து கண் தானம் பெற்று வருகிறோம். உலக அளவில் கும்பகோணம் லயன்ஸ் கிளப் - கண் தானம் பெற்று, மற்றவர்களுக்குப் பார்வையளித்து வருவதில் முதலிடம் வகிக்கிறது. மகாமகத்துக்குள் எப்படியும் இரண்டாயிரமாவது நபருக்கு கண்ணொளி பெற்றுத் தந்துவிட வேண்டும் எனத் திட்டமிட்டிருந்தோம். அதனையும் இப்போது நிறைவேற்றி விட்டோம். 1995லிருந்து 2004 பிப்ரவரி பத்தாம் தேதிக்குள் இரண்டாயிரம் பார்வையற்ற மனிதர்களுக்குக் கண்ணொளி வழங்கியிருக்கிறோம்.



* வெங்கட்ராமன்



* ஆர். வெங்கடேசன்



* ஹாஜி முகம்மது

**கே.வி.ஆர். வெங்கட்ராமன்** *(பொதுச் செயலாளர், ஆர்ய வைஸ்ய மகாமகக் கமிட்டி)*

குடந்தை, ஸ்ரீ வாசவி மஹால் திருமண மண்டபத்தில் பக்தர்களுக்குப் பிப்ரவரி 27 முதல் மார்ச் 7 வரைக்கும் தினசரி இரு வேளை உணவு வழங்க இருக்கிறோம். மதிய மற்றும் இரவு நேரங்களில் உணவு பரிமாறப் படும். மகாமகத்தன்று இருபதாயிரம் உணவுப் பொட்டலங்கள் வழங்க இருக்கிறோம்.

**முகம்மது ஜியாவுத்தீன்** *(தலைவர், கிஸ்வா)*

மகாமகம் காணும் பேறு பெற்ற திருக்குடந்தை மாநகர், மனித நேயம் பேணும் ஒப்பற்ற நன்நகரம் என்று சொன்னால் மிகையாகாது.

கும்பகோணத்தில் கிஸ்வா (கும்பகோணம் இஸ்லாமிய சோஷியல் வெல்பேர் அசோசியேஷன்) என்ற அமைப்பு இயங்கி வருகின்றது. மகாமகத்தினை முன்னிட்டு, நகரின் முக்கிய இடங்களில் பதினைந்து சின்டெக்ஸ் குடிநீர்த் தொட்டிகள் வைக்க கிஸ்வா முன் வந்துள்ளது.

ஹாஜி அப்துல் ஹை டிரஸ்ட் ஆம்புலன்ஸ் வண்டிகள் மூன்று, மற்றும் டாக்டர் மாலிக் மற்றும் கிஸ்வா உறுப்பினர்கள் அடங்கிய முதல் உதவி மருத்துவக் குழு. ஆம்புலன்ஸ் செயல்படும் இடம் : இல்ஹாம் கிளினிக் அருகில், சாரங்கபாணி கீழ வீதி, கும்பகோணம். பொறுப்பாளர் அப்துல் கபூர். தொலைபேசி : 2420354. செல் : 3102628

இரத்த தான சேவைக்கு கிஸ்வா இரத்த தான ஆர்வாளர்கள் தயாராக இருக்கின்றனர். பொறுப்பாளர் அன்சர் அலி. செல் : 94431 93063

மேலும் பல்வேறு சமூகத்தவர்கள் ஒருங்கிணைந்து எவ்வித கருத்து முரண்பாடுகளும் இன்றி, முழு உணர்வுடனும் ஈடுபாட்டுடனும் பல்வேறு சமுதாயப் பணிகளை மேற்கொண்டு வருவது குடந்தை நகர மக்களின் தனிச்சிறப்பு.



# 'தேசியத் திருவிழா!'



"மகாமகத்தைத் தேசியத் திருவிழாவாக அறிவிக்க வேண்டும்" என்கிறார் தமிழ்நாடு வணிகர் சங்கப் பேரவையின் மாவட்டச் செயலாளர் வி. சத்தியநாராயணன்.

"இதை பல்லாண்டுகளாகக் கோரி வருகிறோம். மகாமகத்துக்கு 'தேசியத் திருவிழா' என்கிற அந்தஸ்தினை மத்திய அரசு அறிவித்துவிட்டால், இந்த மகாமகத்துக்கு மாநில அரசு ஒதுக்கிடு செய்திருக்கும் ஐம்பது கோடி ரூபாயைக் காட்டிலும், அதிகமாகத் திட்டப் பணிகளுக்குப் பெற்றிட முடியும். அதனை வைத்து கும்பகோண நகர வளர்ச்சியும் நன்கு அமையும். கும்பகோணம் மகாமகத்தினை தேசியத் திருவிழாவாக அறிவிக்க வேண்டுமென்று தஞ்சாவூர் மாவட்ட நிர்வாகம், மாநில அரசுக்குப் பரிந்துரை செய்துள்ளது. ஆன்மிகத்தில் அதிக ஈடுபாடு உள்ளதாகக் காட்டிக் கொண்டிருக்கும் மத்திய - மாநில அரசுகள், இதற்கு உரிய நடவடிக்கை எடுக்கும் என்பது குடந்தை நகரப் பொதுமக்களின் எதிர்பார்ப்பு!" என்கிறார் வி. சத்தியநாராயணன்.



"மகாமகத்துக்காக என்னதான் அரசுத் துறை எந்திரங்கள் முடுக்கி விடப்பட்டிருந்த போதும், இவை போதாது. இப்போதைய மகாமகம் என்பது 1992ம் வருஷத்தின் போதே முடிவான ஒன்று. மாநில அரசுப் பொறுப்பில் இருக்கும் மாவட்ட நிர்வாகம், மத்திய அரசுத் துறை சார்ந்த அலுவலகங்கள் ஆகியன இதற்கென கடந்த மூன்று மாதங்களுக்கு முன்பிருந்துதான் திட்டமிடத் துவங்கின. இது மிகவும் தாமதமானது. இதனால் எல்லாவிதப் பணிகளும் அவசரக் கோலத்தில் அள்ளித் தெளித்த மாதிரிதான் செயல்பட முடியும். இப்போதும் அப்படித்தான் நடக்கிறது.

மகாமகத்துக்குச் சரியாக ஓர் ஆண்டுக்கு முன்பாகவே நிதி ஒதுக்கிடு செய்யப்பட்டு, அப்போதிருந்தே அதன் பணிகள் துவக்கப்பட்டு விட வேண்டும். அப்போது தான் குறிப்பிட்ட காலத்துக்குள் திட்டமிட்டபடியும், அதிக அளவு வேலைகளை நல்ல தரத்துடன் பூர்த்தி செய்து முடிக்க முடியும்" என்கிறார்.

உ



# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்

## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

**ஸம்வத்ஸராபிஷேகப் பெருவிழா, லட்சார்ச்சனை மற்றும் திருக்கல்யாண உற்சவம்**

அன்புடையீர்,

நிகழும் ஸுபானு வருஷம் பங்குனி மாதம் 25-ஆம் தேதி (07.04.2004) புதன்கிழமை த்விதியை திதியும் ஸ்வாதி நக்ஷத்திரமும் கூடிய நன்னாளில் **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ உடனுறை ஸ்ரீ ஸற்குணேச்வரப் பெருமானுக்கும் மற்ற பரிவார தேவதைகளுக்கும் 7-ஆம் ஆண்டு ஸம்வத்ஸராபிஷேகப் பெருவிழா** குருவருள், இறையருள் துணை கொண்டு கீழ்கண்ட நிரலின் வண்ணம் நடைபெற இருக்கிறது.

**07.04.2004 புதன் கிழமை** - காலை 7.30 மணிக்கு புண்யாஹவசனம், அனுக்ஞை, மஹா ஸங்கல்பம், 8.00 மணிக்கு ஸ்ரீ மஹா கணபதி ஹோமம், ஸ்தபன பூஜை, 09.00 மணிக்கு நவக்ரஹ ஹோமம், 10.00 மணிக்கு ஜபம் - பாராயணம், பூஜை, ஹோமம், பகல் 11.00 மணிக்கு பூர்ணாஹுதி, பகல் 12.00 மணிக்கு மஹாபிஷேகம் - அர்ச்சனை பிற்பகல் 01.00 மணிக்கு மஹாதீபாராதனை.

மேலும் தொடர்ந்து நடைபெற்று வரும் கோடி அர்ச்சனையின் ஒரு அங்கமாக 07.04.2004 புதன் கிழமை மாலை 4 மணிக்குத் துவங்கி 09.04.2004 வெள்ளிக் கிழமை பிற்பகல் முடிய, **அருள்மிகு அன்னை ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரிக்கு லட்சார்ச்சனையும், 09.04.2004 வெள்ளிக்கிழமை பிற்பகல் 03.30 மணி முதல் மாலை 06.00 மணி முடிய திருக்கல்யாண உற்சவமும்** நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டுள்ளன.

இறையன்பர்கள் அனைவரும் வழக்கம் போல் ஆர்வத்துடன் பங்குகொண்டு பேரருள் பெற வேண்டுகிறோம்.

என்றும் இறைபணியில்

Dr. V. கிருஷ்ணமூர்த்தி
பரம்பரை அறங்காவலர்,
ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில், கருவேலி.

**ஸ்ரீ ஸற்குணேச்வரர்**
**கைங்கர்ய ஸபா**
**மற்றும் கிராமவாசிகள்**

**08.04.2004 வியாழன் ஸங்கடஹர சதுர்த்தியை முன்னிட்டு இரவு 07.00 மணி முதல் 8.30 முடிய ஸ்ரீ விநாயகப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறும்.**

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் | பெறப்படும் பயன் |
|---|---|---|---|
| 1 | ஸ்வாமி அம்பாளுக்கு திருக்கல்யாண உற்சவம் | ரூ. 2,500/- | திருமணத் தடைகள் நீங்கும், பிரிந்த தம்பதியர் இணைவர் |
| 2 | ஸ்ரீ ருத்ரஜபம், அபிஷேகம் | ரூ. 101/- | இன்னல் நீங்க, செல்வம் பெருக |
| 3 | லட்சார்ச்சனை | ரூ. 100/- | வாழ்வில் இடர் நீங்கி நலம் பெருக |
| 4 | ஸ்ரீ கணபதி ஹோமம் | ரூ. 51/- | தடைகள் நீங்கும், எடுத்த காரியத்தில் வெற்றி |
| 5 | நவக்ரஹ ஹோமம் | ரூ. 51/- | கிரஹ தோஷங்கள் நீங்க |
| 6 | ஸங்கடஹர சதுர்த்தி பூஜை | ரூ. 51/- | காரிய சித்தி |

1. இங்கு கொடுக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிகளில் பங்குகொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான துகையை "ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா" (Regd). 32/18, டபீர் புதுத் தெரு, கும்பகோணம் - 612 001 (Tel:0435/2423297) என்ற முகவரிக்கு மணியார்டர் மூலமோ அல்லது வரைவுக்காசோலை (D.D.) மூலமோ அனுப்பக் கோருகிறோம்.
2. ஸம்வத்ராபிஷேக நிகழ்ச்சிகளில் பங்குபெற விரும்பும் அன்பர்கள் ரூ. 300/- கட்டணக் காணிக்கை அனுப்பினால் எல்லா நிகழ்ச்சிகளிலும் நாம நட்சத்திரங்களுடன் ஸங்கல்பம் செய்து கொள்ளலாம்.
3. திருக்கோயிலில் தினசரி அன்னதானம் நடைபெறுகிறது. இதில் பங்குபெற விழைவோர் தனியாக நன்கொடை அளிக்கலாம்.
4. ரூ. 500/- அல்லது அதற்கு மேற்பட்ட நன்கொடை காணிக்கை அளிப்பவர்களுக்கு ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ, ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருவுருவங்கள் பொறிக்கப்பட்ட, மூலமந்திரத்துடன் கூடிய, பூஜையில் வைத்து அபிமந்திரிக்கப்பட்ட வெள்ளி டாலர் பிரஸாதமாக வழங்கப்படும்.

# குளக்கரையில் மணியோசை!

இரண்டாம் உலகப் போரில் நேச நாடுகள் வெற்றியடைந்த பின், பிரிட்டன் ஆதிக்கத்திலிருந்த பல நாடுகளில் வெற்றி விழாக்கள் அமர்க்களப்பட்டன. பல ஊர்களில் நினைவு ஸ்தூபிகள், மணிக் கூண்டுகள், மண்டபங்கள் அமைக்கப்பட்டன. இந்தியர்களும் தங்கள் ராஜ விசுவாசத்தை எடுத்துக் காட்ட முனைந்தார்கள். அந்த அடிப்படையில் கும்பகோணத்தில் மகாமகக் குளத்தின் மேற்கு மூலையில் ஒரு மணிக் கூண்டு கோபுரம் அமைக்கப்பட்டது.

இதற்கு நிதியுதவி செய்தது திருப்பனந்தாள் காசிமடம். அப்போது அந்த மடத்தின் ஆதீனகர்த்தராக இருந்தவர், அருள்நந்தி தம்பிரான் ஸ்வாமிகள். அடிமை இந்தியாவில் துவங்கிய இந்தப் பணி, சுதந்திர இந்தியாவில் தான் முடிவுற்றது. 29.2.1948ம் தேதியன்று மணிக்கூண்டைத் திறந்து வைத்தவர், தஞ்சை மாவட்ட ஆட்சியாளராக இருந்த மெக்லாலின். ஆனால் கட்டி முடித்த சில வருடங்கள் தான் இந்த மணிக் கூண்டிலிருந்து சத்தம் ஒலித்துக் கொண்டிருந்தது. அதன் பிறகு கடிகாரம் பழுதடைந்து போய் ஒலி நின்று விட்டது. இப்போது மீண்டும் அந்தக் கூண்டிலிருந்து மணிச் சத்தம் கேட்கவிருக்கிறது. சிதிலமடைந்து போயிருந்த மணிக்கூண்டு கோபுரத்தைச் சீர்திருத்தி, ஓடாத கடிகாரத்தையும் ஓடச் செய்யும் பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறது சிட்டி யூனியன் வங்கி. இதற்காக அந்த வங்கி பத்து லட்சம் ரூபாய் செலவிட இருக்கிறது.

"இந்த ஆண்டு எங்கள் வங்கி நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுகிறது. ஒவ்வொரு மகாமகத்தின் போதும் கும்பகோணத்துக்கு வரும் பக்தர்களுக்கு அன்னதானம், மருத்துவ உதவி என்று பல சமூகப் பணிகளைச் செய்து வருகிறது எங்கள் வங்கி. இந்த ஆண்டு கூடுதலாக சில நகர வளர்ச்சிப் பணிகளையும் செய்யலாமே என்ற ஒரு எண்ணம் தோன்றியது. அதனைத் தொடர்ந்தே மணிக் கூண்டு கோபுரத்தைச் சீர்திருத்தும் பணியை மேற்கொண்டோம்" என்கிறார் வங்கியின் தலைவரான வி. நாராயணன். 1980ஆம் ஆண்டிலிருந்து இந்த

• நாராயணன்






வங்கியின் தலைவராக இருக்கிறார் இவர்.

மணிக் கூண்டு கோபுரத்தைச் சீர் செய்வது மட்டுமல்லாமல், நகரில் இருக்கும் காந்தி பூங்காவையும் பசுமை கொஞ்சும்படி மாற்ற இருக்கிறார்கள் வங்கி நிறுவனத்தினர். நகரில் ஒரு திருமண மண்டபத்தை வாடகைக்கு எடுத்திருக்கிறது வங்கி. இவர்களது வாடிக்கையாளர்கள் மகாமகத்திற்கு வந்தால் அங்கு தங்கிக் கொள்ளலாம். அன்னதானமும் உண்டு. ஆனால் ஒரு நிபந்தனை. வரும் வாடிக்கையாளர் எந்த வங்கிக் கிளையில் கணக்கு வைத்திருக்கிறாரோ, அந்த மேலாளரிடம் அத்தாட்சிக் கடிதம் வாங்கி வரவேண்டும்.

1904ல் வங்கி துவங்கப்பட்டபோது அதன் பெயர் கும்பகோணம் வங்கிதான். 1965ல் சிட்டி ஃபார்வர்டு வங்கி, மற்றும் யூனியன் வங்கி என்று வேறு இரு வங்கிகள் கும்பகோணம் வங்கியுடன் இணைய, அதன் பெயர் கும்பகோணம் சிட்டி யூனியன் வங்கியாயிற்று. ஆனால், கடந்த சில வருடங்களுக்கு முன்னர் கும்பகோணத்தை எடுத்து விட்டு, வெறும் சிட்டி யூனியன் வங்கி என்றாகி விட்டது.

"பெயரில் கும்பகோணம் ஒட்டிக் கொண்டிருப்பதால் உங்களுக்கு என்ன நஷ்டம்?" என்று நாராயணனிடம் கேட்டோம்.



"இந்த வங்கியின் வேர் இந்தக் கும்பகோணம் மண்ணுக்குள் இருக்கிறது என்பது என்றைக்கும் எங்களைப் பெருமைப்பட வைக்கும் விஷயம். ஆனால் வங்கி பிரமிக்கத்தக்க அளவில் வளர்ச்சி பெற்றிருக்கிறது. டெபாஸிட் தொகை இரண்டாயிரத்து எழுநூறு கோடி. நூற்றி இருபது கிளைகளுக்கு மேல். சர்வதேச வங்கி வர்த்தகமும் உண்டு. பெயரில் 'கும்பகோணம்' இருந்தால், ஏதோ மாவட்டக் கூட்டுறவு வங்கி அல்லது நகர்ப்புற வங்கி என்று நினைக்கிறார்கள். அந்த எண்ணத்தை மாற்றவே 'கும்பகோணத்தை' எடுத்தோம். மற்றபடி கும்பகோணத்தால் எங்களுக்குப் பெருமையே!"

— ப்ரியன்

படங்கள்: மீடியா ராமு



# விசேஷ வெகுமதி!

தமிழக முதலமைச்சராக 1968ல் அண்ணா இருந்த போது, கலைஞர் தான் பொதுப்பணித்துறை அமைச்சர். சி.ஜி. ரங்க பாஷ்யம், தஞ்சை கலெக்டர். அவர் தலைமையில் மகாமக விழாக்குழு அரசு சார்பில் அமைக்கப்பட்டது. கும்பகோணம் துணை கலெக்டர் டி.எஸ். விஜயராகவன், செயலர். கும்பகோணத்தைச் சுற்றியுள்ள அத்தனை பஞ்சாயத்துக்களின் தலைவர்களும் செயற்குழு உறுப்பினர்கள். மூப்பனார் கூட இவர்களில் ஒரு முக்கிய உறுப்பினர்!

காஞ்சி மடம், தருமபுர ஆதீனம், காசி மடம், திருவாவடுதுறை ஆதீனம், கோ.சி. மணி, எம்.ஏ. ரஸாக் முதலியவர்கள் சிறப்பு உறுப்பினர்களில் சிலர்.

இருபது லட்சத்துக்கு மேற்பட்ட யாத்திரிகர்கள் அப்போது எதிர்பார்க்கப்பட்டனர். வாகனப் போக்குவரத்தை நகரத்துக்கு வெளியே ஏழு நாட்கள் நிறுத்தி வைக்க முடிவு செய்யப்பட்டது. கும்பகோணமோ முக்கிய வியாபார நகரம். ஏழு நாட்களுக்கு கும்பகோணத்துக்கு வெளியே வாகனங்கள் நிறுத்தப்படுவதால், ஒரு சாலையில் இருந்து இன்னொரு சாலைக்கு வண்டிகள் போக முடியாமலும், வந்த வழியே திரும்பிச் செல்ல வேண்டிய நிர்பந்தமும் ஏற்பட்டது. எனவே கும்பகோணத்தைச் சுற்றி ஒரு ரிங் ரோடு (சுற்றுச் சாலை) அமைக்கத் தீர்மானிக்கப்பட்டது.

கும்பகோணத்தைச் சுற்றி ஐந்து முதல் பத்து மைல் தொலைவில் உள்ள திருவலஞ்சுழி, சுவாமி மலை, திருப்புறம்பியம், திருவிடை மருதூர், ஒப்பிலியப்பன் கோயில், நாச்சியார் கோயில், பட்டீசுவரம் கோயில் முதலிய முக்கிய புண்ணியத் தலங்களை இந்த மாற்றுச் சாலை மூலம் இணைப்பதால் வெகு தொலைவிலிருந்து மகாமகத் திருவிழாவுக்கு வருவோர், மேற்படி தலங்களைத் தரிசிக்க முடியும்.

தீயணைப்புத்துறையோ, ஆம்புலன்ஸ் அல்லது காவல் துறையோ நகரத்தின் வேறு பகுதிகளுக்கு உடனடியாக விரைந்து சென்று செயல்பட, இம் மாற்றுச் சாலை வழி செய்தது.

இதில் குறிப்பிடத்தக்க அம்சம் என்ன என்றால், அப்போது தமிழக அரசின் பொருளாதார நிலை, நெருக்கடியைச் சந்தித்த நேரம். ஆனால் தேவைப்பட்ட தொகையோ ஆறு லட்சம் ரூபாய்! (அப்போது அது பெரிய தொகை!) சுற்றுச் சாலை மொத்தம் முப்பத்தெட்டு மைல்கள்.

முதலமைச்சராக இருந்த அண்ணா, டிசம்பர் 67ல் ஆணை பிறப்பிக்கச் சொன்னாராம். ஜனவரி 68, 31ஆம் தேதி பணிகள் முடிக்கப்பட்டு, பிப்ரவரி 3ஆம் தேதி கலைஞர் கும்பகோணத்துக்கு வந்து சுற்றுச் சாலைப் போக்குவரத்தைத் தொடங்கி வைத்தார்! 'குறிப்பிட்ட காலத்துக்குள் பணிகளை முடித்து வைக்க, கலைஞர் தீவிர ஆர்வம் காட்டியிருக்கிறார். அதற்கும் மேலாக, அண்ணா மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்' - என்று மகாமக விழாக் குழுத் தலைவரான தஞ்சை ஆட்சியரும், செயலராக இருந்த காசிராமன் எம்.எல்.ஏவும் பாராட்டிவிட்டு, 'இது குடந்தைக்குக் கிடைத்த விசேஷ வெகுமதி' என்று அரசைப் பாராட்டியிருக்கிறார்கள்.



— சாருகேசி



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த **15** ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் **180** மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் **ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
நல்லாசியுடன்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா

A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.**

# அம்மா வர்றாங்க!



குடந்தை நகர மக்களிடம் தற்போதைய ஹாட் டாபிக் 'இந்த மகாமகத்துக்கும் அம்மா வர்றாங்க!' என்பதுதான்.

கடந்த மாதம் சென்னையில் செய்தியாளர்களுக்குப் பேட்டியளித்த அறநிலையத்துறை அமைச்சர் பி.சி. ராமசாமி கூட, 'மகாமகத்தில் முதல்வர் கலந்து கொள்ள மாட்டார்' என்றே கூறியிருந்தார்.

ஆனால் முதல்வர் மகாமகத் திருவிழாவில் கலந்து கொள்ளும் தகவல் பிப்ரவரி 17 அன்று உறுதி செய்யப்பட்டது. தமிழக உளவுத் துறை ஐ.ஜி. ராஜேந்திரன் உட்பட, அதிகாரிகள் கும்பகோணம் வந்திருந்து பாதுகாப்புப் பணிகளை நேரில் ஆய்வு செய்தனர். குறிப்பாக முதல்வர் வந்து செல்லும் பாதை மற்றும் முதல்வர் குளிக்க ஏற்பாடு செய்யப்பட்டு வரும் இடம் ஆகியவற்றை நேரில் பார்வையிட்ட ஐ.ஜி., மேலும் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் குறித்து தஞ்சை டி.ஐ.ஜி., எஸ்.பி. ராஜேந்திரன் மற்றும் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தியிருக்கிறார்.

மகாமகத்தன்று காலை, சிறப்பு விமானம் மூலம் திருச்சிக்கு வரும் முதல்வர் ஜெயலலிதா, ஸ்பெஷல் ஹெலிகாப்டரில் கும்பகோணத்துக்கு வந்து அங்கிருந்து கார் மூலம் மகாமகக் குளத்திற்கு வருகிறார்.

அரை மணி நேரம் நிகழ்ச்சியில் கலந்துவிட்டு திருச்சி வழியாக சென்னைக்கு வந்து சேர்கிறாராம்!

முதல்வர் வருவதையடுத்து, மகாமகக் குளத்தைச் சுற்றிலும் சாதாரண உடையில் காவல் துறையினரின் கண்காணிப்புப் பணி துவங்கிவிட்டது. இருபத்து நான்கு மணி நேரமும் குளத்தைச் சுற்றி போலீசார் ரோந்துப் பணி மேற்கொள்ளவும், அங்கு வருகை தரும் நபர்கள் குறித்து கண்காணிக்கவும் உத்தரவிடப்பட்டிருக்கிறதாம்.

மகாமகக் குளத்தில் முதல்வருக்கென விசேஷப் பாதுகாப்பு, லட்சக்கணக்கில் திரள இருக்கும் பக்தர்களின் கூட்ட நெரிசல், இவற்றை போலீஸ் சமாளிக்கப் போகும் விதம் குறித்து, இப்போதே கும்பகோணவாசிகளுக்குத் திக்திக்கென்றாகி இருக்கிறது.

# மஹா பெரியவாள் விருந்து

ரா. கணபதி

“சாதம்னா அப்படியே வெள்ளை வெளேர்னு ஹிமயமலை மாதிரி குவிச்சிருக்கும். ஸாம்பார் அண்டாவுல யானையே முழுகிப் போனாக் கூடத் தெரியாது. ஹிமாசல சிவன் மதுரை மீனாக்ஷி கல்யாணத்தில் குண்டோதரனுக்காக அன்னக் குழி ஸ்ருஷ்டிச்சார்னு சொல்லுவாளே, அதையே இந்த ஏழைப் பிராமண சிவன் பண்ணா ரோன்னு ப்ரமிக்கும்படியா அவர் பண்ணிண்டிருந்தார்.”

அந்த ‘அவர்’ தேப்பெருமாள் ராமஸ்வாமியாகப் பிறந்து அன்னதான சிவன் என்று உலகம் போற்றி வணங்கிய உத்தம ஜீவன். அவரைப் பற்றிக் குழந்தைக் குதூஹலத்துடன் கூறிக் களிப்பவர், ஸ்ரீ காஞ்சி காமகோடி மஹா பெரியவாள்.



• அன்னதான சிவன்



மஹாபெரியவாள் அந்த அன்னதான மகா வைபவத்தை நினைவு கூர்வதைக் கேளுங்கள்:

“ஒரு தடவை, தொள்ளாயிரத்து முப்பத்து மூணாம் வருஷ மாமாங்கத்துலதான், வெறகே நூறு வண்டி வந்துது. ஊறுகாய்க்காக நெல்லிக்கா மட்டும் பத்து வண்டி வந்துது. ஆவி வாஸனையிலேந்தே இன்ன இன்ன பண்டம் இன்னும் எவ்வளவு சேர்க்கணும்னு அவர் கரெக்டா சொல்லிடுவார். அப்டி, கொதிச்சுண்டிருக்கற ரஸத்தின் வாஸனைலேர்ந்து அதுக்கு இன்னம் எவ்வளவு கொத்தமல்லி அரச்சு விடணும்னார். ஒரு பிடி கொத்தமல்லியோ, ஒரு கத்தையோ இல்லே. ‘ஒரு மொறம் அரச்சு விடடா’ன்னு அதட்டல் போட்டாராம். ஏற்கெனவே அரச்சு விட்டதுக்குக் கூடுதலா மொறம் கொத்தமல்லி சேக்கணும்னா எவ்வளவு ரஸம் வெச்சிருப்பா, எவ்வளவு பேர் சாப்டிருப்பான்னு நீங்களே கணக்குப் போட்டுப் பாத்துக்கோங்கோ. சாப்பிடற எடத்தைச் சுத்தி பண்ணறதுக்காகத் துடைப்பக் கட்டையே



ரெண்டு வண்டி வந்துதுன்னா பாத்துக்கோங்கோ.

“இத்தனை ஆயிரம், பதினாயிரம் பேருக்கு நன்னா, கெட்டியா நிறைய மோர் விடணும்னா அத்தனை பாலுக்கு எங்கே போறது? இந்த மாதிரி பெரிய உத்ஸவ ஸமாராதனைகளில் சிவன் ஒரு யுக்தியைக் கையாண்டுண்டிருந்தார். ரிஃப்ரிஜிரேடர், அது, இதுல்லாம் இல்லாத அந்த நாளில் அவர் ஒரு புது மாதிரி ரிஃப்ரிஜிரேடர் கண்டுபிடிச்சிருந்தார். சமாராதனைக்குப் பல வாரம், மாஸம் முந்தியே தயிர் சேகரம் பண்ண ஆரம்பிச்சுடுவார். சேர சேரப் பெரிய மரப் பீப்பாய்களில் அந்தத் தயிரை விட்டு, ஒவ்வொண்ணும்



"மகாமகத்துக்கு வந்த விருந்தாளியை ஏன் இப்படித் திட்டறீங்க? பாவம்!"

"போன மகாமகத்துக்கு வந்தவருங்க. வருஷம் பன்னிரண்டு ஓடினதே தெரியலையேன்னு ஆச்சரியப் படுறார்!"

- பர்வதவர்த்தினி

ரொம்பினதும் வாயை மெழுகால அடைச்சு, அப்படியே ஆழமான கொளங்களுக்கு அடியில தள்ளிப்பிடுவார். அப்புறம் எப்ப தேவைப்படறதோ அப்போ தெறந்தா மொத நாள் ராத்ரிதான் தோச்ச மாதிரி தயிர் சுத்தமா இருக்கும். கொளத்தோட குளிர்ச்சி மாத்திரந்தான் காரணம்னு சொல்றதுக்கில்லே. அவரோட மனஸு விசேஷமும் சேர்ந்துதான் அப்படி இருந்திருக்கணும்."

சிவனின் அன்னதானங்களில் ஒரு விசேஷம், முதல் நாள் மாலை வரையில் 'இங்குதான் பல்லாயிர மக்களுக்கு விருந்து தயாரிக்கப்படப் போகிறது' என்பதற்கு எந்த அறிகுறியும் இராது! இரவிலிருந்துதான் சாமான்கள் வரத் தொடங்கும். அந்த 1933 மாமாங்கத்தில் என்னவாயிற்றென்றால் இரவு நள்ளிரவாக ஆகி, மேலும் ஒன்றரை மணி கடந்த பின்புங்கூட ஒரு சாமான் வண்டி கூட வந்து சேரவில்லை. நிலை குலையாத சிவனும் கலங்கி விட்டார். 'சாமான்களை இறக்கிப் பாகுபடுத்தவே ஏழெட்டு மணிகளாகுமே! அப்புறம் எப்போது சமைத்து எப்போது பரிமாறுவது?'

மஹா பெரியவாள் முகாமுக்கு விண்ணப்பம் பறந்தது. அடுத்தே வண்டி வண்டியாகச் சமையற்களத்திற்கு வரவும் தொடங்கின!

அதுவரை ஏன் வரவில்லையென்றால், போக்குவரத்துக் கட்டுப்பாடுகளிலிருந்து சிவன் சமாராதனைகளுக்கு வரும் வண்டிகளுக்கு மாத்திரம் விலக்குத் தருவது வழக்கம் என்று அறியாத போலீஸார் அவ் வண்டிகளையும் ஊருக்கு வெளியிலேயே நிறுத்தி விட்டார்கள். மஹா பெரியவாளின் திருச்செவியில் விஷயம் விழுந்த அந்தப் பின்னிரவு ஒன்றரை மணிக்கு, ஸர்க்கிள் இன்ஸ்பெக்டருக்குத் திடுமென்றுப் பொறி தட்டிற்று - சிவன் சமாராதனை வண்டிகளுக்குப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டிலிருந்து விலக்களிப்பது வழக்கமாச்சே என்று. அப்புறம் என்ன? ஊருக்கு வெளியே 'நிப்பாட்ட'ப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான வண்டிகள் சாரி சாரியாக உள்ளே வந்தன. அசுர வேகத்தில், இல்லை, அநுக்கிரக வேகத்தில் சாமான் இறக்கப்பட்டு, பங்கீடு ஆகி, காலை ஐந்து மணிக்கே கோட்டையடுப்புக்களை மூட்டிக் காலம் தப்பாமல் லக்ஷம் ஜனங்களுக்கு அறுசுவை அன்னம் படைக்க முடிந்தது!

மாமாங்க சமாராதனைகள் தவிரவும் ஸ்ரீ மஹா பெரியவாளின் 'சிவ ஸங்கல்பம்' அன்னதான சிவனின் கைங்கரியமாக அமோக உருக்கொண்ட இரு நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டும். ஒன்று, 1923ல் மஹாபெரியவாள் ஆனைக்கா அகிலாண்டேசுவரிக்குச் செய்த தாடங்கப் பிரதிஷ்டை வைபவம். மற்றது 1916 நவராத்திரியில் கும்பகோணம் ஸ்ரீ மடத்தில் நடத்திய லக்ஷம் பிராமண போஜனம். நடமாடும் சிவனும், அன்னம் போடும் சிவனும் ஒன்று சேர்ந்த விமரிசையில் லக்ஷம் என்பது இரண்டு லக்ஷமாகவே விசுவரூபம் கொண்டது என்று தோராயக் கணக்குச் சொல்லுவார்கள்.

இரண்டு சிவன்களுமே இந்த மகத்தான சமாராதனைகளில் ஒரு பருக்கை கூட ருசி பார்த்ததில்லை. இந்த அற்புதத் தியாகமும் அவர்களுடைய அதிசயப் பிரேமையுடன் சேர்ந்த விசேஷத்தால்தான் அச் சமாராதனைகள் அவ்வளவு மகத்தாக நடக்க முடிந்தது. சந்திர மௌளீச்வரருக்கு நிவேதித்த அவற்பொறி போன்ற வெகு எளிய உணவு வகை சிலவே மஹா பெரியவாள் உட்கொள்வார், அதுவும் அடிக்கடி நிகழும் உபவாஸ நாட்களிலொன்றாக அந்நாள் இல்லாமலிருந்தால்தான். அன்னதான சிவனோ எவரேனும் ஓர் அன்பரின் வீட்டுக்குச் சென்று நாலு கவளம் மோருஞ் சோற்றை உண்பார். அன்னதானம் செய்யாத தினங்களில் பழைய சோற்றைத்தான் தன்னுடைய இஷ்டாவான தக்ஷிணாமூர்த்திக்கு மானசிகமாக நிவேதித்து விட்டு உண்பார்.

**(1991- கல்கி தீபாவளி மலரில் வெளியான கட்டுரையிலிருந்து சில பகுதிகள்...)**



# தேரைக் காப்பாற்றுங்க!

ஆதி கும்பேசுவரர் கோயிலின், சுவாமி உற்சவ மேல் மண்டபத்தையொட்டி நிலை நிறுத்தப்பட்டுள்ளன அக்கோயிலின் ஐந்து தேர்கள்! சட்டென பார்வைக்கு இரண்டு தேர்கள் மட்டுமே தெரியும். மற்றவை மூன்றும் பொந்துக்குள் ஒளித்து வைக்கப்பட்ட சிட்டுக்குருவிகளாய் சிறை பிடிக்கப்பட்டுள்ளன. காரணம் அந்த ஐந்து தேர்களைச் சுற்றிலும் கடைகள், அடர்த்தியாக!

"தேர்களைச் சுற்றியுள்ள கடைகளுக்கு கோயில் அலுவலகமே வாடகை வசூலித்து வருகிறது. இந்தக் கடைகளால் ஆதி கும்பேசுவரர் கோயில் தேர்களுக்குப் பாதுகாப்பு இல்லை. சுமார் ஒன்றரைக் கோடி ரூபாய் மதிப்பிலான அழகிய தேர்களைச் சுற்றிலும், எளிதில் தீப் பிடிக்கும்படியான கடைகள் அமைந்துள்ளன. போதாக் குறைக்குத் தேர்களைச் சுற்றிலும் கடைகளுக்கு சப்ளையாகும் மின்சார ஒயர்கள் பின்னப்பட்டிருக்கின்றன. இதனால் தேர்கள் தீயின் பிடியில் சிக்கும் ஆபத்திருக்கிறது. இவற்றை உடனடியாக அப்புறப்படுத்த வேண்டும்" என்று உள்ளூரில் ஒரு கோஷ்டி போராடக் கிளம்பியுள்ளது.



மகாமக விழா தொடங்குவதற்கு முன்பாகவே, தஞ்சை - கும்பகோணம் இடையிலான அகல ரயில் பாதையைத் துவக்க ரயில்வே நிர்வாகம் முடிவு செய்துள்ளது.

"இதுவரை தொண்ணூற்றைந்து சதவிகித வேலைகள் நிறைவடைந்துள்ளன. கடந்த ஆண்டு மே மாதம் துவங்கப்பட்ட அந்த அகல ரயில் பாதையினூடே எட்டு பெரிய பாலங்களும், நூற்றி ஐம்பத்தாறு சிறிய பாலங்களும் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. மீதமுள்ள ஐந்து சதவிகிதப் பணிகள், இன்னும் ஒரு சில நாட்களுக்குள் நிறைவு பெற்று விடும்" என்கிறார் ரயில்வே அதிகாரி ஒருவர்.

அதன் பின்னர் பிப்ரவரி இருபதாம் தேதி வாக்கில், அகல ரயில் பாதையில் சோதனை ஓட்டம் நடைபெற உள்ளது. சோதனை முடிந்ததும் ரயில் போக்குவரத்து தொடங்கப்படும்.

பயணிகளின் வசதிக்காக கும்பகோணம் ரயில் நிலையத்தில், இருபத்தி ஏழு டிக்கட் கவுண்டர்களும் ரயில் நிலையத்தில் உள்ள ஆர்.எம்.எஸ். வாசலின்

# வந்தாச்சு



அருகே நான்கு தகவல் மையங்களும் திறக்கப்பட உள்ளன. நூற்றுக்கும் மேற்பட்ட தற்காலிக நவீனக் கழிவறைகள் ரயில்வே நிர்வாகம் சார்பாகக் கட்டப்பட இருக்கின்றன. மகாமக விழாவுக்கென ரயில் நிலைய வளாகத்தில், இருபத்தைந்து படுக்கை வசதிகளுடன் கூடிய மருத்துவமனை ஒன்றும் திறக்கப்பட உள்ளது.





தஞ்சையிலிருந்து மகாமகத் திருவிழாவுக்குப் பேருந்துகளில் வரும் பக்தர்கள், மகாமகக் குளத்திற்குச் செல்ல வேண்டுமெனில், குறைந்தது ஐந்து கி.மீ. தூரமாவது நடந்து வர வேண்டிய நிலை இருக்கின்றது. பயணிகளுக்கு ஏற்படும் இந்தச் சிரமத்தை கருத்தில் கொண்டு ரயில்வே நிர்வாகம் பயணிகளின் வசதிக்காக, தாராசுரம், சுவாமிமலை ஆகிய இடங்களில் இருந்து கும்பகோணம் ரயில் நிலையத்திற்கு வந்து செல்லவும், மயிலாடுதுறை மார்க்கமாக பேருந்துகளில் வரும் பயணிகளின் வசதிக்காக, திருநாகேஸ்வரம், திருவிடைமருதூர் ஆகிய ரயில் நிலையங்களில் இருந்து கும்பகோணம் வந்து செல்லவும் சிறப்பு ரயில்களை ஏற்பாடு செய்து வருகிறது.

"லட்சக்கணக்கான பக்தர்கள் வந்து செல்ல உள்ளதால் கூட்ட நெரிசலைத் தவிர்ப்பதற்காக, கும்பகோணத்தில் இருந்து குறைவான நேரத்தில் அதிக அளவில் ரயில்கள் விடுவதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய இருக்கிறோம்" என்கிறார் அந்த அதிகாரி.









“மகாமக புண்ணிய தீர்த்தத்தில் நீராடினால் எண்ணியபடி பதவி கிடைக்கும்” என அருள் வாக்கு கூறியிருக்கிறார் - பிரபல ஜோதிடர் - திருஸ்ரீ- மகாமக - ஜகா ஜக - ஏடு ஏகாம்பரேஸ்வர சுவாமிகள். நம் அரசியல் வி.ஐ.பி.க்கள் எந்தத் தொந்தரவுமின்றி நீராடிவிட்டுவர, சில ‘மாறுவேட’ ஐடியாக்கள்!



**சுப்பிரமணிய சுவாமி :** “மதுரை இட்லி... மதுரை இட்லி” - என இட்லி விற்பவராக மாறுவேடமிட்டுச் செல்லலாம்.

**ஜி.கே. வாசன் :** (கோஷ்டி ஏதுமின்றி) வெற்றிலை, பாக்கு & பீடா விற்கும் வியாபாரியாகச் சென்றால் கண்டுபிடித்துவிடுவார்களா என்ன?

**நடராஜன் :** காவி உடை சகிதமாக, ‘ஆதீனம்’ கெட்-அப்பில், ருத்திராட்சக் கொட்டை, பக்திப் புத்தகங்கள் விற்பவராகச் சென்று வரலாம்.

# நீராட சில ஐடியாக்கள்!

**ராமதாஸ் :** ரஜினி ரசிகர்களின் ஆதரவோடு சென்றுவர ஏற்ற ஒரே கெட்-அப் ‘பாபா’ வேஷம்தான்.

**வை.கோ. :** புலிவேஷம் கட்டிக் கொண்டு, ஓர் ஆட்டமும் போட்டுவிட்டு, குளிரக்குளிர குளித்துவிட்டு வரலாம்.

**கிருஷ்ணசாமி :** சண்டியர் மீசை, கையில் அரிவாளுடன் இளநீர் விற்பவராக, எந்தச் சங்கடமும் இன்றிச் சென்று வரலாம்.

**இல. கணேசன் :** ‘அம்மா சரணம்’, ‘அம்மா அருள்’ போன்ற அம்மா பக்திப் பாடல் கேசட்டுகள் விற்பவராகப் போய் வரலாம்.

**இறுதியாகக் கிடைத்த தகவல் :** புண்ணிய தீர்த்தத்தில் நீராடினால் ஏதும் பதவி கிடைத்து விடுமோ என்ற பயத்தில் ரஜினி எந்தவித மாறுவேடத்திலும் வரப் போவதில்லை என, அவரின் ரசிகர் மன்ற வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

- முகில்





# தொழிலில் வெற்றிபெற வேண்டுமா?

## தொழில் வசியம்



அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திர நிபுணர் திரு. கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்களின் கருத்துகள்.

தொழில் வசியம் என்பது செய்கின்ற தொழிலில் வெற்றிபெற உதவும் விஞ்ஞானக் கலையாகும். தொழில் மட்டுமல்லாமல் தொழில் வசியத்தால் மனித வாழ்வில் உண்டாகும் அனைத்துப் பிரச்னைகளுக்கும் மிகநல்ல முறையில் தீர்வு காண முடியும்.

குறிப்பாக தொழில் முடக்கம், வியாபாரம் மந்தம், உத்தியோகத்தில் இடையூறுகள், திருமணத் தடை, குழந்தை பாக்கியம் இல்லாமை, மனக் குழப்பம், தீய சூனிய சக்திகளால் பாதிப்புகள், முன்னேற்றத் தடை, புகழ் இல்லாமை, எதிரி பயம், மேலும் எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்னைகளுக்கும் தொழில் வசியம், நியூமராலஜியால் மிக நல்ல முறையில் தீர்வு காணலாம்.

மளிகைக் கடைகள், தொழில் நிறுவனங்கள், ஹோட்டல்கள், இண்டஸ்ட்ரீஸ்கள், பள்ளி, கல்லூரிகள், பஸ், லாரி சர்வீஸ்கள், ஜவுளிக் கடைகள், பனியன் கம்பெனிகள், ஏற்றுமதி, இறக்குமதி நிறுவனங்கள், நூல் மில்கள், சினிமா தியேட்டர்கள், குடியிருக்கும் வீடுகள், மருத்துவ மனைகள், ஏஜென்சி நிறுவனங்கள், மேலும் உலகில் உள்ள அனைத்துத் தொழில்களுக்கும் தொழில் வசியம் செய்து கொண்டால், அத்தொழில் நன்கு வளர்ச்சியடைந்து மிகப்பெரிய லாபத்தைப் பெற்றுத் தரும். மக்கள் மத்தியில் நல்ல புகழைத் தரும். அரசு அதிகாரிகள், ஊழியர்கள், தனியார் நிறுவன அதிகாரிகள், ஊழியர்கள், தங்களின் பெயரில் தொழில் வசியம் செய்து கொண்டால், அவர்களின் பணியில், உத்தியோகத்தில் பாராட்டுக்கள், சிறப்புகள் உண்டாகும்.

தொழில் வசிய நியூமராலஜி என்பது பெயரை மாற்றாமல், இருக்கின்ற பெயரிலேயே வசியம் செய்வதாகும். பெயரில் தொழில் வசியம் செய்து கொண்டால், வாழ்வில் எடுக்கின்ற காரியங்கள் எல்லாம் வெற்றிமேல் வெற்றி பெறும். பணம், பதவி, புகழ் அனைத்தும் கிட்டும். செல்வ சுகத்துடன் பலர் போற்ற வளவாழ்வு வாழலாம்.

தொழில் வசியம் என்பது அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரத்தில் முக்கிய அங்கமாகும். இதில் நியூமராலஜி, நேமாலஜி, சைன், மேக்பவர், கிராபாலஜி, அஸ்ட்ராலஜி, பால்மிஸ்ட்ரி, பியூச்சராலஜி, ஆர்கோலஜி, பெயர் வசியம் என மொத்தம் 19 காரணிகள் உள்ளன. இவைகள் அனைத்தையும் நன்கு ஆய்வு செய்து தொழில் வசியம் செய்து கொண்டால், பரிபூரண அதிர்ஷ்டசாலிகள் ஆகலாம்.

ஆண், பெண் எந்தத் தேதியில் பிறந்தவர்களாக இருந்தாலும், அவர்கள் திருமணம் செய்து கொண்ட நாளின் கூட்டு எண் 2, 4, 5, 7, 8 வரும் நாளில் கண்டிப்பாகத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது (கூட்டு எண் என்பது திருமண நாளின் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண்ணாகும்). அப்படிச் செய்து கொண்டவர்களின் வாழ்வில் பலவிதமான இன்னல்களும், இடையூறுகளும், தோல்விகளும், கசப்புணர்ச்சிகளும், வீண் விரயங்களும், விரோதம் போன்ற கெட்ட சம்பவங்களே நடந்து கொண்டிருக்கும்.

இக்கஷ்டத்திலிருந்து அவர்கள் விடுபட அதிர்ஷ்ட நாளில் மறுமலர்ச்சித் திருமணம் என்னும் 'மறுமாங்கல்ய பூஜை' செய்து கொண்டால், குடும்ப வாழ்வில் எல்லா அதிர்ஷ்டங்களும் வந்து சேரும். தொழில் மேன்மை, செல்வச் செழிப்பு, புகழ், பணம், கீர்த்தி அனைத்தும் வந்து சேரும்.

தொழில் வசியம் செய்து கொண்டால், செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அதில் வெற்றிமேல் வெற்றி பெறலாம். இக்கலை பூரண விஞ்ஞானம் + தெய்வீக சக்திகளைக் கொண்டதாகும்.

உங்கள் வாழ்வில் வளம்பெற, வெற்றிபெற அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடரை உடனே வந்து சந்தியுங்கள்.

இவர் எழுதிய அற்புதமான புத்தகங்களை வாங்கிப் படியுங்கள்.

1. அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம் (தமிழ், English, தெலுங்கு) ரூ.300/- M.O. செய்யுங்கள். வெளி நாட்டினர் ரூ.1,000/- அனுப்புங்கள்.
2. வெற்றிக்கு வழி - ரூ. 1,050/- M.O. செய்யுங்கள். வெளி நாட்டினர் ரூ. 2,000/- அனுப்புங்கள்.

**உங்கள் வெற்றிக்கு வழி காட்டும் தொழில் வசிய மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**



நியூமராலஜி - நேமாலஜி - சைன - தொழில் வசியம்

அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திர நிபுணர்

## கே.ஆர். பிரபாகர் ராஜ் M.A.,

நல்லாந் தோட்டம்,
கணுவக்கரை (P.O) 638 459.
பு. புளியம்பட்டி (Via), கோவை (Dt.)
TAMIL NADU - INDIA. Ph:(04254) 287258.
Cell:(0) 94430 56366 (0) 98427 13516




வார விடுமுறை : புதன், வியாழன்

**BOOKS: அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம் Rs.300/-, வெற்றிக்கு வழி Rs.1,050/-**

Advt

பிப்ரவரி. 29 - 2004

# மினி கல்கி

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எஸ்.அசோக்

டாக்டர் எல்.மகாதேவன்

சவேரா ஹோட்டல்ஸ் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

ஓவியர் மருது

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்



# மகாமக மகிமை



அருள்மிகு ஆதி கும்பேசுவரர் அருள்மிகு மங்களாம்பிகை

# பாவமெல்லாம் பறந்தோடும்!

''கொஞ்சமா பாவம் பண்ணியிருக்கோம்? கங்கையிலே போய் கொட்டினாலும், குறையாதே''னு சலித்துக் கொள்கிறோம் இல்லையா? அந்த கங்கைக்கே ஒரு நாள் சலிப்பு வந்துடுச்சு.

''கூட்டம் கூட்டமா ஜனங்க பாவம் கழுவுறோம்னு வந்து நம்ம தண்ணிலே இறங்கிடறாங்க. அவங்க செஞ்ச வினை எல்லாம் சேர்ந்து நம்மக்கிட்டேயும் பாவமூட்டை ஏறிக்கிட்டேயிருக்கே. இதை எப்படிப் போக்கறதுன்னு'' மற்ற நதிகளோட கலந்து ஆலோசனை செஞ்சுதாம்.

''சரி, சிவபெருமான் கிட்டே போய் ஐடியா கேட்கலாம்''னு யமுனை சொன்னதாம். கங்கை, யமுனை, நர்மதை, சரஸ்வதி, காவேரி, கோதாவரி, துங்கபத்ரா, கிருஷ்ணா, சரயு ஆகிய ஒன்பது நதிகளும் இளம் கன்னிகைகள் வடிவத்தில் கைலாய மலைக்குப் போய் சிவபெருமான்கிட்டே முறையிட்டாங்களாம்.

''கவலைப்பட வேண்டாம் நதிப் பெண்களே! சிவ - வைணவத்தலமான கும்பகோணத்தில் மகாமகக் குளம் என்ற குளம் உள்ளது. பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை வருகின்ற மகாமக நாள் அன்று. அந்தக் குளத்துக்குப் போய் ஒரு முங்கு முங்கி, எழுந்து வாருங்கள். பாவக் கறைகள் பளிச்சுன்னு கரைஞ்சு போய், பவித்ரம் ஆயிடுவீங்க'' என்று யோசனை தந்தாராம் சிவபெருமான்.

''கும்பகோணமா? அது எங்கே இருக்குன்னு தெரியாது சாமி... நீங்களே வழிகாட்டிக் கூட்டிப் போயிடுங்கன்னா, புண்ணியமாப் போகும்'' என்று நதிக் கன்னிகைகள் கெஞ்ச, பரமசிவன் புனித ட்ரிப்புக்குத் தயாரானார்.

ரிஷபவாகனம் ஜம்மென்று வந்து நின்றது. பச்சை நிற மேனி பார்வதி தேவியுடன் ஒயிலாக ஏறி அமர, அவர்களைப் பின் தொடர்ந்தார்கள் நதி நங்கைகள்.

வழியில் காசி வர, அங்கே கொஞ்சம் இளைப்பாறி விட்டு, பாயிண்ட் டு பாயிண்ட் ரூட்டில் நேரே கும்பகோணம் வந்தடைந்தனர்.

கும்பகோணம், மகாமகக் குளத்தில் வட கரையில் சிவசக்தி அமர்ந்து கொள்ள, நவ கன்னிகைகளும் பிற தேவர்களும் மகாமகக் குளத்தில் நீராடி, பாவம் களைந்தனர்.

இது 'பவிஷ்யோத்ர புராணம்' விரிவாகச் சொல்லும் மகாமகக் கதை.



# அதாங்க... கும்பகோணம்!

திடுக்கி விட்டுத் தரையில் விழுந்தால் ஏதேனும் ஒரு கோயிலின் வாசலில் நமஸ்கரித்து எழுந்து விடலாம். ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்பது அரதப் பழசான பழமொழி. கும்பகோணத்தில் அதையே மாற்றிச் சொல்ல வேண்டும். கோயில் இல்லா சந்து பொந்துகளில் யாரும் குடியிருக்க வேண்டாம் என்று. ஊரைச் சுற்றிலும் அத்தனைக் கோயில்கள். கும்பகோணத்துக்கு உள்ளேயும் சரி, வெளியேயும் சரி, எந்தத் திசையிலிருந்து நிமிர்ந்து பார்த்தாலும் ஏதேனும் ஒரு கோபுரத்தை தரிசித்து விடலாம். அதில் அமைந்துள்ள கும்பங்களைக் கண்டு கொள்ளலாம். இதனால்தான் இதற்குப் பெயர் கும்பகோணமா?... இதுவல்லவாம்.

• ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர்



கும்பம் என்றால் குடம்; கோணம் என்றால் மூக்கு; மகா பிரளய காலத்தில் ஸ்ரீ பாணபுரீஸ்வரர் அமிர்தம் நிரம்பிய குடத்தினை நோக்கி அம்பு எய்கிறார். குடத்தின் வாய் சிதறி விழுந்த இடமே குடவாசல் என்றழைக்கப்படும் குடவாயில் ஆகும். அந்தக் குடம் வந்து தங்கிய இடம் கும்பகோணம். இத்தலத்திற்கு குடமூக்கு என்கிற பெயரும் உண்டு. ''குடமூக்கே குடமூக்கே என்பீராகின் கொடுவினைகள் தீர்ந்தரனைக் குறுகலாமே!'' என்கிறார் ஒப்பிலா அப்பர் பெருமான். வைஷ்ணவர்கள் இத்தலத்தை திருக்குடந்தை எனக் கூறுவர். அந்தக் குடத்திலிருந்து சிதறிய அமிர்தம்

முடிவில் வந்து தங்கிய இடங்களே மகாமகக் குளம், பொற்றாமரைக் குளம் ஆகும்.

## புனித நீராடல் – வழிபாடு!

மகாமகத் திருக்குளத்தில் நீராடும் முன்பாக, குளத்தின் வட கரையில் அமைந்துள்ள காசி விசுவநாதர் ஆலயத்தில் முதலில் சுவாமி தரிசனம் செய்தல் வேண்டும். பின்னர் வரிசைக் கிரமமாக அபிமுகேசுவரர், கௌதமேசுவரர், கும்பேசுவரர் ஆகிய மூர்த்திகளையும் பூஜித்து வழிபட வேண்டும். அதன் பின் குளத்தின் வட கரையில் உள்ள அரச மரத்தை வலம் வருதல், மரபும் முறையான வழிபாடும் ஆகும்.

மகாமகத் திருக்குளத்தின் அனைத்துத் தீர்த்தங்களிலும் நீராடி விட்டு, ஸ்ரீ சாரங்கபாணி கோயிலின் பின்புறம் அமைந்துள்ள பொற்றாமரைக் குளத்தில் நீராடல் வேண்டும். அதன் பின்னர் அங்கிருந்து சென்று காவிரி நதியின் சக்கரப் படித்துறையில் புனித நீராடல் நலம் பயக்கும்.

## பதினாறு மண்டபங்களும் – அதன் ஈஸ்வரர்களும்!

மகாமகத் திருக்குளத்தின் கரைகளைச் சுற்றிலும் பதினாறு மண்டபங்கள் அமைந்துள்ளன. அவற்றில் அமைந்துள்ள சிறு கோயில்களில் சிவலிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ளன. அவற்றின் திருநாமங்கள் :

- பிரம்ம தீர்த்தேஸ்வரர்.
- முகுந்தேஸ்வரர்.
- தனேஸ்வரர்.
- விருஷ்பேஸ்வரர்.
- பரணேஸ்வரர்.
- கோணேஸ்வரர்.
- பக்திஹேஸ்வரர்
- பைரவேஸ்வரர்
- அகத்தீஸ்வரர்
- வியாசேஸ்வரர்.
- உமை பாகேஸ்வரர்.
- நைருதீஸ்வரர்
- பிர்மேஸ்வரர்.
- கங்காதரேஸ்வரர்.



❒ முக்த தீர்த்தேஸ்வரர்.
❒ க்ஷேத்திர பாலேஸ்வரர்.

• ஸ்ரீ விசாலாட்சி அம்பாள் • ஸ்ரீ காசி விஸ்வநாதர்



**மகாமகக் குளத்திலுள்ள தீர்த்தங்களும் - அதற்குண்டான பலன்களும்!**

1. இந்திர தீர்த்தம் - வானுலக வாழ்வளிக்கும்.
2. அக்கினி தீர்த்தம் - பிரம்மஹத்தி நீங்கும்
3. யம தீர்த்தம் - யம பயமில்லை
4. நிருதி தீர்த்தம் - பூத, பிரேத, பைசாச குற்றம் நீங்கும்
5. வருண தீர்த்தம் - ஆயுள் விருத்தி உண்டாகும்.
6. வாயு தீர்த்தம் - பிணிகள் அகலும்
7. குபேர தீர்த்தம் - சகல செல்வங்களும் உண்டாகும்.
8. ஈசான தீர்த்தம் - சிவனடி சேர்க்கும்
9. பிரம்ம தீர்த்தம் - பிதுர்க்களை கரையேற்றும்
10. கங்கை தீர்த்தம் - கயிலாய பதவி அளிக்கும்
11. யமுனை தீர்த்தம் - பொன் விருத்தி உண்டாகும்.
12. கோதாவரி தீர்த்தம் - இஷ்ட சித்தி உண்டாகும்.
13. நருமதை தீர்த்தம் - திடகாத்திரம் உண்டாகும்.
14. சரசுவதி தீர்த்தம் - ஞானம் உண்டாகும்
15. காவிரி தீர்த்தம் - புருஷார்த்தங்களை நல்கும்

16. குமரி தீர்த்தம் - அசுவமேத பலன்களைக் கொடுக்கும்.

17. பயோடினி தீர்த்தம் - கோலாகலம் அளிக்கும்.

18. சரயு தீர்த்தம் - மனக்கவலை தீரும்.

19. அறுபத்தாறு கோடி தீர்த்தம் - துன்பம் நீங்க இன்பம் கைகூடும்.

மேற்கண்ட தீர்த்தங்களை ஒருவன் ஒரு முறை வணங்கினால், தேவர்கள் அனைவரையும் வணங்கிய புண்ணியம். ஒருமுறை வலம் வந்தால், பூமியை நூறு முறை வலம் வந்த புண்ணியம். ஒரு முறை நீராடினால், கங்கையில் நூறு வருடங்கள் வசித்த புண்ணியம். ஒருவன் மகாமகத்தன்று புனித நீராடுவதால் அவனைச் சார்ந்த மனைவி, மக்கள் முதலான ஏழு கோத்திரத்தினரின் பாவங்களும் நீங்கும் என்பது ஐதீகம்.



• ஆதிவராகப் பெருமாள்

### மகாமகத் தீர்த்தவாரியில் கலந்து கொள்ளும் திருக்கோயில்கள் :

- ❐ அருள்மிகு காசி விசுவநாத சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு ஆதிகும்பேசுவர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு நாகேசுவர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு சோமேசுவர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு கம்பட்ட விசுவநாத சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு காளகஸ்தீஸ்வர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு பாணபுரீஸ்வர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு அபிமுக்தீஸ்வர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு கௌதமேசுவர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு ஏகாம்பரேசுவர சுவாமி திருக்கோயில்
- ❐ அருள்மிகு கோடீஸ்வர சுவாமி திருக்கோயில்
- ❐ திருக்கலசநல்லூரர் அருள்மிகு அமிர்தகலச நாத சுவாமி திருக்கோயில்



# நதியில் விளையாடி..!



• சக்கரபாணி சுவாமி திருக்கோயில்

கும்பமேளா என்றழைக்கப்படும் இந்துக்களின் புனித நீராடல் திரு விழா, கங்கை நதிக்கரையின் ஹரித் துவாரில் பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒரு முறை நடைபெற்று வருகிறது.

கங்கை, யமுனை மற்றும் பூமிக் கடியில் ஓடி வருகின்ற சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளும் சங்கமிக்கும் இடம் திரிவேணி சங்கமம், அலகா பாத் நகரத்தில் அமைந்துள்ளது. மாக மேளா என்கிற புனித நீராடல் விழா இங்கு நடைபெறுகிறது. மார்கழி மாத அமாவாசையின் மறு தினத்திலிருந்து தை மாத அமாவாசை நாள் முடிய, இந்தப் புனித நீராடல் விழா திரிவேணி சங்கமத்தில் தொடர்ந்து நடைபெறுகிறது. இது ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்று வரும் புனித நீராடல் விழா ஆகும்.

ஆந்திராவில் கோதாவரி நதிக்கரை. குரு பகவான் சிம்ம ராசிக்கு வருகின்ற ஆண்டில் ஆவணி மாதத்தன்று, புனித நீராடல் விழா அங்கு நிகழ்கின்றது. இதற்கு ''கோதாவரி புஷ்கரம்'' எனப் பெயர். இதுவும் பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒரு முறை தான் வரும். (கடந்த ஆண்டு ஜூலை 23 அன்று ''கோதாவரி புஷ்கரம்' கொண்டாடப் பட்டுள்ளது).

தமிழகத்தில் கும்பகோணத்தில் பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒரு முறை மாசி மகத்தன்று, மகாமகக் குளத்தில் மகாமகத் தீர்த்தவாரி நடைபெறுகிறது. இதனைத் 'தென்னிந்திய கும்பமேளா' என்றும் குறிப்பிடுகின்றனர்.

பொதுவாக இந்தியா முழுவதும் இந்துக்களின் புனித நீராடல் என்பது பெரும்பாலும் நதிக்கரைகளில் மட்டுமே நடைபெற்று வருகிறது. கும்பகோணத்தில் மட்டுமே, புனித நீராடல் என்பது **மகாமகக் குளத்தில்** நடைபெற்று வருகிறது.

# ஸ்ரீஆதி கும்பேசுவரர்!

நகரின் மையப் பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில். சூரியன் உதிக்கும் திசையைப் பார்த்தவண்ணம் எழுந்துள்ளது. கருவறையில் வீற்றிருக்கும் லிங்க வடிவிலான மூலவர், ஆதி கும்பேசுவரர் சுயம்பு மூர்த்தியாகத் தோன்றியவர். உலக மகா பிரளயம் தோன்றியபோது, அமுத கலசம் ஒன்றானது தென் திசை நோக்கி வானில் மிதந்து வந்துள்ளது. திருக்குடந்தை நகர்மீது அந்த அமுத கலசமானது நகராது நின்றுவிட்டது. சிவபெருமான் வேடன் உருவில் பாணபுரீஸ்வரராக மாறி, பாணம் விட்டுக் குடத்தினை உடைக்கச் செய்கிறார். அதனுள் அமுதங்கலந்து பிசைந்துள்ள பாகங்களில் ஒரு பகுதி, லிங்க உருவமாக ஆகிறது. அச்சிவலிங்கத்தில் ஈசன் உறைந்து நின்று காட்சியளிக்கலானார். கும்பத்தினின்று லிங்க வடிவில் தோன்றிய ஈசுவரனே ஆதி கும்பேசுவரர்!

அன்னையானவள் ஈசனின் இருப்பிடம் நாடி வருகிறாள். பிரளய வேகத்தில் ஐம்பத்தியொரு தந்திர பீடங்களும் ஈசனின் அண்மையில் நெருங்கி வருகின்றன. அன்னையை பீடத்தின் அருகில் இடப்பாகத்தில் அமருமாறு ஆணையிடுகிறார் ஈசுவரன். அன்னை



யும் நீர் நிறைந்த கிண்டியுடன் ஈசன் அருகமர்ந்து, உலக மறுபிறப்புக்கு அர்க்கியம் செய்கிறாள். இவ்வாறு உலக அழிவைத் தவிர்த்து உய்வித்த உற்சாகப் பெருக்கில் படைப்புக் கடவுள் பிரம்மன், பீடம் ஏறிய அன்னையை மங்களேஸ்வரி என அழைக்கிறார். அவளே அன்னை ஸ்ரீ மங்களாம்பிகையாக பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகிறாள்.

உலகுக்கு ஆதி காரணமாகிய பராபரம் கும்பத்திலிருந்து தோன்றியதால், மூலவர் சுயம்பு மூர்த்தி ஆதி கும்பேசுவரர் என்றழைக்கப்படுகிறார். மேலும் சுவாமிக்கு அமுத கும்பேசுவரர், அமுதேசர் என்கிற திருநாமங்களும் உண்டு. அம்பாள் இங்கு அருள்மிகு மங்களாம்பிகையாக வீற்றிருக்கிறார்.

## ஸ்ரீ ஆதிவராகப் பெருமாள்

நாராயணன் வைகுண்டத்தில் இருந்த காலத்தில், சனகாதி முனிவர்கள் பகவானை தரிசிக்கும் பொருட்டு, வைகுண்டத்திற்கு வந்து சேர்ந்தனர். அப்போது அங்கு துவார பாலகர்களாக இருந்த



ஜெயன், விஜயன் ஆகிய இருவரும் பகவானை தரிசிக்கும் நேரம் இதுவல்ல எனக்கூறி, சனகாதி முனிவர்களைத் தடுத்து விட்டனர். அச்சமயத்தில் வைகுண்ட வாயிலைத் திறந்து கொண்டு, நாராயணன் யோகிகளுக்குத் தரிசனம் தர எழுந்தருளினார்.



யோகிகள் பகவானை தரிசித்து மகிழ்ந்தனர். பிறகு பெருமாளைத் தரிசிக்க இடையூறாக இருந்த துவார பாலகர்களை, பூமியில் சென்று அரக்கர்களாகப் பிறக்கும்படி சபித்தனர். இறைவனிடம் அந்தத் துவார பாலகர்கள் வேண்டுகின்றனர்.

அவர்களை சமாதானம் செய்த இறைவன், 'என் கையால் சாப விமோசனம் பெற்று, மீண்டும் என்னைத் திரும்ப வந்து அடைவீர்கள்' என்று கூறுகின்றார்.

அதன்படி அவர்கள் பூமியில் இரண்யாக்ஷன், இரண்யகசிபு என்ற பெயருடன் அரக்கர்களாகப் பிறந்தனர். இரண்யாக்ஷன் தவம் செய்து பூமியை பாதாளத்திற்குக் கொண்டு சென்றான்.

அப்போது தேவர்கள் பெருமாளை வேண்டினர். நாராயணன் அவர்களுக்கு ஆறுதல் கூறி, வராக (பன்றி) அவதாரம் எடுத்து, பாதாளத்திற்குச் சென்று, அந்த அரக்கனைக் கொன்று பூமியை மீட்டார். பின்னர் பூமாதேவியாகிய அம்புஜவல்லியைத் தனது இடது தொடையில் வைத்துக் கொண்டு, மாசி மாதம் பௌர்ணமியுடன் கூடிய மக நட்சத்திரத்தில், மகா புண்ணிய தீர்த்தமான வராக குளக்கரையில் பாதாளத்தில் இருந்து மேலே தோன்றினார்.

உலகில் முதலில் தோன்றிய இடம் வராகபுரி என்னும் கும்பகோணம் ஆகும்.



ஆதிவராகப் பெருமாள் கோயிலின் வராக குளத்தில் புனித நீராடினால், தீராத வியாதிகள் தீரும், நினைத்த காரியம் கைகூடும் என்பது ஐதீகம்.

# ஸ்ரீ ராமஸ்வாமி கோயில்!

இரகுநாத நாயக்கர் காலத்து (1600 - 1630) கோயில். தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களின் தலைமை அமைச்சராக இருந்தவர், கோவிந்த தீட்சிதர். அவரது பெரு



முயற்சியால் கட்டப்பட்ட கோயில் இது. ஆதி கும்பபேசுவரர் கோயிலுக்கு அருகிலும், பிரதான கடைவீதியின் தெற்குக் கோடியிலும் அமைந்துள்ளது. தாராசுரம் எனும் ஊரில் உள்ள குளத்தில் ராமர், சீதை மற்றும் தேவதா மூர்த்திகளின் விக்ரகங்களை, இரகுநாத நாயக்க மன்னர் கண்டெடுக்கிறார். அவற்றைக் கொண்டு வந்து இங்கு பிரதிஷ்டை செய்துள்ளதாகக் கூறப்படுகிறது.

எங்கும் ஸ்ரீராமர் கோதண்டபாணியாக நின்ற திருக்கோலத்தில் இருப்பது வழக்கம். இங்கு மட்டுமே பரத, லக்ஷ்மண, சத்ருக்ன, ஹனுமன் ஆகியோர் சூழ, சீதாதேவி சமேதரராக ஸ்ரீராமர், பட்டாபிஷேக அலங்கார உருவில் அழகின் அற்புத வடிவமாய்க் காட்சியளிக்கிறார். சன்னதி முன் நின்று காணக் கண் கோடி வேண்டும். பரதன்

வெண்குடை பிடிக்க, சத்ருக்னன் வெண் சாமரம் வீச, லட்சுமணன் ஸ்ரீராமரின் திருவில்லைத் தாங்கி நிற்க அனுமன் ஒரு கையில் வெள்ளி வீணையும், மறுகையில் இராமயணப் புத்தகமும் வைத்திருக்க, ஸ்ரீராமர் பட்டாபிஷேகக் கோலத்தில் கர்பக்கிருகத்தின் உள்ளே மூலவர்களாக சீதாபிராட்டியும் ஸ்ரீராமரும் ஒரே ஆசனத்தில் அமர்ந்திருந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கின்றனர். இதனைத் தென்னக அயோத்தி எனவும் குறிப்பிடுகின்றனர்.

## ஸ்ரீ சாரங்கபாணி கோயில்!

பெரியாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், நம்மாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் முதலான ஏழு ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருக்கோயில் இது. மூலவர் சயனத் திருக்கோலம் கொண்டவர். அதுவும் சற்றே வித்தியாசமாக. திருமழிசையாழ்வார் வேண்டுதலுக்கிணங்க உத்தான சயனம். அதாவது கொஞ்சமாய் சாய்ந்தெழுந்து, சட்டென எழுந்திருக்கும் வசமான சேவை. இத்தலத்துப் பெருமாளுக்கு ஆராவமுதாழ்வான் என்கிற சிறப்புப் பெயரும் உண்டு. இத்திருக்கோயிலின் பொற்றாமரைக் குளத்தில் அவதரித்த ஹேமரிஷியால், புத்திரியாக வளர்க்கப் பெறுகிறார் கோமளவல்லித் தாயார். அவரைத் திருமணம் புரிய வேண்டி எம்பெருமாள் வைகுண்டத்திலிருந்து இரதத்தில்வந்து கோமளவல்லித் தாயாரை மணம் செய்து கொண்டு, கோயில் கொண்டு எழுந்தருளியதாக புராணம் கூறுகிறது. கருவறையானது இரு புறங்களிலும் கல் யானை, மற்றும் குதிரையால் பூட்டப்பெற்ற இரத வடிவத்தில் இருப்பது, வேறு எந்த தலத்திலும் காண முடியாத சிறப்பு.



இத்தலத்தில் ஸ்ரீசாரங்கபாணி - கோமளவல்லித் தாயார் மட்டுமல்லாது, ஸ்ரீ





சக்ரபாணி, ஸ்ரீராமர், ஸ்ரீவராகர், ஸ்ரீகோபாலன், ஸ்ரீ வேதநாராயணன், ஸ்ரீவரதராஜன் போன்ற பல எம்பெருமான்கள் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளனர். மேலும் ஸ்ரீ ஆதி கும்பேஸ்வரர், ஸ்ரீநாகேஸ்வரர், ஸ்ரீசோமேஸ்வரர், ஸ்ரீ அபிமுகேஸ்வரர் முதலியவர்களும் எழுந்தருளியிருக்கின்றனர். இவர்கள் எல்லோருக்கும் தனித்தனியாக திருவிழாக்கள் வெகு விமரிசையாக நடைபெற்று வருகின்றன. விடையாற்று உத்சவங்களில் தன் திருத்தம்பி ஸ்ரீ சக்ரபாணியுடன், ஏக சிம்மாசனத்தில் நெருங்கி இருந்து ஸ்ரீ சாரங்கபாணி சேவை சாதிப்பது கண்கொள்ளாக் காட்சி. தன் வைபவங்களில் ஸ்ரீ சக்ர பாணி, ஸ்ரீராமர் இவர்களை அழைத்து, தன் கோவில் திட்டத்திலேயே அவர்களுடன் உத்சவம் கண்டருள்வது, வேறெங்கும் காணக் கிடைக்காத ஐஸ்வர்யத்தையும் தோழமையையும் புலப்படுத்தும்.

## ஸ்ரீ காசி விசுவநாதர் கோயில்!

மகாமகக் குளத்தின் வடகரையில் அமைந்துள்ள கோயில். இதன் தலச் சிறப்பு மிகவும் விசேடமானது. ஒருவன் செய்த பாவங்கள் ஒரு சிவத் தலத்தில் தங்குவதால் நீங்கும். அத்தகைய சிவத் தலத்திலேயே பாவம் செய்ய நேர்ந்தால் காசியில் நீராடி அங்கு வசிப்பதால் அப்பாவம்

நீங்கும். காசியில் செய்த பாவமானது கும்பகோணம் தலத்தில் காலூன்ற நீங்கும். கும்பகோணத்தில் செய்த பாவமானது கும்பகோணத்திலேயே கழியும். உலகப் புகழ் பெற்ற மகா மகமானது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை காசி விசுவநாதர் திருக்கோயில் அருகேயுள்ள மகாமகக் குளத்தில் நடைபெற்று வருகிறது. எனவே மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்று நிலைகளிலும் சிறப்பு வாய்ந்தது.

## புராணங்களில் மகாமகம்!

மகாமகத்தின் பெருமையை புராண நூல்கள் பலவும் விரிவாக விளக்கிக் கூறுகின்றன. பொதுவாக இந்து மதத்தில் பதினெட்டுப் புராணங்கள் மிகவும் விசேடமானவை. இவற்றில் சைவர்களும் வைஷ்ணவர்களும் ஒருமனதாய் ஒப்புக் கொள்ளக் கூடிய புராண நூல்கள் மிகச் சிலவே. அதில் ஒன்றுதான் ''பவிஷ்யோத்ர புராணம்''.

''யோ நரஹ் கும்பகோணே அஸ்மின்
க்ஷணார் த்தமபி திஷ்டதி
கரஸ்தம் தஸ்ய கைவல்யம் கிமுதான்யே விபூதய:''

''இந்த கும்பகோண க்ஷேத்திரத்தில் எந்த ஒரு மனிதன் க்ஷண நேரமாவது வசிக்கிறானோ, அவனுக்கு வைகுண்ட லோகமே உள்ளங்கை நெல்லிக்கனி போல ஆகிவிடும் பட்சத்தில் மற்ற ஐஸ்வர்யங்கள் எம்மாத்திரம்?'' எனச் சொல்கிறது பவிஷ்யோத்ர புராணம்.

''பூ மருவு கங்கை முதல் புனிதமாம்
பெருந் தீர்த்தம் மகாமகம்தான் ஆடுதற்கு
வந்து வழிபடும் கோயில்!''

என்று சேக்கிழார் மகாமகச் சிறப்பினை புகழ்ந்துரைத்துப் பேசுகிறார்.

''பன்னிரு வருடந்தொரு முறைபகரும் பண்பமர்
மடங்களில் துவங்கும்
மன்னிய நல்வாண் டளப்பவன் முறையா வந்திடும்போது
வானவரோ
டன்னிய மில்லா வயனுமே போர்திங் கழகுறச்
செய்விழாக் காண
முன்னிய பேறு பெறவருள் குடந்தை முதல்வி!''

என்று மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை கும்பகோண தல புராணத்தில், அன்னை மங்களாம்பிகையை குடந்தைக்கு முதல்வியாக்கி அகமகிழ்கிறார்.

கும்பகோணத்தின் மாட்சிமையை விளக்கும் விதமாக, காசி காண்டத்தில் மகரிஷிகள் இவ்





விதமாகப் பாடியுள்ளனர்.

"அன்ய க்ஷேத்ரே க்ருதம் பாபம் புண்ய க்ஷேத்ரே விநச்யதி
புண்ய க்ஷேத்ரே க்ருதம் பாபம் வாரணஸ்யாம் விநச்யதி
வாரணஸ்யாம் க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி
கும்பகோணே க்ருதம் பாபம் கும்பகோணே விநச்யதி!"

பாவங்களைச் செய்பவர்கள் புண்ணியத் தலங்களுக்குச் சென்று, அவற்றைப் போக்கிக் கொள்ள வேண்டும். அதுபோல புண்ணியத் தலங்களில் பாவங்கள் செய்தவர்கள் கூட, வாரணாசிக்கும், கும்பகோணத்துக்கும் சென்று பாவங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும். ஆனால் கும்பகோணத்தில் பாவம் செய்தவர்கள் மட்டும் வேறெங்கும் போக வேண்டாம். அவர்களது பாவங்களை கும்பகோணம் மகாமகக் குளத்திலேயே போக்கிக் கொள்ளலாம்.

காசியை விட நூறு மடங்கு அதிக பலனைத் தரக் கூடியது இந்த மகாமகம். கயைக்கு ஒப்பானது. பதினெட்டு திவ்ய தேசங்களையும் ஐந்து குரோசத்தலங்களையும் உள்ளடக்கிய பெரிய க்ஷேத்திரமாகிய கும்பகோணத்தை, தேவர்கள் அனைவரும் கொண்டாடுகிறார்கள். கும்பகோணத்துக்குச் சமமான க்ஷேத்திரம் இதுவரை இருந்ததில்லை. இனிமேலும் இருக்கப் போவதில்லை என்றே புராணங்கள் நமக்குக் கூறுகின்றன.

மகாமகக் குளத்தில் நீராடினால் மிகப் பலவகையான நன்மைகள் கிடைக்கும் என்று புராணங்கள் கூறுகின்றன. குறிப்பாக புத்திரப்பேறு, ஆட்சிப் பேறு ஆகிய நற்பலன்கள் விளையும் எனச் சொல்லப்படுகின்றது.

கட்டுரை, படங்கள் : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# குடந்தை சோதிடர்

குடகு நாட்டில் பிறந்து வளர்ந்த பொன்னி நதி கன்னிப் பருவம் கடந்ததும் தன் மணாளனாகிய சமுத்திரராஜனிடம் சென்றடைய விரும்பினாள். காடும் மேடும் கடந்து, பாறைகளையும் பள்ளங்களையும் தாண்டிக் கொண்டு விரைந்து சென்றாள். சமுத்திர ராஜனை நெருங்க நெருங்க, நாயகனைக் காணப் போகிறோம் என்ற குதூகலத்தினால் அவள் உள்ளம் விம்மி உடல் பூரித்தது. இன்னும் சற்றுத் தூரம் சென்றாள். காதலனை அணைத்துக் கொள்ளக் கரங்கள் இரண்டு உண்டாயின. இரு கரங்களை விரித்தவாறு தாவிப் பாய்ந்து சென்றாள். ஆனால் உள்ளத்தில் பொங்கிய ஆர்வமிகுதிக்கு இரு கரங்கள் போதுமென்று தோன்றவில்லை; அவளுடைய ஆசைக் கரங்கள் பத்து, இருபது, நூறு என்று வளர்ந்தன. அவ்வளவு கரங்களையும் ஆவலுடன் நீட்டிக் கொண்டு, சமுத்திரராஜனை அணுகினாள். இவ்விதம் ஆசைக் கணவனை அடைவதற்குச் சென்ற மணப் பெண்ணுக்குச் சோழ நாட்டுச் செவிலித் தாய்மார் செய்த அலங்காரங்கள் தான் என்ன? அடடா! எத்தனை அழகிய பச்சைப் புடைவைகளை உடுத்தினார்கள்? எப்படியெல்லாம் வண்ண மலர்களைச் சூட்டினார்கள்? எவ்விதமெல்லாம் பரிமள கந்தங்களைத் தூவினார்கள்? ஆஹா! இரு கரையிலும் வளர்ந்திருந்த புன்னை மரங்களும், கடம்ப மரங்களும், முத்து மலர்களையும் ரத்தினப் பூக்களையும் வாரிச் சொரிந்த அருமையை

அமரர் கல்கி



எவ்விதம் வர்ணிப்பது? தேவர்கள் பொழியும் பூமாரியும் இதற்கு இணையாகுமா?

பொன்னி நதியே! உன்னைப் பார்த்துக் களிப்படையாத கன்னிப் பெண் யார்தான் இருக்கமுடியும்! உன் மணக்கோல ஆடை அலங்காரங்களைக் கண்டு உள்ளம் பொங்காத மங்கை யார் இருக்க முடியும்?

கலியாணப் பெண்ணைச் சுற்றி ஊரிலுள்ள கன்னிப் பெண்கள் எல்லோரும் சூழ்ந்து கொள்வதுபோல், உன்னை நாடிப் பெண்கள் வந்து கூடுவதும் இயற்கையேயல்லவா!

பொன்னி தன் மணாளனைத் தழுவிக் கொள்ள ஆசையுடன் நீட்டும் பொற்கரங்களில் ஒன்றுக்கு அரிசிலாறு என்று பெயர்! காவேரிக்குத் தென் புறத்தில் மிக நெருக்கத்தில் அரிசிலாறு என்னும் அழகிய நதி அமைந்திருக்கிறது. அப்படி ஒரு நதி இருப்பது, சற்றுத் தூரத்தில் இருந்து வருகிறவர்களுக்குச் சொல்லித்தான் தெரிய வேண்டும். இரு புறமும் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் இனிய பசு மரங்கள் அப்படி அந்நதியை மறைத்துவிடுகின்றன. பிறந்தது முதல் அந்தப்புரத்தை விட்டு வெளியேறி அறியாத அரச குலக் கன்னியென்றே அரிசிலாற்றைச் சொல்லலாம். அந்தக் கன்னி நதியின் அழகுக்கு இந்த உலகில் உவமையே கிடையாது.

நல்லது; அந்தப்புரம் என்னும் எண்ணத்தை மறந்துவிட்டு நேயர்கள் நம்முடன் அரிசிலாற்றை நெருங்கி வருவார்களாக, சோலையாக நெருங்கி வளர்ந்திருந்த மரங்களுக்கிடையே புகுந்து வருவார்களாக! அடடா! இது என்ன அருமையான காட்சி? அழகுக்கு அழகு செய்வது போலும், அமுதத்துக்கு இனிப்பு ஊட்டுவது போலும் அல்லவா இருக்கிறது?

சித்திர விசித்திரமாகச் செய்த அன்ன வடிவமான வண்ணப் படகில் வீற்றிருக்கும் இந்த வனிதாமணிகள் யார்? அவர்களில் நடுநாயகமாக, நட்சத்திரங்களுக்கிடையில் பூரண சந்திரனைப்போல், ஏழுலகங்களையும் ஆளப் பிறந்த சக்கரவர்த்தினியைப்போல், காந்தியுடன் விளங்கும் இந்த நாரீமணி யார்? அவளுக்கு அருகில் கையில் வீணையுடன் வீற்றிருக்கும் காந்த சுந்தரி யார்? இனிய குரல்களில் இசை பாட, நதி வெள்ளத்துடன் கீத வெள்ளமும் கலந்து பெருகச் செய்து கொண்டு வரும் இந்தக் கந்தர்வப் பெண்கள் யார்? அவர்களில் ஒருத்தி மீனலோசனி; இன்னொருத்தி நீல லோசனி; ஒருத்தி தாமரை முகத்தாள்; இன்னொருத்தி கமல இதழ் நயனத்தாள்; ஆஹா! வீணையை மீட்டுகிறாளே, அவளுடைய காந்தளை ஒத்த விரல்கள் வீணைத் தந்திகளில் அங்கு மிங்கும் சஞ்சரிக்கும் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

அவர்கள் இசைக்கும் கீதத்தின் இனிமையைத்தான் என்ன என்று சொல்லுவது? அதைக் கேட்பதற்காக நதியின் வெள்ளம் கூட அல்லவா தன் ஓசையை நிறுத்தியிருக்கிறது? நதிக் கரை மரங்களில் வாழும் கிளிகளும் குயில்களும்கூட வாய் திறவா மோனத்தில் ஆழ்ந்திருக்கின்றனவே! மனிதர்களாய்ப் பிறந்தவர்கள், கேட்கும் செவி படைத்த பாக்கியசாலிகள் - அந்த அமுத கானத்தை கேட்டுப் பரவசம் அடைவதில் வியப்பு என்ன?

படகில் வரும் அப்பெண்கள் என்ன பாடுகிறார்கள் கேட்கலாம் :

மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப,
மணிப்பூ ஆடை அதுபோர்த்துக்
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்தாய் வாழி! காவேரி!
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்த எல்லாம் நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி

- பொன்னியின் செல்வன் முதல் பாகம்.

(அத்தியாயம் முழுதும் வாசிக்க www.kalkionline.com பார்க்கவும்.)

---

"மாப்பிள்ளை வரன், அரசியல்வாதியா?"

"ஏன்?"

"வரதட்சணையாக ஐந்து கேட்பார். மூன்று கொடுத்தாலும் ஏற்றுக் கொள்வார் என்கிறார்களே.."

- எஸ். மோகன்



# கோவிந்த தீட்சிதர்



சோழ மண்டலத்தை நாயக்க மன்னர்கள் ஆண்ட காலம் அது. தாத்தா செவ்வப்ப நாயக்கர் காலம் 1532 - 1580. அவர் மகன் அச்யுதப்ப நாயக்கர் காலம் 1560 முதல் 1614 வரை. அவர் பேரன் ரகுநாத நாயக்கர் காலம் 1600 முதல் 1634 வரைக்கும். இந்த மூன்று சந்ததி மன்னர்களுக்கும் முக்கிய ஆலோசகராகவும் தலைமை அமைச்சராகவும் இருந்தவர் கோவிந்த தீட்சிதர் (1515 - 1634).

"தஞ்சைப் பகுதிகளில் ஆலயங்களை விரிவுபடுத்திக் கட்டுதல், புதுப்பித்தல் போன்ற காரியங்களில் முழு மூச்சாய் ஈடுபட்டுச் செயல்பட்டவர் கோவிந்த தீட்சிதர். திருப்பாலத்துறை கோபுரக் கட்டுமானம், நெற்சேமிப்புக் கிடங்கு, ஆதி கும்பேஸ்வரர் கோயிலின் புதிய சன்னதிகள், இராஜகோபுரம், ஸ்ரீ இராமஸ்வாமி கோயில், புராதன வேத கல்விச் சாலை, ராஜா வேத காவ்ய பாடசாலை, இவையெல்லாம் இந்த தீட்சிதரின் முயற்சியில் வந்தவை. இதோடு மகாமகக் குளத்தைச் சுற்றி இருந்த மணல் சேற்றுப் பகுதிகளை நீக்கி, தூய்மைப்படுத்தி, குளத்தின் உள்ளே ஏறி இறங்க வசதியாக படித்துறைகளை அமைத்தவர். அதன் மேல் தளத்தில் மகாமகக் குளத்தைச் சுற்றிலும் பதினாறு மண்டபங்களைக் கட்டினார். அதன் நினைவாக ஒவ்வொன்றின் அருகிலேயும் பதினாறு சிவன் கோயில்களைச் சிறியதாக அழகுற வடிவமைத்தார். இன்று நாம் காணுகின்ற மகாமகக் குளத்தின் அழகுக்கும், கலை நேர்த்திக்கும், சுந்தர அழகில் சொக்க வைக்கும் சுற்று மண்டபங்களின் எழில் தோற்றத்துக்கும் முக்கியக் காரணமாய் அமைந்தவர் இந்த கோவிந்த தீட்சிதர்தான். அவரது இறைத் தொண்டிற்கு உடனிருந்து ஒத்துழைப்பு நல்கியவர் அவரது மனைவி நாகமாம்பாள்" என்கிறார் ஆன்மிகச் சொற்பொழிவாளரும், குடந்தை நகரப் பிரமுகரமான புலவர் இரா. பாலாஜி.



• பாலாஜி

இவரது திருவுருவச் சிலையை மகாமகக் குளத்தின் பதினாறு மண்டபங்களில் ஏதேனும் ஒன்றில் நிறுவ அரசு முன் வர வேண்டும் என்ற கோரிக்கையையும் வைக்கிறார் இவர்.

பட்டீஸ்வரம் கோயிலில் அம்மன் சன்னதிக்கு முன்புறமாக, தர்மபத்தினி நாகமாம்பாளுடன் கூடிய கோவிந்த தீட்சிதரின் முழு உருவச்சிலையை வடிவமைத்துள்ளனர். ஆதி கும்பேசுவரர் கோயிலில் அம்பாள் சன்னதிக்கு நேர் எதிர்ப்புறம் கோவிந்த தீட்சிதர் லிங்க உருவமாகவும், நாகமாம்பாள் சிலை வடிவிலும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர்.

இந்த கோவிந்த தீட்சதரின் மகள் வழி உறவில் வந்த தொடர் சந்ததியில் தோன்றியவரே, 'காஞ்சி மஹா ஸ்வாமிகள்' என்கிறார்கள்.

# 1½ லட்சம் இலை, 20 ஆயிரம் லிட்டர் தயிர், 390 சமையற்காரர்கள்!

இதெல்லாம் எதற்கு என்று தானே கேட்கிறீர்கள். ஒன்றரை லட்சம் பக்தர்களுக்கு அன்னதானம் போடுவதென்றால் சும்மாவா? நாக்கு 'உச்' கொட்டும் வகையில் பக்தர்களை அசத்தப் போகிறார் 'அறுசுவை அரசு' நடராஜன். ஆமாம். இவர்தான் இந்த மெகா சாப்பாட்டு களைப் படைக்கப் போகிறவர்!

"நான் ஏழெட்டு வயசுப் பையனாக இருந்தபோது மகாமகம் சமயத்தில், சங்கர மடத்தில் பக்தர்களுக்குச் சாப்பாடு போடுவார்கள். நான் தண்ணீர் கொடுப்பது, இலை எடுப்பது போன்ற வேலைகள் செய்து, தினமும் ஓர் அணா சம்பளம் வாங்கியவன். இந்த வருஷ மகாமகத்தின்போது சுமார் ஒண்ணரை லட்சம் பக்தர்களுக்குச் சாப்பாடு போடுகிற பொறுப்பை, காஞ்சிப் பெரியவர் எனக்கு வழங்கி இருப்பது நான் பெற்ற பேறு." என்கிறார் நடராஜன்!

பத்து நாள் மகாமகத்தில் மார்ச் ஆறாம் தேதி ரொம்ப விசேஷம். அன்றுதான் அதிக பட்சம் பக்தர்கள் வருவார்கள். மகாமகக் குளத்தில் நீராடி, கோவிலில் ஆண்டவனைத் தரிசித்து, சங்கர மடத்தில் பூஜையைப் பார்த்துவிட்டு, மடத்தில் சாப்பிடுவது மரபு. பெரும்





* அறுசுவை அரசு நடராஜன்

எண்ணிக்கையில் பக்தர்கள் திரளுவார்கள் என்பதால், இவ்வாண்டு, சண்முகா என்ஜினியரிங் கல்லூரி வளாகத்தில், உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

“காலை பத்தரை மணிக்கு ஆரம்பித்து, இருபது நிமிடத்துக்கு ஒரு பந்தி என்று, அடுத்தடுத்து பந்திகள் போட்டுக் கொண்டே இருப்போம். ஒரு பந்தியில் நாலாயிரம் பேர் வரை சாப்பிட முடியும். எப்படியும் குறைந்தது முப்பது பந்திகளுக்குச் சமைக்க வேண்டியிருக்கும். காலை பத்தரை மணிக்கு முதல் பந்தி போட வேண்டும் என்றால், இரவு பன்னிரண்டு மணிக்கெல்லாம் சமையல் வேலையை ஆரம்பிக்க வேண்டும். சுறுசுறுப்பாக வேலைகளை ஆரம்பித்தால்தான் முடியும்.

“சாதம், சாம்பார், ரசம், கறி, கூட்டு, பாயசம், மோர், ஊறுகாய். இதுதான் சாப்பாட்டுக்கான மெனு. பாரம்பரிய சாப்பாடு என்பதால், வாழைக்காய், பூசணி, பரங்கி, கொத்தவரை, வெண்டை, அவரைக்காய் என்று நாட்டுக் காய்களையே பயன்படுத்த வேண்டும். வெங்காயம் கூடாது.

“ஒன்றரை லட்சம் வாழை இலைகளுக்காக பல்வேறு ஊர்களிலும் ஏற்பாடு செய்திருக்கிறோம். தயிர் மட்டும் இருபதாயிரம் லிட்டர் தேவைப்படும். சமையலுக்கு முந்நூறு பேர்கள். உணவு பரிமாற ஐந்நூறு பேர். இலை எடுக்க, இன்ன பிறவேலைகளுக்கு முந்நூறு பேர் என்று ஏகப்பட்ட ஆள்பலம் தேவைப்படும் என்பதால், என்னிடமுள்ள ஊழியர்கள் தவிர, பல்வேறு ஊர்களிலும் உள்ள என் நளபாக நண்பர்களின் ஊழியர்களையும் வரவழைக்க, ஏற்பாடு செய்திருக்கிறோம்.

“பக்தர்கள் சௌகரியம் கருதி, சாப்பிட மேஜை, நாற்காலிகளுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.” என்கிறார் அறுசுவை அரசு.

- எஸ். சந்திரமௌலி



“நான் என்னோட ஆறு வயசுல முதல் மகாமகத்தைப் பாத் திருக்கேன். அந்தளைப் பெரிய கும்பல்லேயும் என்னோட பெரிய பாட்டனார் தோளில் ஏறிப் போனது, இப்ப வும் எனக்குப் பசு மையா நினைவில



• காமாட்சி அம்மாள்

# “பாம்பேக்காரன் சர்க்கஸ் போட்டான்!”



• ஜி.கே. கிருஷ்ணமூர்த்தி

நிக்குது. சின்னப் பையனா இருந்தப்ப, மகாமக வேடிக்கையெல்லாம் நல்லா ரசிச்சுப் பார்த்திருக் கேன். அந்த வயசுல என்ன தோணும் சொல்லுங்க? 1933 மகாமகத்தப்பதான் பாம்பேக்காரன் வந்து சர்க்கஸ் போட்டான். பாம் பேக்காரன் சர்க்கஸ்னா பெரிய விஷயம் அப்போ. நாங்க எல்லாம் அதிசயமாப் போய்ப் பார்ப்போம். கூண்டுக்குள்ளார சைக்கிள் விடுறது, நூறடி உயரத்துல நின்னு, ஒரு மனுசன் தன் மேலே பெட்ரோல் ஊத்திக் கொளுத்திவிட்டு அப்படியே தண்ணியில விழுறதுன்னு நிறைய சாகசமெல்லாம் பார்த்தோம். வயசானதுக்கப்புறம் அந்தக் கேளிக்கை, வேடிக்கை எல்லாம் மாறிப் போயி, அந்த எடத்துல பக்தி வந்து பவ்ய மாய் உட்கார்ந்திடுச்சு. மனுஷாளுக்கு வேறென்ன வேணும்? சொல்லுங்க” என்கிறார் குடந்தை யைச் சேர்ந்த கே.ஜி. கிருஷ்ணமூர்த்தி. இது இவருக்கு ஏழாவது மகாமகம்.



**கா**மாட்சி அம்மாளுக்கு இது எட்டாவது மகாமகம்!

"எனக்கு ரொம்பச் சின்ன வயசுலயே கல்யாணம் பண்ணி வெச்சுட்டாங்க. அந்த வருஷத்துலயே மகாமகம் வேற வந்துடுச்சு. அதுலேந்து ஒவ்வொரு மகாமகத்துக்கும் போயிருந்து இருபது கேணியிலயும் பூஜை பண்ணி, படிகளுக்கு கங்கா பூஜை செஞ்சு ஸ்நானம் முடிச்சுட்டுத்தான் வருவேன். காசிக்கு மூணு தடவை போயிட்டு வந்திருக்கேன். எனக்கு ரெண்டு பையன், ரெண்டு பொண்ணுங்க. மொத்தம் பதிமூன்று பேரப் பிள்ளைகள். இப்போ கொஞ்சம் எனக்கு நடை சரியா வரலை. இருந்தாலும் எப்படியும் மகாமகக் குளத்துக்குப் போயி ரெண்டு சொட்டுத் தண்ணீரை தலையில தெளிச்சுட்டாவது வந்துடணும்னு முடிவு பண்ணியிருக்கேன்'' என்கிறார் காமாட்சியம்மாள்.

* நாகரெத்திணம் அம்மாள்





* ராமச்சந்திர சாஸ்திரிகள்

"**நா**ன் பார்க்குற எட்டாவது மாமாங்கம் இது. நான் சின்னப்புள்ளையா இருக்கறப்ப, கிராமங்கள்லேர்ந்து மாட்டு வண்டி கட்டிகிட்டு வரிசை வரிசையா கிராமத்து ஆளுங்க மாமாங்கத்துக்கு வந்து குவிஞ்சிடுவாங்க. அவ்வளவு கும்பலா இருக்கும். தொடர்ந்து எட்டாவது மகாமகம் பார்க்கப் போறோங்கறது ஒரு கொடுப்பினைதானே?" என்கிறார் எஸ்.நாகரத்னம் அம்மாள்.

"**எ**ன் ஜென்மாவுல இந்தத் தொண்ணூறு வயசுல மகாமகக் குளம் தண்ணீர் இந்தளவுக்கு வற்றிப் போய் நான் பார்த்ததே இல்லை'' என்று வருத்தப்படுகிறார் ஜி.ஆர். ராமச்சந்திர சாஸ்திரிகள் (90). இவர் அ.தி.மு.க. எம்.எல்.ஏ. குடந்தை ராமனாதனின் அப்பா.

''கும்பகோணத்துல இருக்கற குளங்கள், கிணறுகள் எல்லாம் தண்ணீர் வற்றிப் போயிடுச்சு. ரெண்டு வருஷமா சரியா மழை இல்லேன்னா... வேறென்ன செய்யறது? ஒவ்வொரு மகாமகத்துலேயும் எவ்வளவு கூட்டம் திரண்டு வந்திருந்தாலும் சரி. அவரவர்கள் தாங்களே அமைதியாக ஒரு குறிப்பிட்ட இடங்களில் வந்து தங்கி, பக்தி சிரத்தையோட மகாமகக் குளத்துல புனித நீராடிட்டு, பொற்றாமரைக் குளம், காவிரி போன்றவற்றிலேயும் ஸ்நானம் பண்ணிட்டு ஊர் போய்ச் சேர்ந்திடுவாங்க. நான் சின்னப் பையனா இருந்தப்ப எல்லாம், கிராமத்து ஜனங்க சாப்பாட்டையும், துணி மணிகளையும் மூட்டையாக் கட்டித்தான் தூக்கிட்டு வருவாங்க. அப்ப நம்மகிட்ட துணிப்பை எல்லாம் கிடையாது. 1933க்குப் பின்னாலதான் இங்க வந்திருந்த வடநாட்டு யாத்ரீகர்களைப் பார்த்துட்டு, ஜோல்னாப் பையும், துணிப்பை நாகரிகமும் நமக்கு வந்து சேர்ந்திச்சுன்னா பார்த்துக்கங்க!''



# சிவன் விட்ட பாணம்!

"பாற்கடலைக் கடைந்து, அதில் உண்டான நஞ்சை சிவபெருமான் உண்டு, நீலகண்டர் என்ற பெயரைப் பெற்றார், என்பது எல்லோருக்கும் தெரியும். பாற்கடலைக் கடைந்தபோது அமிர்தம் தோன்றியவுடன் சிவன் அதனை ஒரு கலசத்தில் எடுத்து விநாயகரிடம் கொடுத்தார். அதனைப் பெற்ற விநாயகர் ஆனந்த நர்த்தனம் புரிந்தார். பின் அமிர்த கலசத்தினை மகாமகக் குளத்தின் நடுவில் தர்ப்பையை விரித்து வைத்துவிட்டு நீராடச் சென்றார். இதனைக் கண்ட சனி பகவான், காக உருவம் கொண்டு அந்தக் கலசத்தைச் சாய்த்து விட்டார். கலசத்திலிருந்த அமிர்தம் பன்னிரண்டு கிணறுகளிலும் பரவியது. மிஞ்சிய அமிர்த கலசத்தில் உள்ள அமிர்தத்தை, பாணம் விட்டு உடைத்தார் சிவன். பாணம் விட்ட இடத்தினை இன்றும் குடந்தையில் பாணாதுறை என அழைக்கிறார்கள். இதைப் போன்று பல புராணங்களில், பல விதமாக மகாமகக் குளம் குறித்து கருத்து உள்ளது" என்கிறார் சுவாமிமலை சிற்பக் கலைஞர் எஸ். கருணாநிதி ஸ்தபதி.

"நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் போக்குவரத்து வசதிகள் அதிகமாக இல்லாத காரணத்தால், மக்கள் பாத யாத்திரையாக வந்து மகாமகக் குளத்தில் நீராடிச் சென்றனர். பலவித போக்குவரத்து வசதிகள் இருந்தும், ஐந்து கி.மீ. தூரத்துக்கு முன்பே போக்குவரத்தினை நிறுத்தி விடுவதால், வயதானவர்கள் மற்றும் குழந்தைகள் மிகவும் கஷ்டப்படுவார்கள். ஒவ்வொரு மகாமகத்துக்கும் பக்தர்கள் கூட்டம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. இது மக்களின் பக்தி நிலை மேம்பட்டு இருப்பதையும், இந்து மதச் சடங்குகள் மீதான மக்களின் நம்பிக்கையையும் காட்டுகிறது" என்கிற கருணாநிதி ஸ்தபதி, முன்பெல்லாம் மகாமகத்திற்கு வருகைதரும் பக்தர்கள் அறுபடை வீடுகளில் ஒன்றான சுவாமிமலை, சுவாமிநாத சுவாமியை தரிசித்து, சிற்பக் கூடங்களையும் பார்வையிட்டுச் செல்வார்கள்" என்கிறார்!

"நான்கு மகாமகங்களுக்கு முன்னர் சுவாமிமலையில் ரெடிமேடாக விக்ரஹங்கள் தயாரித்து வைக்கப்படவில்லை. அன்றைய நாளில் சிற்பிகளின் எண்ணிக்கையும், விக்ரஹத் தயாரிப்பும் குறைவாக இருந்தன. பின்னர் பூம்புகார் விற்பனை நிலையம் மற்றும் உலோக விக்ரஹ உற்பத்தியாளர் சங்கம் துவக்கப்பட்டபின், விக்ரஹங்கள் அதிகமாக வார்க்கப்பட்டு, பல நாடுகளுக்கும் அனுப்பப்பட்டன. குடந்தையை ஒட்டி சுவாமிமலை இருப்பதால், விக்ரஹ சந்தைக்கு குடந்தையும் காரணமாக அமைந்துள்ளது" என்கிறார் இந்த ஸ்தபதி!

— கௌசி

படம்: மீடியா ராமு

### சிவாச்சாரியார்!

குடந்தையில் இருக்கும் சிவன் கோயில் அர்ச்சகர்களிலேயே, சிவஸ்ரீ இராமநாத சிவாச்சாரியாருக்கு ஒரு தனி பாக்கியம். இவர், மகாமகக் குளத்தில் தீர்த்தவாரியின்போது சங்கல்பம் செய்து வைப்பவர். 1992ன் போது மகாமகக் குளத்தில் சங்கல்பம் செய்து, இருபத்தியொரு கலசங்கள் வைத்து பூஜைகள் நடத்தி வைத்தவர். அப்போது வருகை தந்திருந்த தமிழக முதல்வர் ஜெயலலிதா மற்றும் அவரது தோழி சசிகலா ஆகியோருக்கு, மகாமகக் குளத்தின் புனித நீராடுதலுக்கு சுவாமி வழிபாடுகள் செய்தவர். இந்த மகாமகத்தன்றும் மகாமகக் குளத்தில் சங்கல்பம் செய்து, இருபத்தியோரு கலசங்கள் வைத்து பூஜைகள் நடத்த இருக்கிறார்.

# மகாமக பிட்ஸ்!

### அப்பவே பண்ணியிருக்கலாமே!

கடந்த ஓராண்டாகவே கோயில் முன்பாக உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்றிக் கொண்டிருக்கிறது குடந்தை நகராட்சி.

நகரின் மையப் பகுதியில் அமைந்திருக்கும், ஸ்ரீ சோமேஸ்வரர் கோயில் நெருக்கடியான பகுதி. அதன் இராஜகோபுர முகப்புக்கு வெளியே, முக்கியச் சாலையின் ஒரு பகுதியில் பத்துப் பதினைந்து ஆண்டுகளாக ஆக்கிரமிப்பில் இருந்து வந்த கடைகள் மற்றும் வீடுகளை, பொக்ளைன் எந்திரம் வைத்து, அகற்றித் தள்ளினர்.

"இந்த ஆக்கிரமிப்பு அகற்றல்னால பக்தர்களுக்கு விசாலமான பாதைகள் கிடைக்கும். போக்குவரத்துக்கு வசதியாக இருக்கும். 'மகாமகத்து'க்குன்னு இல்லாம, முன்னாலயே இந்த ஆக்கிரமிப்புகளை அகற்றியிருந்தா, இன்னும் நல்லா இருந்திருக்கும்" என்கிறார் ஒரு பக்தர்.

### ஹவுஸ் ஃபுல்

குடந்தையில் மொத்தம் பதிவு செய்யப்பட்ட லாட்ஜ்கள் முப்பத்திரண்டு. அவற்றில் உள்ள அறைகளில் முப்பது சதம் அரசுத் துறைக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. மீதம் உள்ள அறைகளில்தான் வெளியூர் பக்தர்கள் தங்க வேண்டும். அவையும் இப்போதே "ஹவுஸ் ஃபுல்!"

குடந்தையில் கல்யாண மண்டபங்கள் நூற்றியிரண்டு. அதில் தர்மசாலா மண்டபம் தவிர, மற்ற அனைத்தும் அரசுத் துறையினர் மற்றும் காவலர்கள் பயன்பாட்டுக்கு விடப்பட்டுள்ளன.



• அகற்றப்படும் ஆக்கிரமிப்புகள்

### நவகன்னியம்மன் தருகின்ற பலன்கள்!

மகாமகக் குளத்தின் அருகிலுள்ள காசி விசுவநாத சுவாமி திருக்கோயிலில் நவகன்னியம்மன் சன்னதி உள்ளது. கங்கை, யமுனை, நர்மதை, சரஸ்வதி, காவிரி, கோதாவரி, துங்கபத்ரா, கிருஷ்ணா, சரயு ஆகிய நதிக் கன்னிகைகள் அவை.

இதை வழிபடுவதால் உண்டாகும் பலன்கள்:

- கல்யாணம் ஆகாமல் இருக்கும் பெண்கள் ஸ்ரீ நவகன்னியம்மனுக்கு பன்னிரண்டு வெள்ளிக்கிழமைகள் விரதம்

இருந்து அர்ச்சனை செய்தால், அடுத்து அவர்கள் வீட்டில் 'டும் டும்'தான்!

- குழந்தை பாக்கியமில்லாதவர்கள் மகாமகப் பொங்கல் செய்து பன்னிரண்டு வெள்ளிக் கிழமைகள் விரதம் இருந்து வந்தால், குழந்தை பாக்கியம் உண்டாகி விடும்!





• இராமநாத சிவாச்சார்யார்

- மக நட்சத்திரத்தன்று மகாமகக் குளத்தை ஒன்பது முறை மாலையில் வலம் வந்து, ஸ்ரீ நவகன்னியம்மனுக்கு பாலாபிஷேகம் மற்றும் நெய் தீபம் ஏற்றி வழிபட்டால், கஷ்டங்கள் நீங்கி விடுமாம்.

பிரதி மாதம் மக நட்சத்திரத்தன்று நவகன்னியம்மனுக்கு சிறப்பு அபிஷேக ஆராதனை நடைபெற்று வருகிறது!

## தற்காலிகப் பேருந்து நிலையங்கள்

**செ**ன்ற மகாமகத்தின்போது குடந்தையிலிருந்து ஏழெட்டு கி.மீ.க்கு அப்பாலிருந்தே வாகனங்கள் நிறுத்தப்பட்டு விட்டன. பேருந்துகளிலிருந்து இறங்கி வந்த வெளியூர் பக்தர்கள், இதனால் மிகவும் அவஸ்தைக்கு ஆளாகியிருந்தனர். அதைத் தவிர்க்கும் பொருட்டு, இந்த மகாமகத்தின் போது குடந்தையைச் சுற்றிலும் மூன்று, நான்கு கி.மீ. தூரத்துக்குள் தற்காலிகப் பேருந்து நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

## இளம் மாமாங்கம்!

**கா**ல்குலேட்டர், கம்ப்யூட்டர் எல்லாம் கூட தப்புப் பண்ணலாம். உலகத்தில் தப்பே நடக்காத ஒரே விஷயம் காலம்தான். பூமி தன்னைச் சுத்திக்கறதும் சூரியனைச் சுத்தறதும் ஒரு செகண்ட் கூட மிஸ்ஸாகாம இருக்கறது மாதிரி, குரு, (சுக்கிரன்) சூரியனைச் சுற்றிவர 4332 நாட்கள் ஆகும். இது 12 வருஷத்துக்கு 51 நாள் குறைவு. இது சேர்ந்து சேர்ந்து ஒவ்வொரு சமயம் 11 வருஷங்கள்ல மாமாங்கம் வரும். இதை இள மாமாங்கம் என்பார்கள். 1529, 1600, 1683, 1778, 1861, 1956 வருஷத்திய மாமாங்கங்கள் இள மாமாங்கங்கள்.





• பிந்து சாதகன்

# சூப்பர் குக்கர்!

"நம்ம ஊரில் பொங்கல், தீபாவளி தள்ளுபடி, ஆடிக் கழிவு என்று வீட்டு உபயோகப் பொருள்களின் விற்பனை சூடு பறப்பது மாதிரி, வெளிநாடுகளில் கிறிஸ்து மஸ், அன்னையர் தினம், மற்றும் பரிசுகள் தினம் ஆகியவற்றின் போது, மக்கள் ஷாப் பிங் ஆர்கேட்களை முற்றுகையிடுவார்கள்" என்கிறார் பிந்து சாதகன்.

காளி காப்பர் பாட்டம் சமையல் பாத் திரங்கள், மற்றும் காளி பிரஷர் குக்கர் வியா பாரத்தில், கொடிகட்டிப் பறக்கும் கும்ப கோணம் காளி ஸ்டீல் மற்றும் என்ஜினீய ரிங் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் இவர்.

"எங்களது தயாரிப்பில் ஐம்பது சதவிகி தம் தான் நமது நாட்டில் விற்பனை செய்யப் படுகிறது. மற்றவை ஏற்றுமதி தான். வெளி நாடுகளுக்கு குக்கர்களை ஏற்றுமதி செய் வது என்பது சாதாரண விஷயமல்ல. தரம், மற்றும் பாதுகாப்பு அம்சங்கள் நூறு சதம் அவர்களுக்குத் திருப்தியளிக்க வேண் டும். பத்துக்கு மேற்பட்ட நாடுகளில் தரக்கட்டுப்பாடு அதிகாரிகள் எங்கள் தயாரிப்பை சூப்பர் என்று சொல்லி யிருக்கிறார்கள்" என்கிறார் பிந்து சாதகன்.

இவரது தாத்தா, கோபால ஐயர் கல்கத்தாவில் தாமஸ் குக் நிறுவனத் தில் உயர் அதிகாரியாகப் பணியாற் றிக் கொண்டிருந்தாராம். இதன் காரணமாக குடும்பத்தினர் கல்கத்தா காளியின் பக்தர்களாகிவிட, கோபால ஐயர் மகன் மோகன்தாஸ், தான் துவங்கிய நிறுவனத்துக்கு காளியின் பெயரை வைத்து விட்டார். வெளி நாடுகளில் காளி குக்கர் 'பீனிக்ஸ்' என்ற பெயரில் மார்க்கெட்டிங் செய் யப்படுகிறதாம்!

"நிறுவனம் துவங்கி அறுபத்தி யேழு வருடங்கள் ஆகிவிட்டன. காளி நிறுவன சமையல் பாத்திரங்கள் என்றால் ஒரு தனி மதிப்பு உண்டு. செட்டிநாட்டில் திருமண சீதனப் பொருள்களைப் பட்டியலிடும்போது, 'காளி பாத்திரங்கள்' என்று குறிப் பிட்டுச் சொல்லுவார்கள். நிறுவன வரலாற்றில் பெரிய திருப்பம் என்பது, காளி காப்பர் பாட்டம் சமையல் பாத்திரங் கள் தயாரிப்புதான். எவர்சில்வர் மற்றும் காப்பர் கலந்த பாத்திரத் தயாரிப்பு தொழில் நுட்பத்தை, 1974ம் ஆண்டிலேயே கண்டு பிடித்தவர் என் தந்தை. இதற்காகப் பல வருட ஆராய்ச்சிகளை மேற்கொண்டார். அவர், ஒரு எம்.ஐ.டி. பட்டதாரி கூட" என்கிறார் பிந்துசாதகன்.

காப்பர் பாட்டம் பாத்திரங்களுக்கான ஆராய்ச்சியை மோகன்தாஸ் துவக்கியது ஒரு சுவையான விஷயம்! "சூடா காப்பி கொண்டு வாங்க! அதைக் குடிச்ச பின்பு தான் தலைவலி போகும்' என்று ஒரு நாள் சொல்ல, 'வெண்கலத் தம்ளரில் காப்பி கொண்டு வந்திருக்கிறார் பணியாளர். ஆனால் சமையல் அறையிலிருந்து கொண்டு வருவதற்குள் சூடு தாங்காமல் தம்ளரை கீழே போட்டு விட்டார். பணியாளரைக் கோபித்துக் கொள்ளாமல் சிந்தனையைத் தூண்டி விட்டார் மோகன்தாஸ். உருவானின காப்பர் பாட்டம் பாத்திரங்கள்!

- ஸ்ரீநிவாசன்

படம் : மீடியா ராமு

# காவேரி ஓடம்தானே!



தி. ஜானகிராமன்

"சங்கீத நண்பர் ஏதோ பாட்டை முனகிக் கொண்டிருந்தார். எங்களுக்கு ஏற்பட்ட ஏக்கத்தில் 'நன்றாய்த்தான் பாடு மேன் ஐயா!' என்று கேட்டோம். பழைய பாட்டு என்றும், முழுவதும் சரியாக கவனத்திற்கு வரவில்லை என்றும் சொல்லிக் கொண்டே, அவர் முதல் சரணத்தை மட்டும் பாடினார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பாட்டி எதிர் வீட்டிலிருந்து "காவேரி ஓடம்தானே?" என்று கேட்டாள். உடனே எல்லோரும் விழுந்தடித்துக் கொண்டு எதிர்வீட்டுக்குச் சென்று, அந்தப் பாட்டியை பாட்டு முழுதும் பாடச் சொல்லி மன்றாடினோம். அந்த மூதாட்டிக்கும் உடனே முழுப்பாட்டும் நினைவில் வராவிட்டாலும், சில சரணங்களைத் திருப்பித் திருப்பிச் .சொல்லிக் கொண்டே முழுப் பாட்டையும் பாடினார். அது கப்பல் பாணியில் அமைந்தது. இரண்டு தலைமுறைகளுக்கு முன்பு, பெண்கள் சாதாரணமாகப் பாடுவார்களாம். பாட்டியிடம் கேட்டு, பாட்டு முழுவதையும் எழுதிக் கொண்டோம். காவேரியின் போக்கு முழுவதும் தலைக்காவேரியிலிருந்து, புகார் வரை கச்சிதமாக வர்ணிக்கப்பட்டிருந்தது:



**கப்பல்**

*அம்புயன் மால் தேடரிய திருவையாற்றில் நிதம் அறம் வளர்த்தாள்*
*அம்பிகைதன் அருளாலே பெருக்கம்*
*அணிந்து வரும் காவேரி*

**முடுகு**

*அம்பரம் தொடுசைய மலையில் நிலைபெற்று*
*அகத்திய மஹாமுனி கடத்தினில் உதித்து*
*அண்டர்புக ழும்பிரம்ம குண்டமதில் வந்து*
*அறியொணாப் பாதாள நெறியில் அலைந்து*
*திண்புவியி லேராம நாதபுரம் கூடி*
*திருவேண்டிச் சென்றுருத் திரர் அடியை நாடி*
*ஸ்ரீரங்கப் பட்டிணத் திருபால் திகழ்ந்து*
*ஸ்ரீகண்ட நரசிங்க புரமதில் இணைந்து*

*வம்புபெரு கும்பானைக் குத்திமலை துன்னி*
*மாதேவ புரம்சிவ சமுத்திரம் மன்னி*
*மாநிலத் துயரும் பவானியை அடுத்து*
*வாஞ்சை யுடனீரோடெ ரேஞ்சலூர் உற்று*

*முன்புகொடு முடிவந்து வேலூரரைச் சேர்ந்து*
*மோகனூர் கண்டு நெருலூ ரருகில் சார்ந்து*
*மோதிவரு கின்ற அமராவதியைத் தேக்கி*
*மூக்கூடல் மாயனூரத அயிலூரரைத் தாக்கி*

செம்பொன் வளரும் கிருஷ்ணராஜபுர
மண்டி
திருவேங்கி மலை கடம்பர் கோவில்
தண்டி
சிறுகுமணி முசிரி பாலத் துறையில்
வாய்ந்து
செய்யகுண சேகரமந் தணநல்லூர்
பார்த்து

பண்புபெருகும் திருச் செந்துறை மருங்கி
பார்புகழும் திருவாசி மாதலம் நெருங்கி
பரவுமிசை திருவரங் கேசரை வணங்கி
பகரும் உறையூர் திரிசிரபுரம் இணங்கி

அன்பு பெருகும் கஜாரண்யம் மதித்து
அகிலாண்டவல்லி நாயகனடி துதித்து
அருகுறும் தோகூர் கல்லணையிற்
பொருந்தி
அன்னமுதவும் கோயிலடியிற் திருந்தி

தென்புடனே ஐராவ தேச்வரம் மேவி
திருக்காட்டுப் பள்ளி சாத்துப்
பிள்ளையார் கோவில்
செப்புமக ராஜபுரம் கடுவெளியிற்
சென்று
தேச மகிழும் திருநெய்த்தான மதில்
நின்று

அன்புடன் திருவையாற்றப்பனைக்
கண்டு
அறம்வளர்த்தாள் உத்தரவு பெற்றுக்
கொண்டு
அரிய கணபதி அக்ராஹார மதில் ஊக்கி
ஆடுதுறை நோக்கிக் கபிஸ்தலம் விளக்கி

தன் பெருகுமர விந்தபுர மேவி நியாக
சமுத்ர முமையாள்புரம் நெருங்கி
நலமாக
சாமிமலை முருகனை யிறைஞ்சியுள்
மகிழ்ந்து
தரணிபுகழ் திருவலஞ்சுழியிற் புகுந்து

கும்பகோணம் கஞ்சனூர் திரிபுவனமும்
கூடியிடை மருதூரில் வாசஞ்செய்
தினமும்
குலவுமக ராஜபுரம் திருக்கோடிக் காவல்
குத்தாலம் மல்லியம் கொரநாடு தாவிச்

சம்பூரணமாக மாயூரத்தில் நண்ணி
ஜகதீசனைப் பணிந்து தியானம் பண்ணி
தன்பேர் விளங்கும் நகரத்தில்
மகிழ்ந்துள்ளம்
சங்கமும் வந்து கடல் கூடியது வெள்ளம்!
ஏலேலோ!

ஏதோ அபூர்வமான நாட்டுப் பாடல் பொக்கிஷம் கிடைத்த பெருமிதம் எங்களுக்கு. இந்தப் பாட்டு வேறு எவருக்கும் கிடைக்காது என்று நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனால் எங்களுடைய காவேரிப் பயணம் முடிவடைந்த மூன்று மாதங்களுக்குள், கும்பகோணத்தில் நடந்த மகாமகத்தின்போது, எழுத்தாளர் 'கரிச் சான்குஞ்சு' வெளியிட்ட 'மஹாமகம்' என்ற சிறு கையேட்டில், பாட்டு முழுதும் அச்சிடப் பட்டிருந்தது. அந்த நூலில் குடந்தை ஸ்தல, மூர்த்தி, தீர்த்த வரலாறு எல்லாம் அடங்கி யிருந்தது. பாடல் யாருடையது என்று மட்டும் தெரியவில்லை.

'கரிச்சான்குஞ்சு'வும் கர்ண பரம்பரையாகக் கேட்டதாகத்தான் குறிப்பிட்டிருந்தார். பாடலாசிரியர் தகவல் தெரியாத குறையை, பிரயாண முன்னோடியான 'உலகம் சுற்றும் தமிழன்' திரு. ஏ.கே. செட்டியார் அடுத்தபடி யாகத் தீர்த்து விட்டார். அவர் தொகுத்து வெளியிட்ட பழைய பயணக் கட்டுரைகள் அடங்கிய 'தமிழ்நாடு' என்ற நூலில், இந்தப் பாடல் 'காவிரித் திருநதிச் சிறப்பு' என்ற தலைப்பில், நன்றாகச் சீர் பிரித்து அச்சிடப் பெற்றுள்ளது. இதன் ஆசிரியர் திருநயம் கிருஷ்ண பாரதிகள் என்றும், பாடலின் மூலப் பெயர் 'திருவையாற்றுக் கப்பல்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார். 1902ஆம் ஆண்டு 'விவேக சிந்தாமணி'யில் பிரசுரமானது என்றும் விவர மான தகவல் கொடுத்திருக்கிறார்.

— தி. ஜானகிராமன் எழுதிய
'நடந்தாய் வாழி, காவேரி'யிலிருந்து...

— சாரு

''உங்க அம்மா ஊர்ல இருந்து வந்திருக் காங்களேன்னு வகை வகையா சமைச்சேன்... ஆனா அவங்க எதுவுமே சாப்பிடலைங்க!''
''என்னல்லாம் சமைச்சே சாந்தி?''
''காஞ்சிரங்காய் கூட்டு, வேப்பங்காய் பச்சடி, எட்டிக்காய் துவையல்...!''
- புளியரை கணேசன்



இருபத்திநான்கு லட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது மகாமகக் குளம். சுமார் ஆறரை ஏக்கர் பரப்பளவில், நீண்ட செவ்வக வடிவத்தில் அமையப் பெற்றுள்ளது மகாமகக் குளம்.

மகாமகக் குளத்தைத் தூர் வாரும் பணி நிறைவடைந்து, நாம் சென்றிருந்த போது குளத்தின் உள்ளே ஆற்று மணல் பரப்பும் வேலைகள் நடந்து கொண்டிருந்தது. நவநதிக் கன்னிகைகளின் தீர்த்தக் கிணறுகளும் தூர்வாரப்பட்டு, தூய்மைப்படுத்தப்பட்டுக் கொண்டிருந்தன.

மகாமக உற்சவத்தின் கொடியேற்ற தினமான பிப்ரவரி இருபத்தைந்தாம் தேதிக்குப் பின்னர், பத்து தினங்களும் (மார்ச் 6 மகாமகம்) புனித நீராடலாம் என்று ஸ்ரீ ஜயேந்திர ஸ்வாமிகள் தெரிவித்துள்ளார்கள். அதனால் வருகிற பிப்ரவரி 25ந் தேதி முதலே பக்தர்கள் நீராடத் தொடங்கி விடுவார்கள் என்பதால், குளத்திற்குப் பிப்ரவரி 25ந் தேதிக்கு முன்பாகவே தண்ணீர் நிரப்ப திட்டமிடப்பட்டுள்ளது. குளத்தின் தென் மேற்குப் பகுதியில், அரிசிலாற்றில் இருந்து வரும் வரத்துக் கால்வாய் மூலமாகவும், வடமேற்குப் பகுதியில் இருந்து நகராட்சிகளுக்குச் சொந்தமான மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டியில் இருந்தும் தண்ணீர் கொண்டு வந்து மகாமகக் குளத்தில் நிரப்பப்பட உள்ளது.



மகாமகக் குளம் மிக விசாலமானது. இதைச் சுற்றி பதினாறு அழகிய மண்டபங்கள் இருக்கின்றன. படியும், படித்துறைகளும் மிக அழகாக இருக்கும். ஒன்பது கிணறுகள் இருக்கின்றன. ஒவ்வொரு மண்டபத்திலும் லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

காசியில் இருப்பது போல் காசி விசுவநாதர் ஆலயமும் குளத்தின் வட கரையில் இருக்கிறது.

இந்தக் குளத்தில், பிரகஸ்பதி சிம்ம ராசியில் சஞ்சரிக்கும் மக நட்சத்திரத்தன்று, குளிப்பது பாபங்களை விலக்கி, பரிசுத்தம் அடைய உதவும்.

மகாமகத்தின் புகழ் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி முதலிய தமிழ்ப் பாசுரங்களில் சிறப்பாக உரைக்கப்பட்டுள்ளது. மகாமக தினத்தன்று, பற்பல மன்னர்களும், செல்வாக்குள்ள பெரியவர்களும், செல்வந்தர்களும் இங்கு வந்து நீராடி விட்டு, பல வகைகளில் அறப்பணிகளும் செய்திருக்கிறார்கள்.

பேராசிரியர்கள் வில்கிஸ், டாக்டர் பர்சனெல் தங்கள் சரித்திரக் குறிப்புகளில், விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்ட கிருஷ்ண தேவராய மன்னர் மகாமகத் திருவிழாவுக்கு வந்து மகாமகக் குளத்தில் நீராடியதாகக் குறிப்பிட்டிருக்கிறார்களாம்.

- எஸ்.வி.என்.

# மகாமகக் குளம்!



# கும்பேசர் குறவஞ்சி!

• தீபக் வெங்கடேஷ்




கலைவிழா இல்லாமல் மகாமகமா? தமிழக அரசின் கலை பண்பாட்டுத் துறையும், தென்னக கலை பண்பாட்டுத் துறையும் இணைந்து பத்து நாட்கள் இசை, நடனம், கிராமியப் பாடல் என்று அசத்தத் தயாராகிவிட்டன.

சாக்கோட்டையில் ஒன்றரைக் கோடி ரூபாய் செலவில் அமைக்கப்பட்டுள்ள புதிய கலையரங்கத்தில்தான் இந்தக் கலைவிழா நடக்கப்போகிறது.



வரும் இருபத்தாறாம் தேதியிலிருந்து ஆரம்பமாகும் கலைவிழாவில், டாக்டர் பத்மா சுப்ரமணியம், இராஜேஸ்வரி உள்பட கலைஞர்களின் கலை நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறதாம்!

இதில் குடந்தை வாசிகள் அதிகம் எதிர்பார்ப்பது, தீபக் வெங்கடேஷின் கும்பேசர் குறவஞ்சி நாட்டிய நாடகத்தை!

சும்மாவா? ஆதிகும்பேசர் பற்றிய பெருமையை நாட்டிய நாடகத்தில் சொல்லப் போகிறாரே!

"ஆதி கும்பேசர் மீது குடந்தை பாபநாச முதலியாரால் இயற்றப்பட்டதுதான், கும்பேசர் குறவஞ்சி! குறத்தி குறி கூறுதல் மாதிரியான டைப்தான். இதுல சொல்லப்பட்டிருக்கிற கதைகளும், கையாளப்பட்டிருக்கும் விஷயங்களும் சுகமானது" என்கிறார் தீபக்!

இராமபிரான் கும்பேசரை வணங்கி, இராவணனைக் கொல்ல வலிமை பெற்றது, ஆதிசேஷன் சேவை செய்து பூபாரத்தை ஒரு தலையில் சுமக்கும் வலிமையைப் பெற்றது, இந்திரன் பிள்ளைப் பேறு அடைந்தது, நவநதிகள் தம் பாவங்களைத் தீர்த்துக் கொண்டது, காசிபர் அரவாணித் தன்மை நீங்கியது போன்ற கதைகள் இந்த நாட்டிய நாடகத்தில் இடம் பெறுமாம்!

"நாட்டியம்தான் என் உயிர், மூச்சு எல்லாம்" என்கிற தீபக், சென்னை கலாக்ஷேத்ரா மாணவர்! பத்மா சுப்ரமணியத்துடன் இணைந்து காஞ்சிப்பெரியவர் நூற்றாண்டு விழாவையொட்டி நடந்த நாட்டிய நாடகமான, 'ஸ்ரீ குருவே நம' வில் பங்கேற்றிருக்கிறார்.



கடந்த பத்து வருஷமாக கும்பகோணத்தில் நாட்டியம் கற்றுக் கொடுக்கும் தீபக், சுமார் தொண்ணூறு மாணவர்களுக்குப் பரதம் பயிற்றுவிக்கிறார்.



# 'வேலை'யைத்

* பி. பிரகாசம்

**ப**தினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்திலும், கும்பகோணத்தில் வழக்கறிஞர் தொழிலில் கொடிகட்டிப் பறந்தவர் என். கிருஷ்ணசாமி ஐயங்கார்.

ஐயங்காரிடம் வரும் கட்சிக்காரர்களில் விவசாயிகள் கணிசமாக இருப்பார்கள். வறட்சிக் காலங்களில் அதிக வட்டிக்குப் பணம் வாங்கிவிட்டு, வட்டியைக் கூட திருப்பிக் கட்ட முடியாமல் சொத்துக்களை இழந்துவிட்டுக் கதறும் விவசாயிகள் உண்டு. இதே போல, நகர்ப்புறத்து நடுத்தர மக்கள் கல்யாணம் மற்றும் இதர அன்றாடச் செலவுகளுக்காகக் கஷ்டப்பட்டு, கடன் வாங்கி, திருப்பிக் கொடுக்க முடியாமல் அவஸ்தைப் பட்டு, தூக்கில் தொங்கியவர்களும் உண்டு.

"ஏம்பா இப்படிக் கடன் வாங்கி, கஷ்டப்படறீங்க" என்று சீறி விழுவார் ஐயங்கார். "வேற என்னங்க சாமி செய்யறது? யார் கடன் தருவார்கள்" என்று அவர்களும் சொல்வார்கள். அவர்கள் பதில், சிந்தனையைத் தூண்டிவிட, நண்பர்களுடன் கலந்தாலோசித்து. அவர்களிடம் பங்குத் தொகை வசூலித்தார். பிறந்தது கும்பகோணம் பரஸ்பர சகாய நிதி!

இன்று நிதிக்கு வயது நூற்றி ஒன்று. கிருஷ்ணசாமி ஐயங்கார் பலமாக அஸ்திவாரம் போட, தொடர்ந்து திருவேங்கடத்து ஐயங்கார், ஸ்ரீநிவாச ஐயங்கார், சம்பத் ஐயங்கார், ரங்கநாதன் செட்டியார் ஆகியோர் நிதிக்கு தலைவர்களாக விளங்கி, அற்புதமான கட்டுமானத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.

இந்தியாவிலேயே வேறெந்த நிதி நிறுவனத்திற்கும் கும்பகோணம் நிதி போன்ற எண்பதுக்கும் மேற்பட்ட கிளைகள் கிடையாது.

"அவர்களின் கடும் உழைப்பில் விளைந்த பயிரினை இன்று நாங்கள் கட்டிக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறோம். இன்றளவும் இந்த நிறுவனத்தில் நடைமுறைப்படுத்தப் பட்டு வருகிற வரவு செலவுக் கணக்கு முறைகள், இந்தப் பெரியவர்கள் காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்டவைதான்" என்கிறார் நிதியின் இப்போதையத் தலைவர் பி. பிரகாசம்!



*1995-96* காலகட்டங்களில் நிதி நிறுவனங்கள் கடும் சோதனையைச் சந்தித்தன. சில டுபாக்கூர் கம்பெனிகள் அதிக டெபாஸிட்டுக்களுக்கு ஆசைப்பட்டு, அதிக வட்டி தருவதாகச் சொல்லி, மக்கள் பணத்தை அபகரித்து திவாலாகி விட்டன. கும்பகோணம் நிதி போன்ற நிறுவனங்களின்

மேல் மக்கள் வைத்த மகத்தான நம்பிக்கை, அசைக்க முடியாதபடி இருந்தாலும், மத்திய அரசும், ரிசர்வ் வங்கியும் பல கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்தன. அதில் ஒன்று, நிதி நிறுவனம் பதிவு செய்யப்பட்ட மாவட்டத்தை தவிர, வேறெங்கும் கிளைகளை வைத்திருக்கக் கூடாது என்பது. இந்த அறிவிப்பு பெரிய இடியாக இறங்கியது பரஸ்பர நிதிக்கு. காரணம், மாவட்டத்துக்கு வெளியே ஏகப்பட்ட கிளைகளை ஏற்கெனவே திறந்திருந்தது. என்ன செய்வது என்று புரியாமல் தில்லிக்குச் சென்று கம்பெனி இலாக்கா செயலாளர் டி.எஸ்.கிருஷ்ணமூர்த்தி (இன்றையத் தலைமை தேர்தல் அதிகாரி) யைச் சந்தித்தார்கள் நிர்வாகிகள்.

"ஏற்கெனவே மாவட்டத்துக்கு வெளியே கிளைகளைத் திறந்திருக்கும் நிறுவனங்களுக்கு இந்த விதி பொருந்தாது என்று விதிவிலக்கை வாங்கிக் கொடுத்தவர் அவர்தான். அவருக்கு என்றும் நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம்" என்கிறார் பிரகாசம்.

"ரிசர்வ் வங்கி சொல்லியபடிதான் நாங்கள் டெபாஸிட்டுக்களுக்கு வட்டி கொடுக்கிறோம். நகைக் கடனுக்கு வட்டி மிகக் குறைவு. சேமிப்புக் கணக்கு, தொடர்கணக்கு என்று வங்கிப் பணிகளையும் செய்கிறோம். கும்பகோணம் மண்ணுக்கே உள்ள சிறப்புகளில் பரஸ்பர சகாய நிதியும் ஒன்றாகிவிட்டது" என்று சொல்லிப் பெருமைப்படுகிறார் பிரகாசம்.



• என்.கிருஷ்ணசாமி ஐயங்கார்

# ாட்டறாங்க!

''கும்பகோணம் வேலை'' என்றால் பொய் பித்தலாட்டம், மாற்றிப் பேசுதல், போட்டுக் கொடுத்தல் என்ற ஒரு பொருளை ஆக்ஸ்போர்டு அகராதியில் ஒரு காலத்தில் போட்டிருந்தார்களாம். ஆனால், போராடி அதை எடுத்தார், இதே மண்ணுக்குச் சொந்தக்காரரான ரைட் ஹானரபுள் - ஸ்ரீநிவாச சாஸ்திரியார். உண்மையில் நம்பிக்கை, நாணயம், நேர்மை நன்நடத்தை ஆகியவற்றுக்குத் தான் 'கும்பகோணம் வேலை' என்று சொல்லியிருக்க வேண்டும். காரணம், இவற்றிற்கு எடுத்துக்காட்டாக நடந்து கொண்டு வெற்றி நடை போடும் கும்பகோணம் பரஸ்பர சகாய நிதி - மகாமகத்துக்கு வரும் பக்தர்கள் கூட்டத்துக்கு அன்னதானம், மருத்துவ உதவி என்று பல திட்டங்களை வைத்திருக்கிறது.

**- கௌசி**

படங்கள் : **மீடியா ராமு**





# அந்த நாள்...

"போன மகாமகம் எப்படி?" என்று கேட்டால் "ஐய்யய்யோ... அந்த நாள் என்றுமே எங்களுக்கு மறக்க முடியாத நாளாகி விட்டது" என்று குடந்தை வாசிகள் ஒரே பதிலாகச் சொல்கிறார்கள்.

"கும்பேஸ்வரர் கோயில் அருகிலிருந்து என் எட்டு வயது மகளுடன் மகாமகக் குளத்துக்குக் கிளம்பினேன். ஒன்றரை கி.மீ. தூரத்தைக் கடந்து குளத்தின் வட கரையை அடைய, எனக்கு மூன்று மணி நேரம் பிடித்தது. குளத்தின் மூன்று கரைகளிலும் மற்றும் குளத்திற்குள்ளும் மக்கள் தலைகள்தான். மேற்குப் பக்கம் எங்கு நோக்கினும் போலீஸ். அரிசிலாற்றிலிருந்து வரும் தண்ணீர், குளத்தில் கொட்டும் பகுதியில் தடுப்பு போன்று கட்டியிருந்தார்கள். அங்கு என்ன நடக்கிறது என்றே தெரியவில்லை. முதல்வரும் அவர் தோழியும் அங்கு குளிப்பதாகச் சொன்னார் ஒருவர். திடீரென்று ஒரே கூச்சல்!

ஒரு கூட்டம் திபு, திபுவென ஓடிவர... அந்தத் தள்ளு முள்ளுவில் மகள் கீழே விழுந்து விட்டாள். அவளைத் தூக்க நான் முயல்கையில் என்னை ஒரு கூட்டம் கால்பந்து ஆட... ஐயோ, எனக்கு என்ன ஆயிற்று! பதினைந்து நிமிடம் கழித்து ஆம்புலன்ஸ் சைரன்ஸ் சவுண்ட் உய், உய் என்று ஒலித்துக் கொண்டு போவது மட்டும் கேட்டது. கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்து பார்த்தால், என் மகள் தூரத்தில் கிடந்தாள். பலர் சுற்றிலும் மரண அவஸ்தையில் துடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சி என்றுமே என் நெஞ்சை விட்டு அகலாது" என்கிறார் குடந்தையைச் சேர்ந்த வி.ஐ.பி. ஒருவர்.

இந்த வருடம் மகாமக ஏற்பாடுகளைக் கவனிக்க, கமிட்டி ஒன்று போடப்பட்டிருக்கிறது. அதில் நகரப் பிரமுகர்கள் பலர் இருக்கிறார்கள். இருந்தாலும் அவர்கள் ஆலோசனையை யாரும் கேட்பதில்லையாம். "எல்லாம் போலீஸ் ராஜ்யம்தான். நகரின் பெரும்பாலான திருமண மண்டபங்களையும், லாட்ஜுகளையும் போலீஸ் தன் வசம் எடுத்துக் கொண்டு விட்டது. மக்கள் எங்கே தங்குவார்கள்? இது தவிர 'மகாமகத்தன்று அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் தான் குளத்தில் 'முக்கு' போடவேண்டுமென்ற அவசியமில்லை. பத்து நாட்களுக்கு முன்பே முக்கு போடலாம்' என்று சில மடாதிபதிகள் மூலம் அறிவிப்பு செய்து, மகாமகத்தன்று கூட்டத்தைக் குறைக்கவும் ஏற்பாடு நடக்கிறது" என்ற அந்தப் புள்ளியிடம்... "இந்த மகாமகத்தன்று என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றோம். "உள்ளூர் கேபிளில் மகாமகத்தைப் பார்க்கலாம் என்றிருக்கிறேன்."

— ரமா



# இதுதான் பர்ஸ்ட்!

குடந்தை சோலையப்பன் தெரு சிறு பெண்களும், பையன்களும் மனசுக்குள் குறுகுறுப்புடன் காத்திருக்கின்றனர், தங்கள் ஊரின் மாமாங்கத் திருவிழாவின் மட்டற்ற வேடிக்கைகளைக் காண்பதற்காக. இருக்காதே பின்னே!

லெக்ஷ்மி, பத்மா, ஜெயஸ்ரீ, பாரதி ஆகியோர் பிறந்த சில வருடங்களில் வந்திருந்த 1992 மகாமகத்தைத் தங்கள் 'அனுபவக்' கணக்கில் சேர்த்துக் கொள்ள மறுத்து விடுகின்றனர். ஆனால், நான்கு வயது துறுதுறு அபர்ணா அப்படியில்லை. 'மார்ச் ஆறாம் தேதி மகாமகம் நாளைக்கே வந்திடுமா அங்கிள்?' என நம்மையும் எதிர்நோக்க வைத்து விடுகிறாள்.

"மத்த ஊர்ல மாதிரி வருசா வருசம் நடக்குற திருவிழா இது இல்லே, பன்னெண்டு வருஷத்துக்கு ஒரு தடவை நடக்குறதாலே ரொம்ப பிரம்மாண்டமாத்தான் இருக்கும். மகாமகக் குளத்துக்குப் பக்கத்தில நின்னுட்டாப் போதும். அன்னைக்கி ஒரு நாள்ல வந்து போற லட்சக்கணக்கான ஜனங்களை அந்த ஒரு எடத்துலேயே பார்த்துட்டு வந்துடலாம்!" என்கின்றனர் கோரஸாய் பையன்கள்!

பையன்களும், பெண்களும் தற்போது குஷியில் இருக்கின்றனர். வேறென்ன? பள்ளிக்கூட லீவுதான். கும்பகோணத்தில் பத்து மேனிலைப் பள்ளிகள், நான்கு உயர்நிலைப் பள்ளிகளுக்கு இருபது நாட்களும், இரண்டு கல்லூரிகளுக்குப் பத்து நாட்களும் 'திருவிழா விடுமுறை' விடப்பட்டுள்ளன!







# கரையைத் தொடுமா?

புனித நீராடுபவர்கள், ஐதீகப்படி முதலில் மகாமகக் குளம், இரண்டாவது பொற்றாமரைக் குளம், கடைசியாக காவிரியின் சக்கரப் படித்துறையில் நீராட வேண்டும். குறிப்பாக, குடந்தை நகரின் வைணவத் திருக்கோயில்களின் தீர்த்தவாரி நடைபெறுவதும் இங்கேதான்.

நாம் சென்றிந்தபோது சக்கரப் படித்துறையைச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தனர். மிக நீண்ட படித்துறைகளைக் கொண்டது அது. படித்துறையிலிருந்து சற்று விலகி, முன்னர் ஓடி வந்த காவிரித் தண்ணீர், தற்போது நீண்ட குட்டையாக முழங்கால் அளவுக்குத் தேங்கி நிற்பதைப் பார்க்க பரிதாபமாக இருக்கிறது.

மகாமகத்தினை முன்னிட்டு காவிரியின் சக்கரப் படித்துறையின் முதலிரண்டு படிக்கட்டுகளையாவது தொட்டுக் கொண்டு தண்ணீர் ஓடும், என்கிற எதிர்பார்ப்பும், நம்பிக்கையும் எல்லோருக்கும் இருக்கிறது!



# பிரம்மாண்ட போர்டு!

கும்பகோண நகர வாசிகளைக் கொஞ்ச நேரமாவது நின்று பார்க்க வைத்துவிடுகிறது இந்த போர்டு!

ஹோட்டல் ராயாஸ் வைத்திருக்கும் இந்த போர்டு ஐந்தடி உயரமும், முப்பத்துமூன்றடி நீளமும் கொண்டது.

மகாமகக் குளத்திலிருந்து சற்றுத் தள்ளியிருக்கும் இந்த ஹோட்டலின் ஐந்தாவது தளத்தில் வைக்கப்பட்டுள்ளது போர்டு.

"மஹா சுவாமிகளோடு அமையப் பெற்ற இந்த ஓவியத்தை வைத்ததில் மனம் குளிர்கிறேன்" என்கிறார் ராயா குருப் சேர்மன் கோவிந்தராஜன்.

இவர் குடந்தை சங்கர மடத்தில் அறுபத்தியெட்டு சங்கராச்சார்யார்களின் திருவுருவங்களைச் சுதைச் சிற்பமாக அமைத்தவர். குடந்தையில் எந்தக் கோயில் திருப்பணி என்றாலும், அங்கு ராயாவின் பங்கும் உண்டு.



* கோவிந்தராஜன்.

